ஸ்ரீ :

திருப்பாணாழ்வார் அருளிய

# அமலனாதிபிரான்

(முனிவாகன போகம் உட்பட மூன்று
விளக்கவுரைகளுடன் கூடியது)



ஸ்ரீ :

ஸ்ரீ ரங்கநாத பரப்ரம்மணே நம

திருப்பாணாழ்வார் அருளிய

# அமலனாதிபிரான்

(எளிய நடையில் எல்லா வியாக்கியானங்களுடன் கூடியது)

ஆராத அருளமுதம் பொதிந்த கோயில்
அம்புயத்தோன் அயோத்திமன்னர்க் களித்த கோயில்
தோலாத தனிவீரன் தொழுத கோயில்
துணையான வீடணர்க்குத் துணையாம் கோயில்
சேராத பயனெல்லாம் சேர்க்கும் கோயில்
செழுமறையின் முதலெழுத்துச் சேர்ந்த கோயில்
தீராத வினையனைத்தும் தீர்க்கும் கோயில்
திருவரங்க மெனத் திகழும் கோயில் தானே.

(தேசிகன்)

"This book is published with the financial
assistance of
TIRUMALA TIRUPATHI DEVASTHANAMS
under their scheme
AID TO PUBLISH RELIGIOUS BOOKS"

பதிப்பாசிரியர்
ஸ்ரீ வில்லிபுத்தூர் வித்வான்
R. கண்ணன் சுவாமி
சென்னை-600 011.

ஸ்ரீ :

# முன்னுரை

திருமகள் கொழுநனான பரம்பொருள் ஸ்ரீமந் நாராயணனது தன்மைகள் ஐந்து என்று வேதங்களும் உபநிடதங்களும் கூறுகின்றன. பர வ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சை என்று. தேவிமார்கள், அநந்தன் கருடன், சேனை முதலியார் முதலிய நித்யர்கள் முக்தர்கள் புடைசூழ திருமால் பரமபதத்தில் வீற்றிருக்கும் நிலை "பரம்" எனப்படும். திருப்பாற்கடலில் பாம்பணை மெத்தையில் பள்ளி கொண்டிருக்கும் நிலை "வ்யூஹம்" எனப்படும். வாமனன், இராமன், கண்ணன் ஆகிய மண்ணுலகில் தோன்றிய அவதாரங்கள் "விபவம்" எனப்படும். கறந்த பாலில் நெய்யைப் போல உலகமெங்கும் ஒவ்வொரு பொருளிலும் நீக்கமற மறைந்து நின்றிருக்கும் நிலை "அந்தர்யாமி" எனப்படும். திருவரங் [illegible] முதலிய திவ்யதேசங்களில் மூர்த்திகரித்து எழுந் [illegible] நிலை "அர்ச்சை" எனப்படும். இவ்வைந் திலுள் [illegible] ஆகிய நாம் எளிதில் காண்பதற்கும், கண்டு பற்றுவதற்கும் உள்ள நிலை அர்ச்சாவதாரமேயாகும். வையகத்தில் வேண்டுவார்க்கு வேண்டும் வரமெல்லாம் அளித்து வாழ்விப்பவர் அர்ச்சாமூர்த்தியே ஆவார். அப்பெருமான் மூர்த்திகரித்து எழுந்தருளியிருக்கக் கூடிய திவ்ய தேசங்கள் நூற்றெட்டு என்று வேதங்களும், இதிஹாஸ புராணங்களும் கூறுகின்றன. அவை ஆர்ஷம், மானுஷம், தைவதம், ஸ்வயம் வ்யக்தம் என்று நான்கு வகைப்படும். ரிஷிகளாலே ஸ்தாபிக்கப்பட்ட கோயில்கள் "ஆர்ஷம்" எனப்படும். மனிதர்களாலே நிறுவப்பட்ட கோயில்கள் "மானுஷம்" ஆகும். தேவதைகளாலே ஸ்தாபிக்கப்பட்டவை "தைவதம்" ஆகும். இவை மூன்று வகையிலுமின்றி, தான்தோன்றியாய் அநாதி காலமாக வேதங்களாலும் கொண்டாடப்படக் கூடிய க்ஷேத்திரங்கள் தான் "ஸ்வயம் வ்யக்தம்" என்று போற்றப்படும். அத்தகைய ஸ்வயம் வ்யக்த க்ஷேத்ரங்கள் எட்டு ஆகும். ஸ்ரீரங்கம், திருவேங்கடமலை, ஸ்ரீமுஷ்ணம், தோதாத்ரி (நாங்குநேரி என்கிற வானமாமலை), ஸாளக்ராமம், புஷ்கரம், நைமிசாரண்யம், பதரிகாச்ரமம் ஆகியவை ஆகும். இவ்வெட்டினுள்ளும் முதன்மையாகப் போற்றப்படுவது தென்னாடும், வடநாடும் தொழ நின்ற திருவரங்கம் திருப்பதியே ஆகும்.

பல்லாண்டுகளாக பிரம்மாவினாலே ஆராதிக்கப்பெற்ற ஸ்ரீரங்கநாதர் பின் இக்ஷ்வாகுவுக்கு ஸ்ரீரங்க விமானத்துடன் பிரமனால் அளிக்கப்பெற்றார். பின் தசரத குமாரனாகிய ஸ்ரீராமர் வரை ஆராதிக்கப்பட்ட மூர்த்தி, பட்டாபிஷேக சமயத்தில் ஸ்ரீராமனால் விபீஷணனுக்கு அன்பளிப்பாகக் கொடுக்கப்பெற்றார். அப் பெருமான்தான் இன்று

கொள்ளிடம் காவிரி இரண்டாற்றின் நடுவே பள்ளிகொண்டிருக்கிறார். ஸ்ரீரங்கத்தை "பூலோக வைகுண்டம்" என்றே பெரியோர்கள் கூறுவர். "காவேரீ விரஜா ஸேயம் வைகுண்டம் ரங்க மந்திரம்—ஸ வாசு தேவோ ரங்கேச : ப்ரத்யக்ஷம் பரமம் பதம் " என்று ஏழு மதிள்கள் சூழ்ந்ததாய், தெண்ணீர்ப் பொன்னி திரைக் கையால் அடிவருடப்பெற்ற தாய் அமைந்துள்ள மண்ணுலகில் நாம் காணும் பரம பதமே ஸ்ரீரங்கம் ஆகும். வைணவப் பெரியோர்களால் "பெரிய கோயில்" என்றும் "பெரிய பெருமாள்" என்றும் போற்றப்படும் ஏற்றமுடையதாகும். ஆசார்யர்கள் அனைவராலும், ஆழ்வார்கள் பதின்மராலும் போற்றப் பட்ட ஒரே மூர்த்தி ஸ்ரீரங்க நாதரே ஆவார். "பதின்மர் பரவும் பெரு மாள்" என்றே கொண்டாடப்படுபவர். இத்தலத்தில் மரணமடைந் தவர் மீண்டும் மண்ணுலகில் பிறவார் என்றே ஆதி சங்கரர் குறிப்பிடு கிறார். "இதம் ஹரி ரங்கம் த்யஜதாம் இஹாங்கம் புநர் ந சாங்கம் யதி சாங்கமேதி—பாணௌ ரதாங்கம் சயநே புஜங்கம் யாநே விஹங்கம் சரணேம்பு காங்கம்" என்று "நிரஞ்ஜந : பரமம் ஸாம்யம் உபைதி" என்கிறபடி வைகுந்தம் எய்துவர் என்கிறார். ஆழ்வார்கள் பத்துப் பேர்களாலும் போற்றப்பட்ட ஒரே பெருமாள் அரங்கநாதரே ஆவார். ஆழ்வார்கள் பதின்மருள்ளும் அவ்வரங்கனைக் கண்ட கண் களால் மற்றொன்றினைக் காணாமல் அப்பெருமானுடன் இரண்டறக் கலந்த ஒரே ஆழ்வார் திருப்பாணாழ்வாரே அவார். அவ்வாழ்வார் பெருமையை இனிக்காண்போம்.

பொன்னி நதி பாயும் சோழவள நாட்டின் தலைநகரம் உறை யூராகும். அதில் தர்ம வர்மா என்னும் மன்னவனுக்கு நீளாதேவியின் அம்சமாய் நிசுளா தேவி அவதரித்தாள். சோழ மன்னவன் அரங் கனுக்கு அவளைத் திருமணம் செய்து கொடுத்தான். அந்நகைய உறை யூரில் திருமாலின் திருமார்பில் உள்ள ஸ்ரீவத்ஸத்தின் அம்சமாய், தார்மதி வருடத்தில் கார்த்திகை மாதம் ரோகிணி நட்சத்திரத்தில் அவ தரித்தார் திருப்பாணாழ்வார். ஓர் அந்தணனது வயலிலே நெற் பயிர்க் கதிரிடையே குழந்தையாய்க் கிடந்தார். பிறவாது பிறந்த அத் தெய்வக் குழந்தையை அவ்வூரில் பஞ்சம சாதியில் பாணர் குலத்தில் பிறந்த ஒருவர் கண்டு நல்வினைப் பயனென்று மகிழ்ந்து எடுத்துக் கொண்டுபோய் வளர்த்தார். பாணர் குலத்திலே வளர்ந்ததனால் அம் மரபுக்கேற்ப யாழிலிசைத்துப் பாடுவதில் வல்லவராய் விளங்கினார். திருக் குறுங்குடியில் வாழ்ந்த நம்பாடுவானைப் போல அரங்கன் மீது ஆராத காதல் கொண்டு நாரதரைப் போல யாழை மீட்டு அனைத் துலகும் உருக மெய் மறந்து நாள்தோறும் பாடி வந்தார். தான் வளர்ந்த மரபுக்கேற்ப திருவரங்கத்துள் நுழையாது காவிரியின் திரு முகத்துறையில் நின்றும் தன்னையே மறந்து கல்லும் கரையப் பாடி

வந்தார். அரங்கனது மெல்லடி வருடக்கூடிய மலர்களும், "நாதா ! யக்ஷர்கள், கந்தர்வர்கள், நாரதர் முதலிய பலரது கானம் நானும் கேட்டிருக்கிறேன். பரமபதத்திலும் இத்தகைய கானம் கேட்டதில்லை. அன்று திருக்குறுங்குடியில் "கைசிகம்" என்னும் பண்ணிசைத்துப் பாடிய நம்பாடுவானைப் போல இப்பாணர் என்ன அழகாக தேவ ரீரைப் பற்றிப் பாடுகிறார். அவரது இசையை அருகில் இருத்திக் கேட்க ஆசைப்படுகிறேன். அன்று குசலவர்களின் கானத்தை அருகி லிருத்திக் கேட்டாற்போன்று, இன்று இப்பக்தனின் இன்னிசையை அருகிலிருந்தே இனிதே கேட்க வேண்டும்" என்று தெரிவித்தார். அரங்கன் நினைத்தால் ஆகாததும் உண்டோ !

லோக சாரங்க முனிவர் முதலிய வேதியர் பலர் எம்பெரு மானுக்குத் திருமஞ்சனத்துக்கு நீர் எடுக்கத் திருமுகத்துறைக்குவர அவ் விடத்தில் மெய்ம்மறந்து யாழிசைத்துக்கொண்டிருக்கும் பாணரைக் கண்டனர். தீண்டத்தகாதவர் என எண்ணி புனித நீர் எடுக்க வந்த அவர்கள் "எட்டிப் போ" எனப்பலகால் கூவினர். எம்பெருமானிடத் தில் லயித்து உலகையே மறந்து நிற்பவரான பாணர் விலகிச் செல்லாமல் நிற்க, ஆணவத்தினால் நிற்கிறான் என எண்ணி கல்லெடுத்து சரமாரியாக அடித்தார்கள். நினைவு வரப்பெற்ற பாணர் அபசாரப் பட்டு விட்டோமோ என வருந்திப் பதறி விலகிச் சென்றார். திருமஞ் சனத்துக்குப் புனித நீர் கொண்டு சென்ற வேதியர்களுக்கு அரங்கன் திருக்கோயில் மணிக்கதவம் திறக்கவில்லை. அபசாரம் ஏதும் நேர்ந்து விட்டதோ என அஞ்சிப் படுகாடு கிடக்க, லோக சாரங்க முனிவர் முதலிய பலரது கனவிலும் தோன்றி அரங்கன் அருளிச் செய்தார். "முனிவரே ! நமக்கு இசையெடுக்கும் அப்பாணரைத் தோளில் தூக்கிக்கொண்டு நம் கோயிலுக்கு அழைத்து வருக ; கோயிலில் உள்ள அனைத்துக் கொத்துக்களையும் (பரிவாரங்களையும்) அழைத்துச் செல்க" என நியமித்தார். அரங்கன் கட்டளைக்கிணங்க அனைவரும் சென்று திருப்பாணருக்கு அருள்பாடு இட, "அடியேன் அடிப்பாணன்: என் இருகால் கொடு திருவரங்க வீதியில் மிதிப்பேனோ" என அஞ்சி ஓடினார். அனைவரும் அரங்கன் நியமனத்தைச் சொல்லி ஓட வொட்டாமல் சூழ்ந்துகொண்டனர். பாணர் கீழே விழுந்து வணங்கி நின்றார். அதுசமயம் லோக சாரங்க முனிவர் ஆழ்வாரைத் தோளில் தூக்கிக்கொண்டு விட்டார். வேறு வழியின்றி விருப்பு வெறுப்பற்ற வராய், "எம்பெருமான் இட்ட வழக்கிலே நாம் இருக்கக் கடவோம்" என்று பரதந்த்ரராய், கை கூப்பியவண்ணம் இறைவனையே நினைந்து நைந்து உருகிச் சென்றார். உலகில் ஒருவரைத் தோளில் சுமந்து செல்லும்போது சுமப்பவரைக் காட்டிலும் ஏறிக்கொண்டு செல்லு பவருக்குத் தான் இன்பம் என்பர். ஆனால் இங்கு ஆழ்வாரோ இன்ப

துன்பம் ஏதுமின்றி மரக் கட்டைபோல் வீற்றிருக்கிறார். சுமந்து செல்லும் முனிவரோ எனின் எல்லையில்லாப் பேரின்பம் எய்துகிறார். எவ்வாறெனில் இராமாயணத்தில் முதல் நாள் போருக்கு இராவணன் வருகிறான். இராமன் தரையில் நின்று போர் புரிவதைக் கண்டு பொறாத அனுமன் தன் தோள் மீது ஏற்றிக் கொண்டார் அல்லவா. இராம பிரானைச் சுமந்து நின்ற அனுமன் எய்திய ஆநந்தத்தை ஆழ்வாரைச் சுமந்து சென்ற லோக சாரங்க முனிவர் எய்தினார், என்கிறார்கள் நம் பூர்வர்கள். லோக சாரங்க முனிவரை வாகனமாகக் கொண்டு கோயிலுக்கு வந்ததால் திருப்பாணாழ்வாருக்கு "முனி வாஹநர்" என்றும் பெயராயிற்று. அனைத்துப் பரிவாரங்களுடன் திருவரங்க வீதியை வலம் வந்து கோயிலுக்குள் நுழையும் போதே பெரிய பெருமாள் தன் வடிவழகை ஆழ்வாருக்குக் காட்டித் தருகிறார். மானஸிகமாக ஸாக்ஷாத்கரித்த ஆழ்வார், "அமலனாதி பிரான்" என்று பாசுரம் பாடத் தொடங்கி திருவடி முதல் திருமுடிவரை வருணித்து ஒன்பது பாடல்கள் அருளிச் செய்கிறார். தோளிலிருந்திறங்கி கருவறைக் குச்சென்ற ஆழ்வார் "கொண்டல் வண்ணனை" என்று தொடங்கி "என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்று முடித்தவுடன் பெரிய பெருமாளுடன் இரண்டறக் கலந்துவிடுகிறார். பாஞ்ச பௌதிகமான இந்த உடலோடேயே அரங்கனிடம் ஐக்யமானவர்கள் ஆண்டாளும் திருப்பாணாழ்வாருமே ஆவார்கள்.

இங்கு சைவத்திலே திருநாளைப் போவாரது வரலாறு நோக்கற்பாலது. நந்தனாரது கனவிலும் தில்லைவாழ் அந்தணர்களது கனவிலும் நடராசப் பெருமான் அருளிச் செய்கிறார்.

"இப்பிறவி போய்நீங்க எரியினிடை நீ மூழ்கி
முப்புரிநூல் மார்பருடன் முன்னணைவாய் என்ன
மொழிந்து
அப்பரிசே தில்லைவாழ் அந்தணருக்கும் எரிமைமிக்க
மெய்ப்பொரு ளானாரருளி அம்பலத்தே மேவினார்.

தில்லை வாழ் அந்தணர் தீக்குழி அமைத்து நந்தனாருக்கு உணர்த்தல்.

"ஐயரே ! அம்பலவர் அருளால்இப் பொழுதணைந்தோம்
வெய்யஅழல் அமைத்துமக்குத் தரவேண்டி" என விளம்ப
நையுமனத் திருத்தொண்டர் "நானுய்ந்தேன்" எனத்
தொழுதார்
தெய்வமறை முனிவர்களும் தீயமைத்த படிமொழிந்தார்

நந்தனார் தீக்குளித்துப் புண்ணியமுனி வடிவெடுத்து நடராசப் பெருமானுடன் இரண்டறக்கலந்தார்.

மறையவர்கள் மொழிந்ததற்பின் தென்திசையின்
மதி ற்புறத்துப்
பிறையுரிஞ்சும் திருவாயில் முன்னாகப் பின்னுதர்தம்
நிறையருளால் மறையவர்கள் நெருப்பமைத்த குழி எய்தி
இறையவர்தாள் மனங்கொண்டே எரிசூழ வலங்கொண்டார்

கைதொழுது நடமாடும் கழலுன்னி அழல் புக்கார்
எய்தியஅப் பொழுதின்கண் எரியின்கண் இம்மாயப்
பொய்த் தையும் உருவொழித்துப் புண்ணியமா முனிவடிவாய்
மெய்தி கழ்வெண் ணூரல்விளங்க வேணிமுடி கொண்டெ
ழுந்தார்

செந்தீமேல் எழும்பொழுது செம்மலர்மேல் வநதெழுந்த
அந்தணன்போல் தோன்றினார் அந்தரதுந் துபிநாதம்
வந்தெழுந்தது இருவிசும் பில் வானவர்கள் மகிழ்ந்
தார்த்துப்
பைந்துணர் மந்தாரத்தின் பனிமலர்மா ரிகள் பொழிந்தார்.
(பெரிய புராணம் 28—33)

ஆக நந்தனார் தீக்குளித்து இப்பூத உடலைநீத்து அந்தண உருவில் வந்து அம்பலவாணரது அடியிணையில் ஒன்றியதாகப் பெரிய புராணம் கூறுகிறது. திருப்பாணாழ்வார் இப்பூத உடலுடனேயே எம்பெருமானிடம் இரண்டறக்கலந்தார் என்கிறது வைணவம். ஐம் பூதங்களாலாய உடல் என்னாயிற்றெனில் ; கட்டிக் கற்பூரம் எரிந்தபின் சாம்பலோ கரியோ ஏதுமின்றி ஒளிமயமாய்க் கரைந்து விடுவது போலத் திருப்பாணாழ்வாரது உடலும் ஜோதிமயமாகிக் கரைந்து அரங்கனுடன் ஐக்கியமாகி விட்டது. அரங்கன் ஆழ்வாரது அழுக் குடம்பையும் உகப்போடு ஏற்றுக் கொண்டான் என்கிறது வைணவம். இதற்கு அருமையான இரண்டு எடுத்துக் காட்டுகள் தருகிறார்கள் வைணவப் பெரியோர்கள் :

(1) "வேர் சூடுமவர்கள் மண்பற்றுக் கழற்றாதாப்
போல ஞானியைத் திருமேனி யோடே உகக்கும்".
(பிள்ளை உலகாசிரியர்)

நறுமணம் மிக்க பல வண்ணப் பூக்கள் விரவித் தொடுக்கப் பெற்ற கதம்பத்தில் வெட்டி வேர் வைப்பதுண்டு ; அவ் வேர் மணம் மிக்கதாக இருக்கும். ஆனால் அதில் மண் நிரம்ப ஒட்டிக் கொண்டிருக்கும். அந்த மண்ணை நீரில் கழுவி அகற்றுவோமானால் அதன் மணமே போய் விடும். மண்ணிலல்லவோ மணம் உள்ளது; வெட்டி வேரின் மணத்

துக்காகத் தலையிலே சூடிக்கொள்ளுமவர்கள் அதிலுள்ள மண்ணையும் சேர்த்துத்தானே சூடுவர். அதுபோன்று ஆழ்வாரது பக்திமணத்தை நுகர விரும்பிய அரங்கன் அவ்வாழ்வாரது மண்ணுடம்பையும் உகப்போடு ஏற்றான் என்பது கருத்து.

(2) "இப்புவி தன்னில் இலங்கும் சாந்தம் அணிபவர்கள்
துஞ்சமாக அவையிருந்த பாண்டம் உடைத்தோ
சாத்துவார்கள் ?"
(வடிவழகிய நம்பிதாசர் அருளிய நம்மாழ்வார் பிரபந்தம்)

நறுமணம் மிக்க சந்தனம் பூசிக்கொள்ளுமவர்கள் அது வைக்கப் பட்டிருக்கும் பாத்திரத்தை உடைத்தெறிந்துவிட்டா பூசிக்கொள் வார்கள் ? சந்தனத்தை அது வைக்கப்பட்டிருக்கும் பாத்திரத்துடனேயே ஏற்குமாப் போலே ஞானியைத் திருமேனியோடே உகப்புடன் ஏற்கிறான் இறைவன்.

பிறப்பிடத்தை வைத்து இழிவாகக் கருதலாகாது என வலியுறுத்துகிறது வைணவம். திருமால் நரசிம்மமாகத் தூணில் அன்றோ பிறந்தார். வேணுவனநாதராகிய சிவபெருமான் மூங்கிலிலே பிறந்தார் என்பதற்காக வணங்காமல் உள்ளார்களா ? முருகப் பெருமான் நாணற் காட்டிலே பிறந்தார் என்பதற்காக ஒதுக்கிவிட்டார்களா ? திருமால் அடியார் எக்குலத்தவராயினும் பழைய குலம் தவிர்த்து "தொண்டக் குலத்தவர்" என்றே அழைக்கப்படுகிறார்கள்.

"அண்டக்குலத்துக் கதிபதியாகி அசுரர் இராக்கதரை
இண்டைக் குலத்தை எடுத்துக்களைந்த இருடீகேசன் தனக்கு
தொண்டக் குலத்திலுள்ளீர் வந்தடிதொழுது ஆயிர நாமம்
சொல்லி
பண்டைக் குலத்தைத் தவிர்ந்து பல்லாண்டு பல்லா
யிரத்தாண் டென் மினே."
(பெரியாழ்வார்—திருப் பல்லாண்டு—5)

எக்குலத்தவராயினும் எச்சாதியினராயினும் திருமாலடியார்கள் ஆவாரேயானால் தொண்டக் குலத்தவராகிறார். அதுவே தொழுகுலமாகும்.

"பழுதிலா ஒழுகலாற்றுப் பலசதுப் பேதிமார்கள்
இழிகுலத் தவர்க ளேனும் எம்மடியார் களாகில்
தொழுமினீர் கொடுமின் கொண்மின்என்று நின்னோடும்
ஒக்க
வழிபட அருளினாய்போல் மதிள்திரு அரங்கத்தானே"

"அமரவோ ரங்கமாறும் வேதமோர் நான்கும் ஓதி
தமர்களில் தலைவராய சாதி அந்தணர் களேலும்
நுமர்களைப் பழிப்பராகில் நொடிப்பதோர் அளவில் ஆங்கே
அவர்கள்தாம் புலையர்போலும் அரங்கமா நகருளானே"
(தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலை— 42—43)

ஆழ்வார்கள் பதின்மருக்குள்ளே மிகக் குறைந்த அளவு பத்தே பாசுரம் பாடி ஏற்றம் பெற்றவர் திருப்பாணாழ்வாரேயாவார். "குலங்களாய ஈரிரண்டில் ஒன்றிலும் பிறந்திலேன்" என்கிறார். ப்ரம்மனோ இவரைப் பரம பதத்திலுள்ள நித்ய சூரியாகவே கருதி ஏற்றுக்கொண்டார். நித்ய சூரிகள் நாலு வர்ணத்திற்கும் அப்பாற்பட்டவர்களல்லவா. இவர் பத்தே பாசுரம் பாடிய போதிலும் மற்ற எல்லா ஆழ்வார்களைக் காட்டிலும் தனிச் சிறப்புடையவர். தொண்டரடிப்பொடி ஆழ்வாரை நோக்க மற்ற ஆழ்வார்கள் எல்லாரையும் "இருகரையர்" என்பர். அதாவது பரவ்யூஹ விபவ அந்தர்யாமி நிலைகளிலும் ஊன்றி அர்ச்சாவதாரத்திலும் ஊன்றியிருப்பர்கள். தொண்டரடிப்பொடி ஆழ்வாரோ அர்ச்சாவதாரத்தைத் தவிர வேறெதிலும் கண் வைக்காதவர். அவ்வர்ச்சாவதாரத்திலும் திருவரங்கப் பெருமானைத் தவிர வேறு எவரையும் பாடாதவர். அரங்கனைப் பாடிய வாயால் குரங்கனை (காடும் வானரமும் வேடும் உடை வேங்கடவன்) பாட மாட்டேன் என்றிருந்தார். எனவே தொண்டரடிப்பொடியாரை நோக்கமற்ற ஆழ்வார்களை இருகரையர் என்பர் பெரியோர். அத் தொண்டரடிப்பொடியாரிலும் திருப்பாணருக்கு ஏற்றமென்னவென்றால்; தொண்டரடிப்பொடியார் அரங்கனைப் பாடுவதைத் தவிர "மற்றுமோர் தெய்வமுண்டே மதியிலா மானிடங்காள்" "கருட வாகனனும் நிற்க சேட்டை தன் மடியகத்துச் செல்வம் பார்த் திருக்கின்றீரே" என்று பிறர்க்கு உபதேசம் பண்ணுவது; "தலையறுப்புண்டும் சாகேன் சத்தியம் காண்மின் ஐயா!" "குறிப்பெனக்கு அடையுமாகில் கூடுமேல் தலையை, ஆங்கே அறுப்பதே கருமம் கண்டாய்" என்று சபதம் செய்வது, வீரவாதம் பேசுவது ஆகியன வாய்த்திகழ்ந்தார். திருப்பாணாழ்வாரோ எனின் வேறொன்றிலும் மலர்க்கண் வையாது பெரியபெருமாளையே அடிக்கும் தலைக்கும் அனுபவித்த பெருமை உடையவர். மற்ற ஆழ்வார்கள் எல்லாரும் தாங்கள் பாடிய பதிகங்களில் கடைசிப் பாடல் (நாமப் பாட்டு என்பர்) தங்கள் பெயரைப் பொறித்தல், பாட்டின் கணக்குச் சொல்லுதல், பலன் சொல்லுதல் இவ்வாறாக முடிப்பர். முதலாழ்வார்களும், திருமழிசைப் பிரானும் இவ்வாழ்வாரும் தான் அவ்வாறு செய்யாதவர்கள். முதல் எட்டுப் பாட்டாலே பெரிய பெருமாளைத் திருவடி முதல் வாய்வரை அவயவ அழகை அனுபவித்து, பின் ஒன்பதாவது பாட்டாலே சமுதாய

சோலையை வருணித்து, பத்தாவது பாட்டிலே "என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்று முடித்தார்.

திருப்பாணாழ்வார் தாம் பாடிய பத்துப்பாட்டுக்களுக்குள் அணு வைத்துளைத்து ஏழ்கடலைப் புகட்டியது போன்று அறியவேண்டிய அஞ்சு அர்த்தங்களையும் அறிவித்ததோடன்றி வேதத்தின் ஸாரத் தையே உணர்த்தியுள்ளார். "ஓங்காரப்ரபவா வேதா :, ப்ரணவாத் யா : ததா வேதா :" என்று ஓங்காரத்துக்குள்ளேயே மூன்று வேதங் களும் அடங்கியுள்ளன. அந்த ஓங்காரத்தை இவ்வாழ்வார் தமது பிரபந்தத்தில் மறைத்து வைத்துப் பேசியுளளார். மந்திரங்களை மறைத்துப் பேசுவதுதான் மரபு. "மந்திரத்தை மந்திரத்தால் மறவாது என்றும் வாழுதியேல் வாழலாம் மடநெஞ்சமே" என்று திருமங்கை ஆழ்வாரும், "மொய்த்த வல்வினையுள்நின்ற மூன்றெழுத்துடைய பேர்" என்று தொண்டரடிப்பொடியாரும், "மூன்றெழுத் ததனை மூன் றெழுத்ததனால மூன்றெழுத்தாக்கி" என்று பெரியாழ்வாரும் பணித் துள்ளார். நம்மாழ்வார், திருவாய்மொழி முதற் பாட்டில் "உயர்வற, மயர்வற, அயர்வறும்" என்னும் முதல் மூன்று அடிகளில் ஓங்காரத்தை புகுத்து வைத்துப் பேசுகிறார். ஆதி சங்கரர் தமது ஷட்பதி ஸ்தோத் திரத்தில் முதல் மூன்று சுலோகங்களின் முதல் எழுத்துக்களாக ஓங் காரத்தை அமைத்துள்ளார். "அவிநயம் அபநய விஷ்ணோ !, உத்த்ருத நக நகபித்னுஜ; மத்ஸ்யாதி பிரவதாரை :" என்று பாடியுள்ளார். திருப்பாணரது முதல் மூன்று பாடல்களின் துவக்கத்தைப் பார்த்தால் அகார உகார மகாரங்களின் சேர்க்கையாகிய ஓங்காரம் புலப்படும். "அமலனாதிபிரான்; உவந்த உள்ளத்தனாய்; மந்திபாய் வடவேங்கடம்" என்று ஓங்காரத்தை விவரித்துள்ளார். மேலும் ஒரு தத்துவத்தை இவ் வாழ்வார் உணர்த்துவதாகவும் வைணவப் பேரறிஞர்கள் கூறுவர். ஓங்காரத்தின் உட்பொருளாகிய திருமாலே பரம்பொருள் என்பதை உணர்த்தினார். "ப்ராப்யம்" (அடையப்படும் பொருள்) அவனே என்பதனை முதல் மூன்று பாட்டுகளினால் உணத்தினார். நான்கா வது பாட்டாகிய "ச" என்பதனால் (உம்மையினால்) ப்ராப்யமும் அவனே என உணர்த்தி மேல் ஐந்து, ஆறு, ஏழு பாடல்கள் மூலம் "பா, து, கை" என்று பிராபகத்தை (அடைவிக்கும் உபாயத்தை) உணர்த்தினார். திருவரங்கப் பெருமானாகிய பரம்பொருளை அடை வதற்கு உபாயம் அவனது பாது கைகளே என்பது இதனால் பெறப் பட்ட கருத்தாகும். இவ்வளவு உயர்ந்த கருத்துக்களைப் பத்துப் பாடல் களுக்குள் கூறியுள்ளார் என்பதனால் தான் வேதாந்த தேசிகர், ஆழ் வார்கள் பன்னிருவருக்குள்ளே இவ்வாழ்வாரது பிரபந்தத்துக்குத் தான் "முனிவாகன போகம்" என்ற பெயரில் வியாக்கியானம் அருளி அதனை 28-வது ரகசிய கிரந்தமாகச் சேர்த்துள்ளார். அத்துடன்

நில்லாது பகவத் த்யான சோபானம்" என்ற பட மொழி தோத்திர நூலும் அருளியுள்ளார். இப்பிரபந்தத்தில் பரம்பொருளை அடைவதற்கு உபாயம் அவனது பாதுகையே என்று குறிப்பிடப் பெற்றுள்ள தால் ஸ்ரீரங்கநாதனது பாதுகையைக் குறித்து நம் நிகமாந்த குரு பாதுகா ஸஹஸ்ரமே அருளிச் செய்தார் போலும். வேதாந்தாசார்யருக்கு ஆராத்யரான ஆழ்வாரும் திருப்பாணரே என்று பெரியோர்கள் பணிப்பர்.

இத்தகைய சிறப்புவாய்ந்த திருப்பாணாழ்வார் அருளிய பிரபந்தமாகிய அமலனாதிபிரானுக்கு பாஷ்யம் தேஷ்யும் கலவலுமாக மூவர் உரை எழுதியுள்ளனர். பெரியவாச்சான் பிள்ளை, அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், வேதாந்த தேசிகர் ஆகியோர் ஆவர். இவை மணிப்ரவாள நடையில் உள்ளன. தமிழும், வடமொழியும், ஸம்ப்ரதாய வார்த்தைகளும் (வைணவ மரபுச் சொற்கள்) கலந்த நிலையில் உள்ளன. தமிழும் வடமொழியும் நன்கு கற்றுத் தேர்ந்து மரபுப்படி ஆசார்யனிடம் பாடம் கேட்டால்தான் பொருள் புரிந்து கொள்ள முடியும் என்கிற நிலையில் உள்ளன. இக்காலத்தவர்கள் பலருக்கு இத்தகைய அருமையான பொக்கிஷத்தை எளிதில் புரிந்துகொள்ள முடியவில்லையே என்ற மனக்குறை உள்ளது. பெரிய பெருமாள் திருவருளாலும், ஆசார்யானுக்ரஹத்தாலும் இந்த வியாக்கியானங்களை எளிய தமிழில் எழுதி எல்லாருக்கும் புரியத்தக்க வகையில் ஆக்க வேண்டும் என்ற ஸாஹஸமான காரியத்தில் அடியேன் இறங்கி உள்ளேன். காலஞ் சென்ற திருமலை திருப்பதி ஸ்ரீமத் ஸ்ரீரங்க ராமானுஜ பெரிய ஜீயர் ஸ்வாமி திருவடிவாரத்தில் இருந்து கேட்ட பலத்தாலும், இருபத்தைந்தாண்டுகள் காலக்ஷேபம் பண்ணிவரும் அனுபவத்தாலும், எளியேனது சிற்றறிவிற்கு ஏற்றவகையில் என்னால் இயன்றவரை எளிய தமிழில் எழுதியுள்ளேன். பெரியவாச்சான் பிள்ளையும், அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் அருளிய வியாக்கியானங்களைச் சிறிதும் கருத்துப் பிறழாமல் இந்த விளக்கவுரை எழுதப்பெற்றுள்ளது. முன்னோர்கள் மொழிந்ததைத் தவிர எளியேனது கற்பனை ஏதும் கிடையாது. இதில் சொற்பிழையோ கருத்துப் பிழையோ இருக்குமேல் அடியேனது அறியாமையினால் நேர்ந்தது என மன்னிப்பதுடன், அருள்கூர்ந்து அப்பிழைகளைத் தெரிவிப்பார்களாயின் நன்றியுடன் திருத்திக்கொள்ளத் தயாராயுள்ளேன். ஸ்ரீமந்நிகமாந்த தேசிகன் அருளிய முனிவாகன போகத்தை அப்படியே அமைத்துக் கொடுத்துள்ளேன். அடியேனுக்கு உறுதுணையாயிருந்து இந்த விளக்கவுரைகளைப் பரிசீலித்துச் செப்பனிட்டுக் கொடுத்தவர்கள் இருபேரறிஞர்களாவர். திருப்பதி ஓரியண்டல் கல்லூரியில் வடமொழிப் பேராசிரியர்களாயிருந்து ஓய்வுபெற்றவர்

களும், ஆத்மகுணங்கள் அனைத்தும் ஒருங்கே நிரம்பப் பெற்றவர் களும், உபய வேதாந்தங்களிலும் பரிபூர்ணமான அதிகாரிகளும், "அஹ்ருத ஸஹஜதாஸ்யா :" என்று பட்டர் அருளியபடி திருவேங் கடத்தெம் பெருமானுக்கு ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை அனைத்தும் செய்து போருமவர்களுமான ஸ்ரீ. உ.வே. டி. ஏ. கிருஷ்ணமாசாரியார், ஸ்ரீ.உ.வே டி.ஏ கோபாலா சாரியார் ஆகியோர் ஆவர். அவர்கள் இருவர் திறத்தும் எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் க்ருதக்ஞதாபுரஸ்ஸரமான பிரணாமங்களைத் தெரி வித்துக் கொள்கிறேன். இந் நூலில் முதலில் வடிவழகிய நம்பிதாசர் இயற்றிய "ஆழ்வார்கள் வைபவம்" என்னும் நூலிலிருந்து திருப் பாணாழ்வார் பிரபந்தம் பொழிப்புரையுடன் தரப்பட்டுள்ளது. அதில் பாட்டு 17-ல் முதலடி தவறாக அச்சாகியுள்ளது. அதனைப் பின்வரு மாறு திருத்திக்கொள்ள வேண்டுகிறேன். "மின்னைமினிர் நேமியுடை விண்டுவுரை மெய்யப்". வடிவழகிய நம்பிதாசர் ஆழ்வார்கள் பன்னிருவரது வரலாற்றையும் 1569 பாடல்களாகப் பாடி உள்ளதை, மைய அரசின் உதவியுடன் பொழிப்புரையுடன் 750 பக்கங்களில் அடி யேன் பதிப்பித்துள்ளேன். அதன் விலை ரூ. 64. மேலும் வேதாந்த தேசிகர் அருளிய "பகவத் த்யான சோபானம்" என்ற வடமொழி தோத்திர நூல் மூலமும் அதற்குத் தமிழ் விளக்க உரையும் தரப் பட்டுள்ளது. திருவரங்கம் ஆடவர் மேல்நிலைப் பள்ளியில் தமிழா சிரியராயிருந்து ஓய்வுபெற்றவரும், நுண் மாண் நுழை புலம்மிக்கவரும், ஒப்பற்ற தமிழறிஞரும், சிறந்த கவிஞருமான ஸ்ரீமான் கு. க. நரசிம்மன் இயற்றிய பகவத் த்யான சோபானம் தமிழாக்கப் பாடல்களும் தரப் பட்டுள்ளன. அரிதின் முயன்று அடியேன் பதிப்பித்துள்ள இந்நூலைப் பலரும் படித்துப் பயன் பெறுவார்களேயானால் அடியேன் தன்ய னாகவும் கிருதார்த்தனாகவும் ஆவேன்.

இந் நூல் நல்ல முறையில் வெளிவருவதற்குப் பொருளுதவி புரிந்த திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாருக்கு எனது நன்றி உரித் தாகுக. இது நலனுற வெளிவர ஆசி புரிந்ததுடன் பொருளுதவியும் செய்த ஸ்ரீமத் பரமஹம்ஸ திருமலை திருப்பதி பெரிய ஜீயர் ஸ்வாமி திறத்து அடியேன் தலையலால் கைம்மாறிலேன். இயன்றவரை பொருளுதவி புரிந்தும் மற்றும் பல விதத்தில் ஆக்கமும், ஊக்கமும் நல்கிய டி. வி. எஸ். சுந்தரம் சாரிடீஸார், ஸ்ரீ காகுமானி ஆதிகேசவலு செட்டி சாரிடீஸார், ஸ்ரீமான். நாதெள்ள சம்பத்து செட்டி ட்ரஸ்ட் நிர்வாகிகள், அல்லத்தூர் நாதமுனி செட்டி சாரிடீஸார், நாராயண குருவையா செட்டி சாரிடீஸார், சென்னை இரயில் பெட்டி தொழிற் சாலை வடிவமைப்புப் பிரிவில் உள்ள ஸ்ரீமான் ஆர். ஸ்ரீநிவாசன் ஆகி யோருக்கு எனது நன்றி என்றென்றும் உரித்தாகுக. மிகுந்த சலுகையில்

அச்சுத்தாள் கொடுத்துதவிய ஈரோடு சேஷசாயி பேப்பர் போர்டு நிறுவனத்தார்களுக்கு எனது நன்றி. இந் நூலை நல்ல முறையில் அச்சிட்டுக் கொடுத்த ரவிசங்கர் பிரிண்டர்ஸ் உரிமையாளர் திருவாளர் மாணிக்கம் அவர்கட்கு எனது நன்றி. பாலர் முதல் பேரறிஞர் வரை இந் நூலைப் படித்துப் பயன்பெற்று ஸ்ரீரங்க நாய்ச்சியார், ஸ்ரீரங்க நாதன் திருவருளால் நீங்காத செல்வம் நிறைந்து, எங்கும் திருவருள் பெற்று இன்புற்று வாழ வேண்டுகிறேன். குலசேகராழ்வார் திரு நட்சத்திரமாகிய மாசிப்புனர் பூச நன்னாளில் தமிழுலகு பயன்பெறத் தக்க வகையில் ஸ்ரீரங்க திவ்ய தம்பதிகள் திருவடிவாரத்தில் இந் நூலை சமர்ப்பித்துக் கொள்கிறேன்.

"கடல்சூழ்ந்த மண்ணுலகம் வாழ்க".

சென்னை-600 011,
28-2-1988.

தொண்டர் தொண்டன்,
**R. கண்ணன்**

# பொருளடக்கம்

(1) திருப்பாணாழ்வார் பிரபந்தம் (பாட்டும், பொழிப்புரையும்) வடிவழகிய நம்பிதாசர் இயற்றியது.

(2) அமலனாதி பிரான் (பெரியவாச் சான்பிள்ளை, அழகிய மண வாளப் பெருமாள் நாயனார் ஆகியோரது விளக்கவுரைகள் எளிய நடையில்.)

(3) முனிவாகன போகம் (ஸ்ரீமந் நிகமாந்த தேசிகர் அருளியது).

(4) பகவத் த்யான ஸோபானம் (வடமொழி மூலம், தமிழில் விளக்கவுரை, தமிழாக்கப் பாடல்களுடன் கூடியது.

# திருப்பாணாழ்வார்



## வாழி திருநாமம்

உம்பர்தொழு மெய்ஞ்ஞானத் துறையூரான் வாழியே
உரோகிணி நாள் கார்த்திகையில் உதித்த வள்ளல் வாழியே
வம்பவிழ்தார் முனிதோளில் வந்த பிரான் வாழியே
மலர்க் கண்ணை வேறொன்றில் வையாதான் வாழியே
அம்புவியில் மதிளரங்கர் அகம்புகுந்தான் வாழியே
அமலனாதி பிரான்பத்தும் அருளினான் வாழியே
செம்பொனடி முடியளவும் சேவிப்போன் வாழியே
திருப்பாணன் பொற்பதங்கள் செகதலத்தில் வாழியே.

ஸ்ரீ

# திருப்பாணாழ்வார் பிரபந்தம்

1. காராரும் பொழில் வஞ்சி காவலவன் கதிர்மவுலிக்
கூராரும் சுடர்வேற்கைக் குலசேக ரன்திறமும்
ஏராரும் பாகவதர் இன்னருளால் சிறிதியம்பிச்
சீராரும் திருப்பாணாழ் வார்திறமும் செப்புவாம்.

பொழிப்புரை :

மேகம் பொருந்தக்கூடிய சோலையை உடைய வஞ்சி நகரின் தலைவன், கிரணங்கள் வீசும் கூர்மையான வேலைக் கையிலேந்திய குலசேகரரது வரலாற்றை அடியார்களின் அருளால் சிறிது சொல்லி, பெருமை மிக்க திருப்பாணாழ்வார் சரிதத்தையும் இனிச் சொல்லு வோம்.

## அவையடக்கம்

2. மாணார்ந்த திறலரங்க மணிவணனைக் கண்டகண்கள்
காணாமற் றொன்றினையும் எனக்கரைந்து கட்டுரைத்த
பாணாழ்வார் அனுபவத்தைப் பாடவெனப் பத்தர்கள்முன்
நாணாதே ஒருப்பட்டேன் இதின்வேறு நகையுளதோ.

பொழிப்புரை :

பெருமை பொருந்திய வலிமையுடைய ஸ்ரீரங்கநாதனாகிய மணி வண்ணனைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே என்று மனமுருகிப் பாசுரம் பாடிய திருப்பாணாழ்வாரது அனுபவத்தை பக்தர் கள் முன்பு நானும் பாடுவதற்கு சம்மதித்துள்ளேனே, இதைக் காட்டிலும் நகைப்பிற்கிடமான செயல் வேறு யாதுளது ?

3. மனுமகனுக் கயன்கொடுத்த மரகதமா மணிக்குன்றம்
எனுமரங்கத் தம்மானை இதயமலர் அணைக்கிடத்தி
அனுபவிக்கும் திறமுணரில் திருமகளஞ் சும்மடியேன்
பனுவலுக்கோ வெளியாவர் பாணாழ்வார் அல்லரோ.

பொழிப்புரை :

மனுச் சக்ரவர்த்தியின் மகனாகிய இட்சுவாகுவுக்கு பிரம்மா கொடுத்தருளிய மரகதமணிக்குன்றமாகிய அரங்கத்தம்மானை இதயத் தாமரையாகிய படுக்கையில் இருத்தி அனுபவிக்கும் திருப்பாணாழ் வாரின் பெருமையைச் சொல்ல திருமகளே அஞ்சுவாளே ? அடியேன் பாட்டுக்கு உட்படுவாரோ மாட்டாரோ ?

4. என்றால்பொய் அடியேனுக் கெளிதோமற் றவன்சீர்த்தி
நின்றாங்கே அதுநிற்க நாயினேன் புன்சொலினும்
ஒன்றாமா தென்னென்னில் உரைதோறும் திருப்பாணன்
குன்றாத திருநாமம் வரலான்மெய் குறித்தோரே.

பொழிப்புரை :

அப்படியானால் அவரது புகழ் பொய்யான அடியேனுக்கு எளிதாகுமா ? உள்ளபடியே அது நிற்கட்டும். எளியேனது புன் சொல்லினாலும் ஒன்று ஆகும். அது என்னவென்றால் வார்த்தைதோறும் அத் திருப்பாணாழ்வார் திருநாமத்தைச் சொல்லுவதால் வலிமை பெறுவேனாக.

## திருப்பாணர் பிறப்பு

5. ஆங்கவையே துணையாக அறைவேன்மெய் விண்ணின்று
பூம்கமலக் கண்ணெம்மான் திருவருளால் புவியின்மறை
ஓங்குதிரு உறையூரில் திருக்குலத்தார் உறுதவத்தின்
பாங்கதனால் கார்த்திகைமா தத்தில்வளர் பக்கத்தில்.

பொழிப்புரை :

அந்த நாமப்ரபாவத்தைத் துணைக் கொண்டு சொல்ல முற்படுகிறேன். மெய்யான பரமபதத்தினின்றும் ஸ்ரீமந்நாராயணன் திருவருளால் பூலோகத்தில் வேதங்கள் முழங்கக் கூடிய உறையூரில், திருக்குலத்தார் செய்த புண்ணியத்தின் பயனாக கார்த்திகை மாதம் சுக்ல பட்சத்தில்,

6. செய்யநெறி உரோகணியில் தேவர்களும் திருமறையும்
வையகமா முனிவர்களு மாதவரு மகிழ்ந்தேத்தப்
பையரவத் தவணைக்கிடந்தான் பத்தர்குழாம் பரிந்தோங்க
ஐயனெனை ஆளவந்த திருப்பாணன் அவதரித்தான்.

பொழிப்புரை :

ரோகிணி நட்சத்திரத்தில் தேவர்களும், வேதமும், பூமியிலுள்ள பெரிய முனிவர்களும், தவத்திற் சிறந்தோரும், மகிழ்ந்து கொண்டாட, பாம்பணை மெத்தையில் பள்ளி கொண்டிருக்கும் பரந்தாமனது பக்தர் கூட்டம் அன்புடன் விளங்க என்னை ஆள வந்த தலைவனான திருப்பாணாழ்வார் அவதரித்தார்.

## இளமையிலேயே பாண்பெருமாள் சிறப்பு

7. ஈன்றாரும் அறியாதே இலை மறைகாய் எனமண்ணில்
தோன்றாதே வளர்ந்தருளிச் சுருதிதொழ உலகுய்ய
மூன்றாறு திருவயதில் கைசிகநா ரதமுனிவர்
போன்றாரும் இவர்க் கொவ்வார் எனுமிசையில் பொதுவின்றி.

பொழிப்புரை :

பெற்ற தாய் தந்தையருக்கும் புலப்படாதபடி இலைமறை காயாக பூமியில் வாழும் மற்றவர்களைப் போன்றிராதே வேதமும் கொண்டாடத் தக்க வகையில், உலகத்தார் உய்வு பெறும் வகையில் பதினெட்டுப் பிராயம் வளர்ந்த போது, சங்கீதத்துறையில் சிறந்த "கைசிகம்" என்னும் பண்பாடிய நம்பாடுவானோ ? நாரதரோ இவர் யார் ? என்று கொண்டாடத் தக்க வகையில் விளங்கினார்.

8. சூழ் விசும்பு மதிலமரர் தொல்லுலகும் அம்புவியும்
ஆழ்கடலும் எண்கிரியும் அயனரனும் அசுரர்களும்
வாழுமுயிர்ச் சராசரமும் நீராள மயமாக
ஏழிசையும் பாண்பெருமாள் நம்பெருமாள் இடத்திசைத்தார்.

பொழிப்புரை :

பரமபதமும் மண்ணுலகும், கடலும் மலையும், பிரமன் சிவன் அசுரர்களும் மற்றும் வாழக்கூடிய உயிர்களும், அசையும் பொருள் அசையாப் பொருள் எல்லாம் நீர்ப்பண்டமாக உருகக்கூடிய வகையில் திருப்பாணாழ்வார் திருவரங்கத்தெம்பெருமான் பக்கல் ஏழு வகையான இசையையும் பாடினார்.

## பாணரது இசைத்தொண்டினைப் பலரும் போற்றல்

9. தென்னாற்றங் கரைநின்று திருப்பாணர் இவைபயில
அந்நாட்டார் திருக்குலத்தில் அவதரித்தார் இவர் யாரோ
பொன்னாட்டி லுள்ளவரோ எனப்புகலப் புண்ணியரும்
பன்னாளும் திருவரங்கத் தம்மானைப் பணிந்தேத்தி.

பொழிப்புரை :

பல புண்ணியர்களும் நாள்தோறும் திருவரங்கத்து எம்பெருமானைப் பணிந்து வழிபட்டு வர, காவிரியின் தெற்குக் கரையில் நின்று கொண்டு திருப்பாணர் அருமையாக பாடிக் கொண்டிருக்க, அது கேட்ட அந்த நாட்டு மக்கள் திருக்குலத்தில் பிறந்தவராகிய இவர் யாரோ ? 'விண்ணுலகத்தவரோ" எனக் கொண்டாடினார்கள்.

10. அப்படியே பலகாலம் அந்தரங்க சேவைபண்ணி
ஒப்பிலார் சங்கீதம் பயின்றிடுநாள் உயர்வானும்
இப்படியும் அளந்தபிரான் திருமார்பில் இனிதமரும்
செப்பென்னும் கனதனத்தாள் திருமங்கை மனமகிழ்ந்தே.

பொழிப்புரை :

இவ்வாறு இவர் பல காலம் அந்தரங்கமாக சேவை பண்ணி ஒப் பற்ற இசை பாடி வரும் நாளில், திரிவிக்ரமாவதாரம் எடுத்து வானம் முழுதும் அளந்த பெருமான் திருமார்பில் இனிதே வீற்றிருக்கும் செப் பன்னமென் முலையாளாகிய பெரியபிராட்டியார் பெரிதும் மனம் மகிழ்ந்தார்.

## பிராட்டியே அரங்கன் பாணரை அழைத்துவரச் சொல்லி வாயிற காவலரை நியமித்தல

11. திருவ ரங்கநகர் எம்பி ரானொடிவை செப்பும் வானிலுறை
தேவரும்
மருவ ரும்பொருவில் வீட தாதியுல கேழி னும்மிசை
வழுத்துவோர்
ஒருவர் இங்கவரை யொத்து ளார்கள்பிறர் உண்டு
கொல்லுரைசெ யும்பவிப்
பெருகு காதலர்பு றம்பு நிற்றல்பழு தென்று செங்கமலை
பேசலும்.

பொழிப்புரை :

செங்கமலநாச்சியார் திருவரங்கத்தெம்பெருமானிடம் இவ்வாறு கூறினாள். "நாதா ! வானத்தில் உள்ள தேவர்களிலும், அடைதற் கரிய பரமபதத்திலும், மற்றும் ஏழுலகங்களிலும் இவரைப் போன்று இசைபாடுவார் பிறருண்டோ, சொல்லும்" இப்பெரும் பக்தர் வெளியே நிற்பது குற்றமாகும்" என்று கூறவும்,

12. அண்டர் அண்டமுள் அடங்க உண்டுதுயில் கொண்ட
மாலணி அரங்கனார்
புண்ட ரீகமலர் மங்கை கட்டுரைசெய் போதில் அங்கவளின்
நைந்துநம்
தொண்ட ரைக்கொணர்மி னென்று செம்பவளவாய்தி
றந்திறைவர் சொல்லஅக்
கொண்டல் கோயில்திரு வாயில் காவலவர் ஏகி னார்குழுவொ
டேகியே.

பொழிப்புரை :

அண்டசராசரங்கள் அனைத்தையும் உண்டு உறங்குகின்ற அரங்கன், பிராட்டி சொல்லியதும் அவர் ஆராய்ந்து, தன் செம்பவள வாய் திறந்து "நம் தொண்டரான திருப்பாணரை கொண்டு வாருங்கள் என்று நியமிக்க, வாயிற் காவலர் கூட்டமாகப் போனார்கள்.

13. வீதி பற்பல கடந்து சென்றவர்கள் திருமு கத்துறையை
மேவிநின்(று)
ஆதி நாதனருள் அச்சு தன்னணி அரங்கன் இன்றுனை
அழைத்தனன்
போதி எங்களொடும் என்று செப்பியவர் பொற்ப தங்களில்
இறைஞ்சலும்
சாதி யிற்கடைய னென்று பாணரது தக்க தன்றென
வணங்கினார்.

பொழிப்புரை :

அவர்கள் பல வீதிகளையும் தாண்டி, திருமுகத்துறையிலே நின்று, "ஆழ்வீர் ! ஆதிநாதன் அருளினார் ; அச்சுதனாகிய அரங்கன் இன்று உம்மை அழைத்து வரச் சொன்னார் ; எங்களுடன் எழுந்தருளு வீராக" என்று அவர் திருவடிகளில் வணங்கி நிற்க, பாணர், "நான் ஜாதியில் தாழ்ந்தவன் ; அடியேன் அங்கு வருவது தகாது" என்று சொல்லி அவர்களை வணங்கினார்.

## வராமறுத்த பாணரை அரங்கன் தொண்டர் குலமே தொழுகுலம் எனச்சொல்லி அழைத்துவரச் சொலல்

14. வணங்கி நின்றவர் உரைப்ப மற்றவர்கள் மாசி லாநெறி
அரங்கர்முக்
குணங்கள் தந்தவர்முன் எய்தி இம்மொழிகள் கூறு
வோமெனவும் ஏகிநல்
பணங்க ளாயிரம் இலங்(கு)அ னந்தன்மிசை மன்ன
ஒளிய பத்தனார்
இணங்கு கின்றிலர் குணங்கள் எண்ணிலெண் எய்து
வானென இறைஞ்சினார்.

பொழிப்புரை :

இவ்வாறு ஆழ்வார் வணங்கி நின்று சொல்ல, அக்காவலர்கள் மூன்று குணங்களையும் கடந்தவரும் குற்றமற்ற நெறியினருமான

அரங்கர் முன் சென்று இவ்வார்த்தைகளைக் கூறுவோம் எனச் சென்று, "ஓ சேஷசாயீ ! அவ்வாழ்வார் தன் இழி குணங்களை எண்ணி இங்கு வர சம்மதிக்க மாட்டேன் என்கிறார்.

15. * அந்தஉரை சிந்தைபுக ஆதியவ ரோடு
முந்தைமறை நீதிகுல முற்றும்வரு வித்த
எந்தம்உறு தொல்குலம் இயம்பிலெம தன்பர்
வந்தகுல மேகுலம் வரச் சொலுமின் என்றார்.

பொழிப்புரை :

அவ்வார்த்தையை கேட்ட எம்பெருமானும், அக்காவலர்களிடம் வேத நெறி கூறும் குற்றமற்ற பழமையான குலம் எது என்றால் எனது அடியார்கள் குலமே உயர்ந்த குலமாம் ; அதலால் வரச் சொல்லுங் கள்" என்று கூற,

16. நன்றிவை உரைத்திடுவம் நாதஎன நால்வர்
சென்றுவிரை வில்திரு முகத்துறை செறிந்தே
நின்றிசை வழுத்துநிம லர்க்கிவை நிகழ்த்த
ஒன்றுளது கேண்மினென மற்றவர் உரைப்பார்.

பொழிப்புரை :

"ஐயனே ! அப்படியே சொல்லுகிறோம்" என்று நால்வர் திரு முகத்துறைக்கு விரைந்து சென்று, அங்கு நின்று இசை பாடிக் கொண் டிருக்கும் நிமலர்க்கு (குற்றமற்ற ஆழ்வார்க்கு) இவர்கள் சொல்ல, ஆழ்வாரும், "காவலர்களே ! ஒன்று சொல்லுகிறேன் கேளுங்கள்" என்று சொன்னார்.

17. மின்னல் போன்று ஒளிவீசும் சரீரத்தையுடைய விஷ்ணுவின்
பின்னைமண வாளனை அடைந்துபிறி தற்றுத்
தன்னையற விட்டதலை வர்க்கது தகுங்கொல்
என்னையவ ரோடுமிறை எண்ணிடவும் என்றே.

பொழிப்புரை :

மின்னல் போன்று ஒளிவீசும் சரீரத்தையுடைய விஷ்ணுவின் வார்த்தை மெய்யோயாகும் ; அந்த நப்பினை கணவனை அடைந்து, தன்னை அறவே விட்டு, அவனுக்கே தன்னை ஆக்கிய பாகவதோத்

தமர்கட்கு அது தகுதியுடையது. அத்தகைய பெருமையுடையவர் களோடு நீசனேனைக் கருதலாமா ?

18. செப்பிஅடி யேன்முடிவில் தீவினைசெய் நீசன்
ஒப்பரிய சோதிவளர் உத்தம தலத்தில்
எப்படி மிதிப்பதிரு கால்கொ(டு) எனை ஆளும்
அப்பனொடு கட்டுரைமின் அன்பரென ஆழ்வார்.

பொழிப்புரை :

என்று இவ்வாறு பல சொல்லி, அன்பர்களே ! எல்லையற்ற பாவங்களைச் செய்த நீசனான அடியேன், பரஞ்சோதி எழுந்தருளி யிருக்கும் உத்தமமான பிரதேசத்தில் என் இரண்டு கால்களாலும் மிதித்து எப்படி வருவேன் ; என்னை ஆளும் பெருமானிடம் எடுத்துச் சொல்லுங்கள் என்று ஆழ்வார்,

19. கூறஇறை ஏவலொடு சென்றவர்கள் கோவே
மாறிடில் உமைக்கொடுசெல் வோம்வலியில் என்றே
ஏறிஎதிர் செல்லஅவர் ஓடிஅவண் எட்டா(து)
ஆறுவரு காவிரியின் அக்கரையில் ஆனார்.

பொழிப்புரை :

அருள, அரங்கன் கட்டளைப்படி சென்ற காவலர்கள், "தலைவ ! எங்கள் வேண்டுகோளுக்கு நீர் சம்மதிக்கவில்லையானால் உம்மை வலுவிலே தூக்கிக் கொண்டு செல்வோம்" என்று ஓடி எதிர்கொள்ள, ஆழ்வாரோ அவர்களுக்குக் கிட்டாமல் ஓடிச் சென்று காவிரியின் அக் கரை சேர்ந்தார்.

20. இத்திறம் அரங்கரொ(டு) இயம்பிடுவம் என்றே
மெய்த்திறம் உணர்ந்தநெறி நால்வர்களும் மீண்டாங்(கு)
அத்திறமு மாயனொ(டு) அறைந்தனர்கள் அம்மான்
எத்திறம் இயற்றிலிவண் எய்துமென எண்ணி.

பொழிப்புரை :

இச்செய்தியை அரங்கனிடம் சொல்லுவோம் என்று அக்காவலர் கள் நால்வரும் திரும்பி வந்து நடந்தவற்றையெல்லாம் பெருமாளிடம் தெரிவித்தார்கள். எம்பெருமானும் ஆழ்வாரை இங்கு அழைத்து வர என்ன செய்யலாம் என்று எண்ணினார்.

## அரங்கன் லோகசாரங்க முனிவரைக் கூவிப் பாணரைத் தோளில தூககிவரச் சொலல்

21. * அலகிலாத மாமாயை அரங்கன் தனையர்ச் சனைசெய்யும்
உலக சார்ங்க மாமுனியை உவந்து கூவி உத்தமபோய்ப்
பலரும் காண நின்தோளில் பாணாழ் வானைப் பரிந்தேற்றி
நிலவும் பதியை வலம்செய்து கொணர்க என்றான்
நிகரில்லான்.

பொழிப்புரை :

அளவிட முடியாத பெரிய மாயச் செயல்களைச் செய்யக்கூடிய ஒப்பற்ற பெருமான் தன்னை அர்ச்சிக்கும் லோகஸாரங்க மகாமுனி வரை மகிழ்ந்து கூப்பிட்டு, "உத்தமரே ! நீர் போய் எல்லாரும் காணத் திருப்பாணாழ்வாரை உம்முடைய தோளில் பரிவோடு ஏற்றிக் கொண்டு திருவரங்கத் திருப்பதியை வலமாக வந்து அழைத்து வாரும் என்றார்.

22. * மாசிலா முனிவன் மாயன் மலரடி வணங்கி ஏக
ஆசிலா அனைத்துக் கொத்தும் அவனுடன் சென்மின் என்றே
ஈசனும் அருளிச் செய்ய யாவரும் எழுந்து சென்றத்
தேசினான் நின்று பாடும்திருமுகத் துறையை மன்னி.

பொழிப்புரை :

குற்றமற்ற அம்முனிவரும் பெருமான் திருவடியை வணங்கி புறப் பட, அரங்கன், குற்றமற்ற அனைத்துப் பரிவாரங்களும் முனிவருடன் செல்லுங்கள் என்று ஆணையிட, எல்லாரும் புறப்பட்டுச் சென்று, திருப்பாணர் நின்று பாடக் கூடிய திருமுகத் துறையை அடைந் தார்கள்.

23. சுற்றுற வளைந்து கொண்டு தொழுதனர் திருப்பா ணாழ்வார்
உற்றவர் தாள்கள் தம்மில் உடன்பணிந் துருக ஈசற்(கு)
அற்றமா முனிவன் ஆழ்வீர் அருளிப்பா டுமக்கின் றென்றான்
நற்றவம் உடைய பத்தர் நானது செய்யேன் என்றார்.

பொழிப்புரை :

முனிவர் முதலிய அனைத்துப் பரிவாரங்களும் ஆழ்வாரைச் சுற்றி வளைத்துக் கொண்டு வணங்கினார்கள். ஆழ்வாரும் இவர்கள்

திருவடிகளில் உடன் வீழ்ந்து வணங்கி உருகி நிற்க, எம்பெருமானுக்கே தொண்டு செய்து வரும் முனிவர், "ஆழ்வாரே ! இன்று எம்பெருமான் உமக்கு அருளிப்பாடு சாதித்துள்ளார்" என்ன ; நல்லதவத்தையுடைய பக்தராகிய ஆழ்வாரும் "நான் அது செய்யேன்" என்றார்.

24. ஏடவிழ் துளபத் தாரான் எடுத்துமைக் கொணரச் சொன்னான்
ஓடவும் ஒட்டோம் ஆழ்வீர் என்றனர் உவந்து சென்றார்
மாடுநின் றவரை நோக்கார் மற்றொரு திசையை நோக்கிக்
கூடுமோ நீசன் மாசில் குலத்தொடும் என்று கூறி.

பொழிப்புரை :

"ஆழ்வீர் ! திருத்துழாய் மாலையான் உம்மைத் தூக்கிக் கொண்டு வரச் சொன்னார். உம்மை ஓடவும் விடமாட்டோம்" என்று சொல்லி மகிழ்ந்து அருகில் சென்றனர். பாணரும் நின்றவர் களைக் காணாதவராய் மற்றொரு திக்கைப் பார்த்து நீசனாகிய நான் உயர்குலத்தவர்களாகிய உங்களோடு சேர்வேனோ ! என்று சொல்லி,

## லோகசாரங்கர் திருப்பாணரைத் தோளில் தூக்கிக்கொண்டு திருவரங்கன் கோயிலினுள் செலல்

25. கடுப்பினில் ஆழ்வார் ஓடக் காத்துற வளைந்து நின்றார்
தடுத்தனர் ஓடல் தன்னைச் சரணென வணங்கி மண்ணில்
படுத்தனர் திருப்பா ணாழ்வார் பங்கயத் தயனும் போற்ற
எடுத்துற முனிவ னேந்தி இருத்தினான் திருத்தோள் தன்னில்.

பொழிப்புரை :

ஆழ்வார் விரைந்து ஓட முற்பட அனைத்துப் பரிவாரங்களும் ஓடுவதைத் தடுத்துச் சுற்றி வளைத்துக் கொண்டு நின்றார்கள். ஆழ் வார், "சரணாகதி" என்று மண்ணில் படுத்துவிட்டார். பிரம்மாவும் கொண்டாடும் வகையில் லோகஸாரங்க முனிவர் ஆழ்வாரைத் தூக்கி எடுத்துத் தன் திருத்தோள்களில் அமர்த்திக் கொண்டார்.

26. நண்ணரும் இலங்கை வேந்தை நாளைவா என்ற அந்நாள்
கண்ணனைத் தோள்மேல் கொண்டு களித்தமா ருதியை மானப்
பண்ணமர் கவிவ லானைத் தாங்கிய பனவன் பெற்ற
உள்நிறை மகிழ்ச்சி ஏழேழ் உலகினில் ஒருவர்க் குண்டோ.

பொழிப்புரை :

நெருங்குதற்கரிய இராவணனை, "இன்று போய் நாளை வா" என்று கூறிய முதல் நாள் போரின் போது, அழகிய கண்களையுடைய ராமனைத் தன் தோள் மேல் ஏற்றிக் கொண்டு மகிழ்ந்த அனுமனைப் போலே, பண்இசைத்துப் பாட வல்ல கவிஞரான பாணாழ்வாரைத் தோளில் சுமந்த அந்தணன் பெற்ற மனநிறை மகிழ்ச்சி ஏழேழுலகில் எவருக்கும் இல்லை.

27. இடிநிகர் முரசம் ஆர்ப்ப இமையவர் முனிவர் சித்தர்
கடிமலர் சிந்தி ஆர்ப்பக் காசினி யோர்கள் போற்றிப்
படிமிசை இறைஞ்சி வாழ்த்தப் பத்தர்கள் குழாங்கள் ஆடும்
அடிதொறும் சேறு பாயும் ஆனந்த அருவி நீரால்.

பொழிப்புரை :

இடியைப் போன்று முரசொலிக்க, தேவர், முனிவர், சித்தர் முதலானோர் மலர் பொழிந்து ஆரவாரிக்க, மண்ணுலகத்தோர் புகழ்ந்து வணங்கி வாழ்த்த, பக்தர்கள் கூட்டம் பொழிந்த ஆனந்தக் கண்ணீர் அருவியினாலே, கால் வைக்கும் இடமெல்லாம் சேறாயிற்று.

28. அணிஅரங் கத்தை முக்கால் அவ்வணம் வலம்செய் தேகப்
பணியணைக் கிடந்த மாமால் பாணர்மெய் விழிகள் நேர்முன்
கணிகணன் பின்னே போன கஞ்சமா மலர்த்தாள் ஆதி
மணிமுடி வரையும் காட்டி மாசிலா மகிழ்ச்சி ஈந்தார்.

பொழிப்புரை :

இவ்வாறு திருவரங்கத்தை மூன்று முறை ப்ரதக்ஷிணம் செய்து கோயிலுட் செல்ல, பாம்பணைப் பள்ளி கொண்ட பரமன் திருப் பாணாழ்வார் கண்களுக்கு முன்னாலே, கணிகண்ணன் பின்னே போன திருவடித் தாமரை முதல் திருமுடி வரை காட்டிக் கொடுத்து, குற்ற மற்ற ஆநந்தத்தை அளித்தார்.

## பாணர் பரவிய பாட்டு

29. முமலமும் அற்றநீதி முனிவரன் திருத்தோள் மன்னி
எமலமும் கடிவார் வீதி ஊடவர் ஏகும் காலை
அமலனெம் மாதி நீதி அணிஅரங் கத்துள் எம்மான்
கமலபா தங்கள் வந்தென் கண்ணுளொக் கின்ற என்றும்.

பொழிப்புரை : .

உயர்குடிப்பிறப்பு, கல்வி, செல்வம் ஆகிய மூன்று வித கர்வமும் இல்லாதவரான லோகஸாரங்கரது தோளிலிருந்து கொண்டு எத்த கைய குற்றமும் இல்லாதவரான ஆழ்வார் வீதிகளின் ஊடே வரக் கூடிய காலத்து "அமலன்" என்று தொடங்கி, பரிசுத்தனாயும், ஜகத் துக்கெல்லாம் முழுமுதற்காரணனாயும், உடையவன் உடைமை என்கிற உறவு முறையாகிய நீதி மாறாதவனாயும் உள்ள அழகிய திருவரங்கத் திலுள்ள எமது பெருமானது தாமரை போன்ற திருவடிகள் வந்து என் கண்ணுக்குள்ளே பொருந்தியிருக்கின்றன என்றும்,

30. நின்றதாள் போய தாளால் நிலம்விசும் பளந்து நீண்ட
வென்றிவேல் அரக்கர் துஞ்ச வெங்கணை துரந்த வேந்தன்
மன்றல்சேர் துளபத் தாரான் வளர்திரு அரையில் கண்டு
சென்றதாம் சிவந்த செம்பொன் ஆடையில் சிந்தை என்றும்.

பொழிப்புரை :

திரிவிக்ரமாவதாரம் எடுத்து நிலைத்து நின்ற ஒரு பாதத்தால் மண்ணுலகத்தையும் தாவிச் சென்ற மற்றொரு பாதத்தாலே விண்ணு லகத்தையும் அளந்தவரும், வெற்றி தரும் வேல் ஏந்தி நிற்கக்கூடிய அரக்கர்கள் மடியும் வண்ணம் அம்புகளைத்துரந்த வீரனாயும் உள்ள மணம்மிக்க திருத்துழாய் மாலை அணிந்த பெருமானது அழகிய இடுப் பிலே சாத்தப்பெற்ற சிவந்த பொன்னாடையைக் கண்டு என் மனம் அதிலேயே ஈடுபட்டு விட்டது.

31 * மந்திபாய் வேங்கட மலையை மன்னியும்
இந்தியம் கடிந்தவர் இதயப் போதினும்
சிந்தியா(து) அடிதொழும் திருவ ரங்கனார்
உந்திமேல் எனதுயிர் ஒடுங்கிற் றென்னவும்.

பொழிப்புரை :

குரங்குகள் தாவித்திரியக்கூடிய திருவேங்கட மலையிலே எழுந் தருளியிருப்பவரும், ஐந்து இந்திரியங்களையும் வென்றவர்களாகிய ஞானிகளது இதயமாகிய தாமரைமலரிலே இருப்பவரும், தன்னை நாடி வந்த அடியார்களது மனம் வேறொன்றையும் சிந்தியாது தன் திருவடியையே தொழச் செய்யும் பெருமை படைத்த திருவரங்க நாதரது கொப்பூழிலே எனது உயிர் ஒடுங்கிற்று என்றும்,

32\. கலைமார் இலங்கையர் வேந்தன் காட்டிய
அலகிலா ஆற்றலை அறுத்த மாயனார்
உலகெலாம் உண்டொடுக்(கு) உதர பந்தனம்
நிலவுமென் னுளத்தென நெகிழ்ந்து கூறியும்.

பொழிப்புரை :

எப்போதும் கலகத்தையே உண்டாக்கக்கூடிய இலங்கை அரசனான இராவணன் காண்பித்த கணக்கற்ற திறமைகளையெல்லாம் அழித்த மாயனாகிய அரங்கனது உலகையெல்லாம் விழுங்கித் தன் வயிற்றிலே ஒடுக்கிக் கொள்ளக்கூடிய திருவயிற்றுப் பட்டயம் என் நெஞ்சில் நீங்காது நிலைத்து உள்ளது என்று மனமுருகிக் கூறியும்,

33\. * தந்தைதாய் சுற்றம் உற்ற தமியனேன் உயிரும் ஆகி
முந்தைநாள் விரும்பிச் செய்து மொய்த்தவல் வினையும் தீர்த்தென்
சிந்தையே கோயில் கொண்டு திருவரங் கத்துள் மன்னும்
எந்தையார் திருமார் பன்றோ என்னைஆட் கொண்ட தென்றும்.

பொழிப்புரை :

அடியேனது தந்தை, தாய், சுற்றத்தார், நண்பர், உயிர் எல்லாம் ஆகி, முற்பறவிகளிலே விரும்பிச் செய்த தீயசெயல்களாலே மொய்த்துக்கொண்ட பாபங்களையெல்லாம் போக்கி, என்மனத்தையே கோயிலாகக் கொண்டு திருவரங்கத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானது திருமார்பு அல்லவா என்னை ஆட்கொண்டது என்றும்,

34\. வண்டடர் இதழித் தாரோன் வல்வினை முழுதும் தீர்த்துக்
கொண்டல் வந்தமரும் சோலைக் குளிர்புனல் அரங்க மன்னி
அண்டரண் டங்கள் அதி அனைத்துள பொருளும் தண்டாது
உண்டமர் மிடறு கண்டீர் உய்க்கொண்ட(து) என்னை என்றும்.

பொழிப்புரை :

வண்டுகள் மொய்க்கக் கூடிய மலர்மாலை அணிந்த திருமால், எனது பாவங்கள் அனைத்தையும் போக்கி. மேகங்கள் தங்கும் சோலையையும். குளிர்ந்த நீரையுடைய காவிரியையும் உடைய திருவரங்கத்தில் தங்கி, அண்டங்கள் பலவற்றையும் அவற்றிலுள்ள அனைத்துப் பொருள்

களையும் சிதறாமல் விழுங்கக் கூடிய அப்பெருமானது கழுத்து என்னை உய்வு பெறச்செய்தது என்றும்,

35. கையமர் ஆழி சங்கம் கதிர்மதி இருபால் மன்னும்
மையமர் கிரியி(து) என்ன வளர்வதாம் கருணைக் குன்றம்
பையர வணையுள் மன்னும் அரங்கனார் பதுமம் போன்ற
செய்யவாய் ஐயோ இன்றென்சிந்தனை கவர்ந்த(து) என்றும்.

பொழிப்புரை :

சூரிய சந்திரர்களைப் போன்று திருக்கைகளில் இருபக்கங்களிலும் சங்குசக்கரங் களை ஏந்தி நிற்பவரும், மைபடிந்த மலையைப் போன்று வளர்கின்ற கருணைக் குன்றாய் விளங்குபவரும், பாம்பணையுள் பள்ளி கொண்டிருப்பவருமாகிய அரங்கனது தாமரை போன்ற சிவந்த வாயானது ஐயோ ! இன்று என் மனத்தைக் கவர்ந்து சென்றதே என்றும்,

36. பரியவாள் அவுணன் ஆகம் படிமிசை மடிமேல் இட்டே
அரியவாள் உகிரால் கீண்ட அரியென(து) அரங்கத்
தம்மான்
உரியமா முகத்தில் நீண்டு செவ்வரி ஓடி வாடாப்
பெரியவான் கண்கள் என்னைப் பேதைமை செய்த என்றும்.

பொழிப்புரை :

உடல் பருத்தவனாயும் வாள் ஏந்திநிற்பவனுமான இரணியகசிபு வின் மார்பை வாசல்படியில் தனது மடியின்மேல் கிடத்திக்கொண்டு வாள்போன்று தனது கூர்மையான நகத்தினாலே கிழித்துக் கொன்ற நரசிம்மமாகிய அரங்கப்பெருமானது திருமுகத்திலே உள்ள நீண்ட செவ்வரியோடு கூடிய வாடாத நீண்ட பெரியகண்கள் என்னைப் பைத்தியமாக ஆக்கிவிட்டன என்றும்,

37. பாலனாய் ஞாலம் உண்டு பங்கயச் செல்வி தன்னோ(டு)
ஆலமா மரத்தி லோர்சிற் றிலைஅமர் அரங்கத் தம்மான்
கோலமா மணிகள் ஆரம் குறுநகை முடிவில் சோதி
நீலமா மேனி நெஞ்சை நிறைகொண்ட(து) ஐயோ என்றும்.

பொழிப்புரை :

உலகையெல்லாம் உண்டு சிறு குழந்தையாய் மகாலட்சுமியுடன் ஆலமாமரத்தினுடைய ஒரு சிறிய இலையிலே படுத்திருப்பவராகிய

திருவரங்கப் பெருமானது அழகிய பெரிய ரத்தினக் கற்கள் பதிக்கப் பெற்ற ஆரம் முதலிய ஆபரணங்கள் பலவற்றை அணிந்து முடிவில்லாத ஜோதிமயமான நீலமயமான திருமேனியானது ஐயோ ! எனது நெஞ்சு நிறைய ஆட்கொண்டு விட்டது என்றும்,

38. கொண்டல்போல் உருவத் தானைக் கோவலன் ஆகி நெய்பால்
உண்டசெவ் வாயி னானை உளம்புகுந்(து) உருக்கு வானை
அண்டர்கள் பெருமான் தன்னை அமுதினை அரங்கத் தானைக்
கண்டஎன் கண்க ளாற்பின் காண்கிலேன் ஒன்றை யென்றும்.

பொழிப்புரை :

மேகம் போன்ற நிறத்தை உடையவனும், ஆயர் பாலகனாய் நெய்யையும் பாலையும் உண்ட சிவந்த வாயை உடையவனும், அடியார்கள் உள்ளத்திலே புகுந்து அவர்களை உருகச் செய்பவனும், எல்லா அண்டங்களிலும் உள்ள அனைத்து உயிர்களுக்கும் தலைவனும், ஆரா அமுதனும் ஆகிய திருவரங்கத்தும்மானைக் கண்ட எனது கண்களால் இனி வேறு ஒன்றையும் காணமாட்டேன் என்றும்,

39. * அப்படியே திருமொழியோர் பத்துரைத்தாங்(கு)
அணியரங்கன் திருமுற் றத்தில்.
ஒப்பரிய முனிவரனோ(டு) எய்திஅவன் திருத்தோள்நின்று
உம்பர் வாழ்த்தச்
செப்பரிய பாண்பெருமாள் நம்பெருமாள் சரணமெனச்
சென்று தாழ்ந்தார்.
இப்படியே இறைஅருளின் செயலிருக்கும் என்றொருவர்க்
கியம்ப லாமே.

பொழிப்புரை :

அவ்வாறே ஓர் பத்துப் பாட்டும் சொன்ன அளவில் அரங்கனின் கர்ப்பகிருகத்தினுள் லோகஸாரங்க முனிவர் தோள் மீது ஏறிச் சென்று, தேவர்களும் வாழ்த்த, திருப்பாணாழ்வார், "நம்பெருமாள் சரணம்" என்று கீழிறங்கிச் சென்று வணங்கினார். எம்பெருமான் திருவருள் இப்படித்தான் இருக்கும் என்று எவராலும் சொல்ல முடியுமோ ?

## ஆழ்வார் அரங்கன் அடியில் அடங்கல்

40. சரணமெனத் திருவடிக்கீழ்ச் சென்றிறைஞ்சும் பாண்பெருள்
தன்னை நோக்கிக்
கரணவொழுங் குறும்வஞ்சப் பொய்யன்புக் கெட்டாத கமலச்
செவ்வாய்ப்
புரணனெழுந் திணைஅடியை மெய்யன்பர் சென்னிமிசைப்
பொருந்தப் பூட்ட
அரணிதுவே புகலிடமென் றக்கமலத் திருவடியில்
அடங்கினா ரால்.

பொழிப்புரை :

"சரணம்" என்று அரங்கன் திருவடிக் கீழ் சென்று வணங்கக் கூடிய திருப்பாணாழ்வாரை நோக்கி, வஞ்சகப் பொய்யன்புக்குக் கிட்டாதவரான, தாமரை போன்ற சிவந்த திருவாயையுடைய பூரண புருஷனான பெரிய பெருமாள் எழுந்து வந்து தன் திருவடிகளை மெய் யன்பரான ஆழ்வார் தலை மீது பொருந்த வைக்க, இத்திருவடித் தாமரைகளே நமக்குப் பாதுகாப்பான புகலிடம்" என்று அதிலேயே அடங்கி விட்டார்.

41. * இன்பவீ டடைவார் தூலமாம் உடல்விட் டெழில்திகழ்
சூக்குமம் கழற்றித்
துன்பவா தனையும் விரசையில் போக்கிச் செறிவர்கள்
துகளறு பாணர்
என்புதோல் உரோமத் தூலமும் அரங்கன் இணையடி
எய்திய(து) என்றால்
அன்பினால் அன்றி ஒன்றினால் உய்யும் உபாயமெவ்
அண்டத்தில் உளதே.

பொழிப்புரை :

மோட்சத்தை அடைபவர், ஸ்தூல, சூட்சும சரீரங்களை விட்டுத் துன்பவாதனையையும் விரஜா நதியில் போக்கிச் சேர்வர், குற்றமற்ற பாணரது எலும்பு, தோல், ரோமங்களுடன் கூடிய ஸ்தூல சரீரமும் அரங்கன் திருவடியில் ஐக்யமாகிவிட்டது என்றால், இவ்வுலகில் அவனை அடைவதற்கு பக்தியைத் தவிர வேறு உபாயமும் உண்டோ!

(திருப்பாணாழ்வார் திருவடிகளே சரணம்)

ஸ்ரீ :

ஸ்ரீ ரங்கநாத பரப்ரம்மணே நம :

# அமலனாதிபிரான்

## (பெரியவாச்சான்பிள்ளை, அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் விளக்கவுரை.)

பெரியநம்பி அருளிய தனியன்.

*ஆபாத சூடம் அநுபூய ஹரிம் சயாநம்*
*மத்யே கவேரதுஹிது : முதிதாந்தராத்மா*
*அத்ரஷ்ட்ருதாம் நயநயோ : விஷயாந்தராணாம்*
*யோ நிஸ்சிகாய மநவை முநிவாஹநம் தம்.*

இதன் பொருள் :

ய :—எந்த ஒரு திருப்பாணாழ்வார், கவேர துஹிது :—காவிரியினுடைய, மத்யே—நடுவில், சயாநம்—படுத்துக்கொண்டிருக்கக் கூடிய, ஹரிம்—அரங்கநாதரை, ஆபாதசூடம்—திருவடிமுதல் திருமுடி வரை, அநுபூய—கண்ணாரக் கண்டனுபவித்து, விஷயாந்தராணாம்—அவ்வெம்பெருமானைத் தவிர மற்ற விஷயங்களை, அத்ரஷ்ட்ருதாம்—காணப்பெறாமையை, நிஸ்சிகாய—அறுதியிட்டுப் பேசினாரோ, தம்—அத்தகையவரான, முநிவாஹநம்—லோகஸாரங்க மஹாமுநியை வாஹநமாக உடைய திருப்பாணாழ்வாரை, மநவை—தியானம் பண்ணக்கடவேன்.

திருமலைநம்பி அருளிச் செய்தது.

*காட்டவேகண்ட பாத கமலநல் லாடை யுந்தி*
*தேட்டரும் உதரபந்தம் திருமார்பு கண்டம் செவ்வாய்*
*வாட்டமில் கண்கள் மேனி முனியேறித்தனிபுகுந்து*
*பாட்டினால் கண்டு வாழும் பாணர்தாள் பரவினோமே.*

இதன் பொருள் :

அரங்கத்தெம்பெருமான் காட்டித் தந்த படியே கண்ணாரக் கண்ட திருவடித்தாமரைகளும், நல்ல பீதாம்பரமும், நாபிகமலமும், கிடைத்தற்கரிய பொன் அரைநாணும், திருமகள் வீற்றிருக்கும் மார்பும், திருக்கழுத்தும், சிவந்த வாயும், சோர்வில்லாத திருக்கண்களும், இவையனைத்தும் சேர்ந்த திருமேனியை, லோகஸாரங்க முனிவரது, திருத்தோள்களில் ஏறிக்கொண்டு, திருவரங்கனது கருவறையில் உள்ளே

நுழைந்து, கண்ணாரக்கண்டு, அவ்வனுபவமுதிர்ச்சியினால் எழுந்த பாடல்களாலே பேரானந்தமுற்று வாழக் கூடிய திருப்பாணாழ்வாரது திருவடிகளை வணங்கப் பெற்றோம்.

அவதாரிகை :

"ஓம்" என்கிற ப்ரணவத்தைப் போலே மிகச் சுருக்கமாகவோ, வேதத்தைப் போலேயும் வேதத்தின் பொருளை விளக்குவதற்காக ஏற்பட்ட ராமாயணத்தைப் போலேயும், மகாபாரதத்தைப் போலேயும் மிகவும் பரந்ததாகவோ இல்லாமல் பத்துப் பாட்டுக்களை உடையது இந் நூல். மேலும் ராமாயண பாரதாதிகள் நாராயண கதையைச் சொல்லுகிறேனென்று தொடங்கி பகவத் கதை அல்லாதவற்றையும் சொல்லிவைத்தன. திருவாய்மொழியோவெனின் "அமர்சுவை ஆயிரம்" என்று ஆயிரம் பாட்டாய் இருப்பதோடன்றி, அந்யாபதேசம், ஸ்வாபதேசம், ஸாமாநாதிகரண்யத்தை நிர்ணயிப்பது, த்ரிமூர்த்தி ஸாம்யம், அதற்கும் மேற்பட்ட தத்துவங்களை விலக்கிப் பேசுவது முதலிய அருமையான விஷயங்களை உடையது. ஆதலால் எல்லாராலும் எளிதில் புரிந்துகொள்ள முடியாது. திருநெடுந்தாண்டகம் பரந்ததாக இல்லாது முப்பது பாட்டாக இருந்தபோதிலும் தாமான தன்மை, தாயின்நிலை, தோழியின்நிலை போன்ற பலவகையில் பேசுவதால் திருவாய்மொழியைப் போலே இதற்கும் அருமை உண்டு. திருமாலைக்கு அவ்வருமைகள் இல்லையேயானாலும் தன்னுடைய லாபாலாபங்களாகிற விருப்பு வெறுப்புக்களை விளக்கி நிற்கிறது. திருப்பல்லாண்டுக்கு இத்தகைய குற்றங்கள் இல்லையே என்றாலும் அதற்கும் ஒரு குற்றமுண்டு. ஐச்வர்யார்த்திகள் (செல்வம் முதலியவற்றை வேண்டுமவர்) கைவல்யார்த்திகள் (கைவல்யத்தை விரும்புமவர், கைவல்யமாவது ஜீவன் தன்னைத் தானே அநுபவித்து நிற்கும் நிலை), பகவச்சரணார்த்திகள் (எம்பெருமான் திருவடிவாரத்திலேயே இருந்து என்றும் தொண்டுசெய்ய விரும்புமவர்) ஆகிய மூன்று வகை அதிகாரிகளின் குணதோஷங்களை விளக்கி நிற்கிறது.

பிரவணத்தைப் போலே மிகச் சுருக்கமாய், பொருள் புரிந்து கொள்ள முடியாததாய் இல்லை இந் நூல். "யதி ஹாஸ்தி ததந்யத்ர ; யந்நேஹாஸ்தி நதத்க்வசித்" என்று இங்கு உள்ளதுதான் எங்கும் இருக்கிறது என்றும், இங்கு இல்லாதது எங்குமில்லை என்றும் சொல்லும் வகையில் ஆயிரத்தில் ஒன்றாய், மாட்டின் குளம்பளவு நிலத்தில் கடலை நிரைத்தாற் போன்று உள்ளது. பகவானது பரத்வம், வ்யூஹம், விபவம் இவற்றை பேசாமல் அர்ச்சாவதாரத்தை மட்டிலும் பேசுகிறது. அவ்வர்ச்சாவதாரத்திலும் திருவரங்கப்பெரு நகருள் தெண்ணீர்ப்பொன்னி திரைக் கையால் அடிவருடப் பள்ளிகொள்ளும் கருமணியைக் கோமளத்

தைக்கண்ணாரக் கண்டு அம்மாயோனை மணத்தூனை பற்றி நின்று வாயார வாழ்த்துகிற ப்ரபந்தம் ஆகையாலே மற்ற எல்லா ப்ரபந்தங் களைக் காட்டிலும் இதற்குத் தனிச் சிறப்புண்டு.

(உரையாசிரியர்கள் ஒரு நூலுக்கு அவதாரிகை (முன்னுரை) இடும்போது மூன்று விஷயங்களை விளக்கக் கடவர். (1) வக்த்ருவை லக்ஷண்யம் (நூலை ஆக்கியோன் பெருமை), (2) ப்ரபந்த வைலக்ஷண் யம் (நூலின் பெருமை), (3) ப்ரதிபாத்ய வைலக்ஷண்யம் (நூலினால் விளக்கப்படும் பொருளின் சிறப்பு). இதுவரை இந் நூலின் பெரு மையைக் கண்டோம். இனி இந் நூலை இயற்றியவராகிய திருப் பாணாழ்வாருக்கு மற்ற ஆழ்வார்கள் எல்லாரைக் காட்டிலும் மேம் பட்ட பெருமையைக் காணப்போகிறோம்).

முதலாழ்வார்கள் மூவரும் பரத்வத்திலேயே ஈடுபட்டு அர்ச்சாவ தாரத்தைத் தொட்டுக் கொண்டு போனார்கள். திருமழிசைப் பிரானோ, "நான்முகனை நாராயணன் படைத்தான்" என்று தொடங்கி, "இனியறிந்தேன் ஈசற்கும் நான்முகற்கும் தெய்வம்" என்று மற்ற தேவதைகளுக்குப்பரம் பொருளாந்தன்மை கிடையாது என்று மறுத்துச் சொல்வதிலேயே ஈடுபாடுடையவராயிருந்தார். ஸ்ரீகுல சேகரப் பெருமாள் ராமாவதாரத்திலே பெரிதும் ஈடுபட்டவராய் அர்ச்சாவதாரத்தையும் அனுபவித்தார். (அர்ச்சாவதாரமாவது— திருவரங்கம், திருவேங்கடமலை முதலிய கோயில்களிலே மூர்த்தி யுருவில் எழுந்தருளியிருக்கும் நிலை) ஸ்ரீபராசர பகவானையும், ஸ்ரீ வேதவ்யாசரையும் போலே நம்மாழ்வாரும், பெரியாழ்வாரும், ஆண் டாளும் க்ருஷ்ணாவதாரத்தில் பெரிதும் ஈடுபாடு கொண்டு அர்ச்சா வதாரத்தையும் அனுபவித்தார்கள். தொண்டரடிப்பொடி ஆழ்வார் திருவரங்கத்தெம் பெருமானாகிய பெரியபெருமாளையே அனுபவித்த வராயிருந்தாலும், தம்முடைய நிலைமையையும் உணர்ந்து அனுபவிப் பது, பிறர்க்கு உபதேசம் பண்ணுவது, அரங்கனல்லால் தெய்வமில்லை என்று அவனது பரத்வத்தை சபதம் பண்ணி உணர்த்துவது இவை போன்ற மற்ற விஷயங்களில் ஊன்றியவராய்ப் போந்தார். திருமங் கையாழ்வார், "தோரார் நிறைகதிரோன் மண்டலத்தைக் கீண்டு புக்கு, ஆராவமுதமங்கெய்தி, அதில் நின்றும் வாராதொழிவ தொன்றுண்டே; அது நிற்க, ஏரார் முயல் விட்டுக் காக்கைப்பின் போவதே" என்று பரத்வத்தைக் கீழே தாழ்த்தி அர்ச்சாவதாரானுபவத்திலேயே இறங் கினார். அவ்வர்ச்சாவதாரத்திலும் ஓரிடத்தில் நிலைகொள்ளாது "தெருநல் கண்டது நீர்மலை; இன்றுபோய்க்காநெல் சூழ் கண்ண மங்கையுள்காண்டும்" என்று தாமுகந்த ஊரெல்லாம் தன்தாள் பாடிப் பரபரப்பாய்த் திரிந்தார். பெரியபெருமாளையும், அல்லாத திவ்ய

தேசங்களோடொக்க "கண்டியூர்-அரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லை யென்று மண்டினார்" என்று அனுபவித்தார். அவ்வரங்கனிடத்திலும் "நின் னடியிணை அடைந்தேன்" என்று திருவடிகளை அநுபவித்த அளவோடு நின்று விட்டார். நம்மாழ்வார் தொடக்கமான ஆழ்வார்களுக்கு பகவதனுபவம் பண்ணிக்கொண்டிருக்கும்போதே முந்தைய பிறவிகள் பலவற்றிலும் உண்டான துக்கானுபவங்களை நினைப்பதாலும், தனது ஸ்வரூபத்துக்கேற்றதான பகவத் போகம் கிடைக்கப் பெறாமையாலும், தங்கள் துக்கானுபவங்களும் கலந்து பேசப்படுகின்றன.

இத் திருப்பாணாழ்வார், மேலே சொன்ன எந்தவிதமான குறைகளுமின்றி "பூர்ணம்" என்று வேதங்கள் சொல்லுகிறபடியே "பரத்வம்" முதலிய குணங்களால் பூர்ணரான பெரியபெருமாளையே அநுபவிக்கிறார். பிறவிக் குருடனுக்குக் கண்ணைக் கொடுத்துக் கடலைக் காட்டித் தருமாப்போலேயும், அர்ச்சுனனுக்குப் போர் முனையில் தெய்விகக் கண்ணைக் கொடுத்து (கீதோபதேசம் பண்ணும் போது) தனது விச்வரூபத்தையும் காட்டி அநுபவிப்பித்தாப் போலேயும், அக்ரூரர் மாலாகாரர் முதலியவர்களுக்குத் தனது ஸௌந்தர்யம் (வடிவழகு) ஸௌசீல்யம் (எல்லாத்துறையிலும் ஒப்பற்றவனாய் விளங்கும் ஒருவன், எல்லா விதத்திலும் தாழ்ந்தவனாகிய ஒருவனோடு இரண்டறக் கலந்து பரிமாறுகிற குணம்) முதலிய குணங்களை வெளிப்படுத்தி அநுபவிப்பித்தாப் போலே இவ்வாழ்வாரையும் அரங்கன் அநுபவிப்பித்தார். "ஏகைகஸ்மிந் பரமவயவே நந்த ஸௌந்தர்ய மக்னம், ஸர்வம் த்ரக்ஷ்யே கதமிதி முதா மாமதா மந்த சக்ஷு:; த்வாம் ஸௌப்ராத்ர வ்யதி கரகரம் ரங்கராஜாங்க காநாம், கல்லாவண்யம் பரிணமயிதா விச்வபாரீண வ்ருத்தி" (ஸ்ரீ பராசர பட்டர். கண் கண்களைப் பார்த்துச் சொல்லுகிறார். ஒவ்வோரங்கத்திலுமுள்ள அளவுக்கடங்காத அழகுகளை எவ்வாறு கண்டனுபவிப்போம் என்று நெஞ்சமே! நீ அஞ்சாதே. லாவண்யம் என்கிற சமுதாய சோபையின் மூலம் அநுபவிக்கலாம்) என்கிறபடி ஆழ்வாரிடத்திலே உள்ள அன்பு மேலிட்டினாலே பெரியபெருமான் அர்ச்சாவதாரமாயிருக்கச் செய்தேயும், தம்முடைய வடிவழகைக் காட்டித்தர, அந்த அழகுக் கடலை "லாவண்யம்" என்கிற மரக்கலத்தாலே எங்கும் ஒக்க அநுபவிக்கிறார்.

மற்றை ஆழ்வார்களிற் காட்டில் இவர்க்கு வேறுபாடு, "பல்லாண்டு" "போற்றி" என்று ஏறிட்டுக்கொள்ள வேண்டியிருந்தது அவர்களுக்கு. அதவேண்டாதே இவர்க்கு அது பிறவிக்குணமாயிற்று. (பாணர் குலத்தொழில் பாடுவது அன்றோ) "குலங்களாய ஈரிரண்டில்

ஒன்றிலும் பிறந்திலேன்" என்கிறபடியே இவர் தம்மை நாலு வர்ணத்துக்கும் புறம்பாக நினைத்திருப்பர். பெரியபெருமாளும் இவரை அப்படியே நினைத்திருந்தார். எவ்வாறெனின்—பரமபதத்தில் உள்ள நித்ய சூரிகள் நான்கு வர்ணங்களுக்கும் அப்பாற்பட்டவர்களன்றோ. பெரிய பெருமாள் பக்கலிலேயே நாட்டம் செலுத்தும் தொண்டரடிப்பொடி ஆழ்வாரின் தன்மையைப் பார்க்கும்போது மற்ற ஆழ்வார்கள் "இரு கரையர்" என்னலாம்படி இருப்பர். அத்தகைய தொண்டரடிப்பொடியினும் இவர்க்கு ஏற்றமாவது. பிறர்க்கு உபதேசம் பண்ணுவதும், மற்றவர்களைக் கண்டித்துப் பேசுவதும், தன் அனுபவத்துக்கு விரோதி என எண்ணினார். வெறும் பெரியபெருமாளையே அடிக்கும் தலைக்கும் செவ்விதாக அனுபவிக்கிறார். பெருமாளையொழிய வேறொன்றை அறியாதது எப்படி இருக்கிறது என்பதற்கு எடுத்துக் காட்டு காட்டுகிறார். "ஸ்நேஹோ மே பரமோ ராஜந் த்வயிநித்யம் ப்ரதிஷ்டித:; பக்திஸ்ச நியதா வீர! பாவோநாந்யத்ர கச்சதி" (முடிசூட்டு விழாவெல்லாம் முடிந்தபின் "ஆஞ்சநேயா! உனக்கு என்ன வரம் வேண்டும் என்று ராமன் கேட்க அனுமன் கூறுகிறார்: அரசே! எனக்கு உம்மிடத்தில் மிகுந்த ஸ்நேஹம் நிலைத்து நிற்கிறது. பத்தியும் உறுதியாக உள்ளது; இவை தவிர என் சிந்தை எங்கும் செல்வதில்லை" என்கிறார்). (இவ்விடத்தில் "பக்தி", "ஸ்நேஹம்" என்ற இரண்டு சொற்கள் உள்ளன. சிநேகத்திற்கும் பக்திக்கும் வேறுபாடு என்ன என்று நஞ்சியர் பட்டரைக் கேட்டார். அதற்கு பட்டர் தந்த விளக்கமாவது—ஸ்ரீராமர் காட்டிற்குச் சென்றபோது அவரது பிரிவாற்றாமையினாலே தன்னையே முடித்துக் கொண்ட சக்ரவர்த்தி தசரதன் நிலை ஸ்நேஹம். ஆக தசரதன் ராமன்பால் செலுத்தியது சிநேகம். தாசரதி காடு சென்றபோது நானும் உடன் வருவேன் என்று பின்சென்று இடையறாது தொண்டு செய்த இளைய பெருமாள் நிலை பக்தி. (ஆக லக்ஷ்மணன் ராமனிடத்தில் செலுத்தியது பக்தி) ஆக, இப்படி ராமாவதாரமல்லதறியாத திருவடியைப் போலே யாய்த்து, இவ்வாழ்வாரும் அவ்விராமன் ஆராதித்த பெரியபெருமாளை யல்லது பரவ்யூஹ விபவங்களை அறியாதபடியும்.

இவர் அனுபவித்த பெரியபெருமாளின் பெருமையாவது—பரத்வம் போலே வேறொரு தேசத்திலே வேறொருடம்பெடுத்து அனுபவிக்க வேண்டியிருக்கும் துன்பம் கிடையாது. வ்யூஹம் போலே திருப்பாற்கடலளவும் சென்றனுபவிக்க வேண்டியதில்லை. விபவமாகிய ராமகிருஷ்ணாதி அவதாரங்களை அந்தந்தக் காலத்தில் உள்ளவர்கள் தான் காணமுடியும்—என்கிற நிலை இல்லை. பாலில் நெய்யைப் போல உலகெங்கும் ஒவ்வொரு உயிரிலும் மறைந்திருக்கக் கூடிய அந்தர்யாமித்வத்தைப் போலே கண்ணாலே காண முடியாது என்கிற

நிலை இல்லை. அர்ச்சாவதாரங்களிலும், "தெய்வமல்லால் செல்ல வொண்ணாச் சிங்கவேள் குன்றமே" "சலைக்கணை வேடரேயாய்" என்றும் பயங்கரராயிருத்தல், பெரிய ஏற்றமேற வேண்டியிருத்தல், பெருங் கூட்டத்தோடே போய் ஏறினால் "கானமும் வானரமும் வேடுமேயாய" மலை வானவர்க்கே இருத்தல் செய்கையன்றிக்கே", இத் தேசத்திலே இக்காலத்திலே எல்லார் கண்ணுக்கும் விஷயமாய்க் கொண்டு விளங்குவது திருவரங்கம் பெரியகோயிலேயாம். "பக்தர் களும், பகவர்களும் பழமொழிவாய் முனிவர்களும் பரந்த நாடும் சித்தர்களும் தொழுதிறைஞ்சத் திசை விளக்காய் நிற்கின்ற திரு வரங்கம்" என்கிறபடியே எல்லார்க்கும் நின்ற நின்ற நிலைகளிலே பற்ற லாம்படி ஸாவ சுலபராய், வன்பெருவானகமுய்ய, அமரருய்ய மண் ணுய்ய மண்ணுலகில் மனிசருய்ய* உபயவிபூதியையும் (*மண்ணுலகச் செல்வம் விண்ணுலகச் செல்வம் ஆகிய இரண்டையும்) நிர்வகித் துக்கொண்டிருப்பவரன்றோ திருவரங்கத்தெம்பெருமான். இப்படி எல்லாரிலும் மேம்பட்டவராய் எல்லாரையும் அடிமைசெய்வித்துக் கொள்ளக்கூடிய தலைவராய், ஸர்வரக்ஷகராய், எல்லாரும் பற்றத் தக்க வகையில் எல்லையற்ற இன்பமயமாக இருப்பவரன்றோ பெரிய பெருமாள். "சேஷயே புரஸ்தாச் சாலாயாம் யாவந்மே ந ப்ரஸீததி" என்று ஸ்ரீபரதாழ்வான் என் தலையிலுள்ள ராஜ்யமாகிய பெருஞ் சுமையை எடுத்தாலல்லது எழுந்திரேனென்று கிடந்தாப்போலே, ஸம் ஸாரிகளாகிய உங்கள் துன்பங்களையெல்லாம் என் தலையில் வைத் தாலல்லது நான் எழுந்திரேன் என்று படுகாடு கிடக்கிறார். "யோக க்ஷேமம் வஹாம்யஹம்" என்று கிடக்கிறவரன்றோ.

மற்ற எல்லா இடங்களையும் விட்டுப் பெரியபெருமாளைப் பற்று வதற்குக் காரணம் என்னவென்று அருளிச் செய்கிறார். ஸ்ரீவைகுண்டம், திருப்பாற்கடல், திரு அவதாரங்கள், உகந்தருளின திருப்பதிகள் எல்லாம் பெரியபெருமாளேயானாப் போலே, அவ்வவ்விடங்களிலுள் ளான ஸௌந்தர்யம் முதலிய குணங்கள், செயல்கள் எல்லாம் பெரிய பெருமாள் பக்கலிலே காணலாம்.

பெரிய பெருமாளுடைய அழகும் ஐச்வர்யமும் பரம பதத்தில் முளைவிட்டிருக்கும். ராமகிருஷ்ணாதி அவதாரங்களில் இரண்டிலை விட்டிருக்கும். திருவரங்கத்திலன்றோ தழைத்திருக்கும். எங்ஙனே யென்னில் "பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதும் சோராமேயாள்கின்ற எம்பெருமான் செங்கோலுடைய திருவரங்கச் செல்வன்" என்று மற்றவிடங்களில் எல்லாம் அளவுபட்டிருப்பவர் இங் கேயன்றோ அளவிறந்து காட்சியளிக்கிறார். தன்னை விரும்பியவர்கள் அனுபவிப்பது மட்டுமின்றி "பகவான்" என்றால் முகத்தை மாற

வைத்துக்கொள்பவரும் கண்டவாறே அனுபவிக்கலாம்படி எளிமை யாயிருக்கும் ஏற்றம் இங்குண்டு. ஒரு வஸ்துவுக்கேற்றம் குணங்களின் மிகுதியாலே அன்றோ. குணங்கள் பயன்படுவது இங்கேயே. குணத்தில் ஈடுபடுபவர்கள் இவ் விஷயத்தைத் தவிர வேற்றதும் அறியார்கள். "யதோவாசோ நிவர்த்தந்தே" என்று வேதங்களுக்கும் எட்டாத ஸர் வேச்வரனை ஆற்றிலே தண்ணீரைக் காணுமாப் போலே இக்காவிரி ஆற்றினிடையே கண்டு அனுபவிக்கலாம்படியிருக்கிற இடமன்றோ. "மழைக் கன்று வரை முன்னேந்தும் மைந்தனே மதுர ஆறே" என்று போற்றப்படுவது இந்த அரங்கனாகிய ஆறுதானன்றோ.

இனி இந் நூலினால் விளக்கப்படும் பொருள் கூறப்படுகிறது. அர்த்த பஞ்சகம் என்று சொல்லப்படுகிற (1) பரமாத்மாவின் தன்மை, (2) ஜீவாத்மாவின் நிலை, (3) ஜீவன் பரம்பொருளை அடைவதற்குரிய உபாயங்களின் நிலை, (4) விரோதிகளின் நிலை, (5) எம்பெருமானை அடைவதால் கிட்டும் பயன் ஆகிய ஐந்தும் இந் நூலில் விளக்கப்படு கிறது. இவர், தமக்கு அடையவேண்டிய பொருளும், அதனை அடை விப்பவரும், அதில் ருசியை உண்டாக்குபவரும், அதனை அடைய வொட்டாது தடுக்கக் கூடிய விரோதிகளைப் போக்கித்தருபவரும் ஆகிய எல்லாமே பெரியபெருமாள் என்கிறார். இவ்வாழ்வாருக்கு மற்ற உலக விஷயங்களில் ருசியின்மையும், பகவத் விஷயத்தில் விலக் காமல் இருத்தலும், இவ்விரண்டும் விளைந்த மாத்திரத்தில் பெரியபெரு மாள் தம்முடைய ஸ்வரூப ரூபகுண விபூதிகளைக் காட்டக் கண்டு அனு பவித்து மகிழ்கிறார். "ஆநயைநம் ஹரிச்ரேஷ்ட" என்று சுக்ரீவ மகா ராஜரையிட்டு ஸ்ரீவிபீஷணாழ்வானை அருள்பாடிட்டாப் போலே, தாழ்ச்சி மற்றெங்கும் தவிர்ந்து, கடைத் தலையிருந்து வாழும் சோம் பரான லோக ஸாரங்க மகாமுனிகளை அருள்பாடிட்டு "நம்பாடு வானை அழைத்துக் கொண்டு வாரும்" என்ன, அவரும் "அருள்பாடு அருள்பாடு" என்று சொல்ல; இவரும் "அடிப்பாணன் அடிப்பாணன்" (மிகவும் இழிந்தவன்) என்று பின்வாங்க, அவரும் விடாதே தோள் மேலே எழுந்தருளுவித்துக் கொண்டுபோக, வழியிலே ஒன்பது பாட்டுப்பாடித் திருப்பிரம்புக்குள்ளே (கர்ப்பகிருகத்தின் உள்ளே) நின்று பத்தாம் பாட்டுப் பாடித்தலைக் கட்டுகிறார்.

**1. அமலனாதி பிரான் அடியார்க் கென்னை ஆட்படுத்த**
**விமலன் விண்ணவர்கோன் விரையார் பொழில்**
**வேங்கடவன்**
**நிமலன் நின்மலன் நீதிவானவன் நீள்மதின் அரங்கத்தம்மான்**
**திருக்கமல பாதம் வந்தென் கண்ணினுள்ளன**
**ஒக்கின்றதே.**

*பதவுரை :*

அமலன்—பரிசுத்தனாய், ஆதி—உலகுக்கெல்லாம் காரண பூதனாய், பிரான்—எனக்கு உபகாரகனாய், என்னை—உலகியலில் மயங்கிக் கிடக்கும் என்னை, அடியார்க்கு—தன்னுடைய தொண்டர்க்கு, ஆட்படுத்த—அடிமையாக்குகையாலே வந்த, விமலன்—பேரொளியை உடையவன், விண்ணவர்கோன்—நித்ய சூரிகளுக்கும் தலைவனாயிருந்து கொண்டு இந் நிலவுலகிலுள்ளாரை அடிமைகொள்ளுகைக்காக, விரை ஆர்—பரிமளம் மிகுந்துள்ள, பொழில்—சோலையை உடைய, வேங்கடவன்—திருமலையிலே வந்து தங்கினவனாய், நிமலன்—நான் விரும்பாமலேயே எனக்கு உபகாரம் செய்ததனால் ஒளிமிக்கவனாய், நின்மலன்—தன்னடியார்க்கு என்னை அடிமையாக்குகையால் வந்த பேரொளி உடையவனாய், நீதிவானவன்—"உடையவன் உடைமை" என்கிற முறை தப்பாத பரமபதத்திலே உள்ளவனாய், நீள்—உயர்ந்த, மதிள்—திருமதிள்களை உடைய, அரங்கத்து—கோயிலிலே கண் வளர்ந்தருளுகிற, அம்மான்—எல்லார்க்கும் தலைவனாய் விளங்குமவனுடைய, திரு—பெரியபிராட்டியாரும் கூசிப் பிடிக்கத்தக்கதாய், கமலம்—செந்தாமரை போன்ற, பாதம்—திருவடிகளானவை, வந்து—தானே வந்து, என் கண்ணினுள்ளன—என் கண்ணுக்கு இலக்காய், ஒக்கின்றவே—பழைய நிலைமை குலையாதிருந்ததே என்று ஈடுபடுகிறார்.

*அவதாரிகை : (முகவுரை)*

முதற் பாட்டு, பெரியபெருமாள் திருவடிகளின் அழகு மேல் விழுந்து தம்மை அடிமைகொண்டது என்கிறார். ஆகாயத்தினின்றும் ஸஹ்ய மலையிலே பொழிந்து, அங்கு நின்றும் காவிரியாறாய்ப் போந்திழிந்து வாய்க்கால்களாய்ப் புகுந்துபோய், நாட்டார்க்குப் பயன்படுமாப்போலே, பரமபதமாகிற ஆகாயத்தினின்றும் திருவேங்கட மலையிலே வந்திறங்கி தெற்கு நோக்கி வந்து பள்ளமான ப்ரதேசமான கோயிலிலே தேங்கிக் கீழ்மேலாகக் கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாளாகிற மதுர ஆற்றினிடைப் புகுந்து ஓடுகிற காலை அனுபவிக்கிறார்.

*விளக்கவுரை :*

(அமலன்) ஸ்ரீவால்மீகி பகவான் "கோ குணவாந்" என்று ஸ்ரீநாரதரை வினவ, இக்ஷ்வாகு வம்ச ப்ரபவ:" என்று ஸௌசீல்ய குணத்தை முந்துறச் சொன்னார். நம்மாழ்வார், தைத்திரீய உபநிஷத்தில் ஆநந்தவல்லியில் "ஆநந்தோ ப்ரம்மேதி வ்யஜாநாத்" என்று கூறியதையே தமது திருவாய்மொழித் துவக்கத்திலேயே "உயர்வற உயர்நலம் உடையவன்" என்று அனுபவித்தார். இவரும் தம்முடைய தாழ்ச்சியைப் பாராதே எம்பெருமான் மேல் விழுந்தபடியைக் கண்டு

அவனுடைய இழிவுக்கு எதிர்த்தட்டாயிருக்கும் தன்மையை முற்பட அனுபவிக்கிறார். தமது பிறப்பால் உண்டான இழிவை எண்ணிப் பார்த்து இவர் அகல, அதையே பற்றுக்கோடாகக் கொண்டு எம்பெரு மான் திருவுள்ளம் புண்பட்டு மேல்விழுந்தவிடத்திலும் அப்பெரு மானுக்கு அவத்யம் (கேடு) ஏதும் இல்லாது நிமலனாயிருக்கிறபடி யைக்கண்டு "அமலன்" என்கிறார். "என்கண் பாசம் வைத்த பரஞ் சுடர்சோதி" என்றார் நம்மாழ்வாரும்.

(அமலன்) ஸம்ஸாரிகளைப் போலே ஹேய (இழிந்த) குணங் களின் ஸம்பந்தம் துளியுமில்லாதவனாய் (1) அபஹத பாப்மா (பாப மில்லாமை), (2) விஜர: (மூப்பின்மை), (3) விம்ருத்யு: (மரண மின்மை), (4) விசோக: (துயர மின்மை), (5) அவிஜிகத்ஸ: (பசி யின்மை), (6) அபிபாஸ: (தாகமின்மை), (7) ஸத்யகாம: (தனக்கு வேண்டியவையெல்லாம் நித்யமாக இருக்கப் பெற்றவன்),(8) ஸத்ய ஸங்கல்ப: (நினைத்ததை முடிப்பவன்) ஆகிய எட்டுக் குணங்களை என்றும் உடையவனான சுத்தன் என்றபடி. இவன் சுத்தனாகை யாவது, தானொருத்தன் சுத்தனாகையன்றிக்கே தன்னோடு சம்பந்தப் பட்டவர்களையும் சுத்தனாக்கவல்ல திறனுடைமை. 'துயரறு சுடரடி" என்று நம்மாழ்வாரும், "பாவனஸ் ஸர்வலோகாநாம் த்வமேவ ரகுநந்தந" என்று ராமனை அகஸ்தியரும் கூறினார்கள். (ஆதி) இப்படி இழிந்தவரான உம்மை மேல்விழுந்து ஏற்றுக்கொண்டதற்குக் காரணம் என்னென்ன, பெற்றவர்களாலே விடப்போமோ என்கிறார். (ஆதி) ஸ்வரூபாதிகளைக் கண்டு எல்லோரும் மேல் விழும்படி இருக்கிறதான், ஆழ்வார் விஷயத்தில் இழிவான தன்மையைப் பாராதே மேல் விழுந் தான் என்கை. பகவான், தன்னை அனுபவித்தவர்களை வேறொன்றிற் போகவொட்டாதபடியிருக்கிறான் என்றுமாம். என்னுடைய தாழ்வைப் போக்கி தன் பக்கலிலே சேர்த்துக்கொள்ளுகையாலே என் பேற்றுக்கு முற்பாடன் ஆனவன். (ஆதி) பிரளயத்தில் அழிந்த உலகத்தை உண் டாக்கினாப் போலே நான் அழித்துக்கொண்ட ஸ்வரூபத்தை உண் டாக்கினவன். ஆக, அமலன், ஆதி ஆகிய இரண்டு சொல்லாலும், எம் பெருமான் குற்றங்களைப் போக்கடிக்க வல்லவன் என்றும், கல்யாண குணங்கள் அனைத்தும் உள்ளவன் என்றும் கூறப்பட்டது. (பிரான்) கீழ்ப்பண்ணின உபகாரத்தை நினைத்து "பிரான்" என்கிறதாதல், மேல் பண்ணப் புகுகிற உபகாரத்தை நினைத்துப் பிரான் என்கிறதாதல். (பிரான்) என் தாழ்வு பாராதே என்னை அநுக்ரஹித்த உபகாரகன்.

(அடியார்க்கென்னை ஆட்படுத்த விமலன்) "எனக்கு" என்றும், "பிறர்க்கு" என்றும் இரிந்த என்னை, தனக்கும் தன்னடியார்க்கும்

ஆக்கின பரிசுத்த ஸ்வபாவன். என் தலையைப் பிடித்துத் தன் காற்கீழே இட்டுக் கொண்டான். "ரத்ந ஹாரீச பார்த்திவ :" (உயர்ந்த ரத்தினங் களைப் பறித்துத் தன்னதாகக் கொள்ளுமவன் அரசன்) என்னுமாப் போலே நலலது கண்டால் "அவன் தன்னடியார்களுக்கு எனறிறே இருபபது. தனனளவில் அடிமையாக்கிக் கொண்டதோடு நில்லாது தனனடியார்கள் அளவும் அடிமையாக்கிக் கொண்டு, அதனால் தனக் கடிமைப் பட்டிருககும் தன்மையை நிலைநிற்கும்படி பண்ணினான். (அடியார்க்கு) ஜீவாத்மாவுக்கு நிலைநின்ற வேஷம் அவனுக்கு அடி மையாயிருததலே ஆதலால் "அடியார்க்கு" என்றார். இவர்களுக்கு ஊரும், பேரும் தாருமாகிறது அவனுக்கு சேஷத்வமே (அடிமையா யிருத்தலே) ஆகும். (என்னை) தேஹாத்மாபிமாநிகளும் (உடலையே உயிரெனக் கருதும் இம்மண்ணுலக மாந்தர்) தீண்டாத என்னை ; சரீர போகத்துக்கு அடிமை செய்து போந்த என்னை. தன தன்மையையும் சீர்மையையும அறியாத என்னை, நன்மைக்கு அவனுக்கு நிகர் ஆரு மில்லாதாப்போலே தீமைக்கு எனக்கு நிகர் யாருமில்லை என்றுள்ள என்னை (ஆட்படுத்த), பகவச சேஷத்வத்தளவில் நின்றால் மீள வழியுண்டு, பாகவத சேஷத்வத்தளவும சென்றால் மீளப் போகாதே. அன்பின் மிகுதியால் வருவது ஆதலால், ஒரு நிலத்தைப் பல கை மாறி விலை பேசி விற்று விட்டால் மீளவே வழியில்லை யன்றோ. ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு வானர வீரர்களுடைய கடாக்ஷம் பெருமாளுடைய கடாக்ஷத்துக்கு முற்பட்டாப்போலே இவர்க்கு அவனடியார்களது கடாக்ஷம் முற்பட்டபடி "ஆநயைநம் ஹரிச் ரேஷ்ட" என்று சுக்ரீவனையிட்டு அழைத்து வரச் சொன்னார் அங்கு. இங்கு லோகஸாரங்க மஹா முனிகளைப்போய் ஆழ்வாரை அழைத்துக் கொண்டு வாரும் என்றார்.

(அடியார்க்கென்னை ஆட்படுத்த விமலன்) அவனடியார்களோடு ஸமமாக எண்ணியிராதே அவர்களுக்கு என்னை அடிமையாக்குவித்த பரிசுத்த ஸ்வபாவன். முனிவர் இவரைத் தோளிலே சுமந்து நிற்கும் நிலையில் இவர் அடியவராயிருப்பது எவ்வாறு எனில் ; "தோளிணை மேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும்" என்று அவன் திருத் துழாய்மாலையைத் தலையிலே சுமந்து நின்றாலும், அத்திருத் துழாய் எம்பெருமானுக்கு அடிமைப்பட்டதாக அன்றோ கருதப்படுகிறது. அது போன்று இவரும் ஆட்பட்டபடி (விமலன்) என் சிறுமை பாராதே அவனடியார்க்கு என்னை அடிமையாக்குகையால் வந்த "ஔஜ்வல்யம் (*ஒளி வீசித்திகழும் தன்மை) பெரியோர்கள் எதிரிகளின் தரத்தைக் கணிசியாது தம் கௌரவத்துக்குத் தக்க வகையிலன்றோ கொடுப்பது.

(விண்ணவர்கோன்) அளவிலாமையாலோ இழிந்தவரான உம்மை இவ்வண்ணம் அருள் புரிந்தான் எனில் ; ஒரு பரம பதத்தவர்கள் அனை

வரும் சேர்ந்து தன்னைத் தாலாட்ட இருக்கிறவனன்றோ கதுர் பொறுக்கி (உஞ்சவ்ருத்தி பண்ணி) ஜீவிப்பாரைப் போலே நித்ய ஸம்ஸாரியாக இருக்கிற என்னை நித்யாகளோடும் முக்தாகளோடும் ஒத்த நிலையில என்னை இருத்தி அனுக்ரஹித்தான். இவ்வளவு ஔதார்யம் கற்றதும் அவர்களிடமே என்றுமாம. "அமமாபஸ் துல்யோ பவது" என்றார்களிறே. அவ் விண்ணவர்களாலும் எல்லை காணவொண்ணாதவன்.

(விரையார் பொழில் வேங்கடவன்) இம்மண்ணுலகில் ஒருவரில் லாமையாலே உம்மை அங்கீகரித்தார் என்ன, "நாமேவ யந்தும் உபயே வஹந்தே" (யஜுர் 1-4-12) "சக்ஷுர்தேவா நாம உதமர்த்யா நாம்" (ஆரணம) என்றும, "கண்ணாவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்கு" என்றும் சொல்லிறபடியே இம்மண்ணுலகிலுள்ள முமுக்ஷுக்கள் (மோட்சத்தை அடைய விரும்புமவா) பரமபதத்தில் உள்ள நித்யர்கள் முக்தர்கள் எல்லாரும் இரண்டு "வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்" என்று வேண்டி நிற்பர். இப்படி மண்ணவர், விண்ணவர் ஆகிய இரு திறத்தாரும் அடிமை செய்ய அடிமை கொள்ளுகிற பூர்ணனல்லவா. தன் மேன்மை பாராதே என்னை ஏற்றுக்கொண்டான் என்கை.

(விரையார்பொழில் வேங்கடவன்) பரிமளம் நிறைந்த திருச் சோலையை உடைய திருமலையை உடையவன். பெரிய பெருமாளை அனுபவிக்க இழிந்தவர் திருவேங்கட முடையான் பக்கல் போவானென் என்ன ; ஆற்றிலே அமிழ்கிறவர் ஒரு காலைத் துறையிலே ஊன்றினால் பிழைக்கலாமே என்று எண்ணுமாப்போலே, இவரும் பெரிய பெரு மாள அழகிலே அழுந்துகிறவர் ஆகையாலே திருமலையிலே கால் தாழ்ந்தார். அதுவும் ஒரு மடு என்பதனை இவர் அறிந்திலர். இது பிள்ளை திருநறையூர் அரையர் என்கிற ஆசாரியர் கருத்தாகும். இது பற்றி ஸ்ரீபராசர பட்டர் அருளியதாவது : ஒருவனைக் கவிபாடும் போது அவனுடைய வரத்துச் சொல்லியிறே கவிபாடுவது; பரம பதத்தில் நின்றும் ஸ்ரீமதுரையிலே தங்கி, திருவாய்ப்பாடிக்கு வந்தாப் போலே ஸ்ரீவைகுண்டத்தின்ன்றும் திருமலையிலே தங்கிக் காண் திரு வரங்கம் வந்தது என்று (விரையார்) நித்ய சூரிகளை உடையவனா யிருப்பதற்குமேலே ஒரு ஐச்வர்யம்.

(விண்ணவர்கோன் விரையார் பொழில் வேங்கடவன்) ஆற்றிலே அழுந்துவார் ஆழங்காலிலே இளைப்பாறத்தேடுமாபோலே விண்ணவர் களும் வந்தடிமை செய்யுமிடம் (வேங்கடவன்) அர்ச்சாவதாரத்துக்குப் *பொற்கால் (* தங்கமயமான அடிக்கல் நாட்டுதல்) பொலியவிட்ட இடம். (நிமலன்) நிர்ஹேதுகமாக (காரணமின்றி) அருள் புரிந்த

சுத்தியை உடையவன் (நிமலன்) தன் பேறாக எண்ணி அனுக்ரஹித்த சுத்தியை உடையவன். ஆழ்வாரைப் பெறுகைக்குப்பச் செயிட்டவனும் (முயன்றவனும்) தானே. ஆழ்வார் யாதொன்றும் கோதிருக்கச் செய்தே தானே முன்வந்து அருள்புரிந்தமையால் வந்த ஔஜ்வல்யம் (ஒளி விசித்திகழும் தன்மை) "அமலன்" என்றது இவரைத் தனக் காக்கினபடி; "விமலன்" என்றது தன்னடியார்க்காக்கினபடி; "நிமலன்" என்றது நான் ஏதும் உபாயம் செய்யாதிருக்கச் செய்தே என் காரியம் செய்தான் என்கை; (நின்மலன்) ஆழ்வார்க்கு உபகாரம் செய்ததாக எண்ணாது தன்பாக்யமாகக் கருதுகை. "க்ருதக்ருத்யஸ்ததாராம:" என்று ராமன் ராவணனை வதம் செய்த பிறகு விபீஷணனுக்குப் பட்டம் கட்டியபோது தன் பேறாகக் கருதியதுபோன்று கருதினார். உடையவன் உடைமையைப் பெற்றாற்போன்று தன்னதாம்படியிருக்கிற சுத்தியை உடையவன்.

(நீதிவானவன்) சேஷி சேஷத்வங்கள் (ஆண்டான் அடிமை என்ற தன்மைகள்) முறை மாறாத பரமபதத்தில் உள்ளவன். "நானே ஈச் வரன்" என்று அவனுக்கு எதிர் வழக்கிட்டிருக்கும் இடமல்லவா இம் மண்ணுலகம். அங்கு (பரம பதத்தில்) கலக்குவாருமில்லை; கலங்கு வாருமில்லை. இங்கு (மண்ணுலகில்) கலக்குவாரும் உண்டு; கலங்கு வாரும் உண்டு.

(நீள்மதிள் அரங்கத்தம்மான்) நீதிவானவன் என்னதும் "நீள்மதிள ரங்கத்தம்மான்" என்கிறார். "அளப்பரிய ஆரமுதை அரங்க மேய அந்தணனை" (திருமங்கை மன்னன்) என்னுமாப்போலே (நீண்மதிள ரங்கம்) ரக்ஷகத்வத்துக்குப்போரும்படியான மதிளையுடைய பெரிய கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற பரமாத்மா. இப் பாசுரம் கேட்ட தனால்தானன்றோ திருமங்கையாழ்வார் திருமதிள் செய்தது. அழகிய வாயாலே இதருளிச் செய்த பின்னர்த்தான் திருமாளிகைகளும் திருக் கோபுரங்களும் பெருகின. (அம்மான்) பரம பதத்தில் உள்ளாரோடு ஒத்த ஸம்பந்தம் இங்குள்ளார்க்கு இருந்தபடியாலன்றோ இங்கு வந்து சாய்ந்தருளிற்று. (அம்மான்) திருமலையில் பேரின்பம் அனுபவித்து மாளாததினாலே மீண்டும் கோயிலிலே புகுகிறார். வெள்ளத்தைக் கள்ளமடையாலே பள்ளத்தே விடுவாரைப்போலே திருவேங்கடமுடை யான் வடக்குத்திரு வாசலாலே கோயிலிலே வந்து புகுந்தான் என்றுமாம்.

(திருக் கமலபாதம்) வெள்ளப் பெருக்குமிக்க ஆற்றிலே இறங்கு மவர்கள் தெப்பம்கொண்டு இழியுமாப்போலே ஒரு தாமரைப் பூவை திருஷ்டாந்தமாக்குகிறார். செவ்வி (அழியா அழகு)

நாற்றம், மலர்ச்சி இவை தாமரைப் பூப்போலே இருக்கையாலே. சூரியன் முன்னிலையில் மலரும் தாமரைபோலே, அடியவர்கள் ஸந்நிதியில் மலரும் தாமரையாய்த்து திருவடிகள். பிராட்டி திருமுலைத் தடங்களிலும், திருக்கண்களிலும் ஒற்றிக்கொள்ளும் திருவடிகள். இவருடைய தளிர்புரையும் திருவடிகள் இருக்கிறபடி. "அம்மான் திருக்கமல பாதம்" என்கையாலே அடையப்படும் பொருளும் அடைவிப்பதுமான திருவடிகள் என்கை.

(வந்து) அயன், அரன், ஸநகாதியோகியர் முதலியவர்களாலும் நினைத்தற்கரிய திருவடிகளன்றோ, என்னளவும் வந்து அநுக்ரஹித்தது. கடல் கடந்த நாடுகளிலிருந்து சரக்குச் சேரவேண்டினால் பாதிப்பாதி வழியாகிலும் வருதல், உறுதியாகப் பற்றுதல் செய்யவேணுமே; அவ்வாறின்றி வழி வந்தாலும் தானே; பற்றினாலும்தானே என்கிறது. (என் கண்ணினுள்ளன) ஸதைகரூபா கண்ட கண்களுக்கு இவை விஷயமாகின்றன. (நீதிவானவன் கமலபாதம் என் கண்ணினுள்ளன) பரமபதத்தில் நித்ய ஸூரிகள் கண்களுக்கிலக்கானவனல்றோ என் கண்ணுக்கிலக்காகி நிற்கிறார். உள்ள நாளெல்லாம் விரோதம் பாராட்டி வந்தேன். போக்கற்றவாறே கண்ணைச் செம்பளித்துக் கண்ணை யுறைத்து, உள்ளே புகுந்து நிற்கையாலே என் கண்ணினுள்ளன. அன்றியே தம் கண்ணாலே பார்க்கை அவத்யமென்று கண்களைச் செம்பளித்தார். கண்ணினுள்ளே ப்ரகாசிக்கத் தொடங்கிற்று. (ஒக்கின்றே) ப்ரயோஜநம் இரண்டுக்கும் ஒத்து நின்றது. எம்பெருமானுக்கு ஸௌசீல்ய ஸித்தி. ஆழ்வார்க்கு ஸ்வரூப ஸித்தி. அவன் திருவாயின் செவ்வி என் கண்ணுக்கிலக்கானவிடத்திலும் பழைய நிலையாயிருக்கிறது என்கிறார். அல்லது உலகிலுள்ள ஸம்ஸாரிகளைப் பார்த்து திருவடியின் தர்சனம் உங்களுக்கும் ஒக்குமே என்கிறார்.

நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழிக்கும் இப்பாசுரத்துக்கும் உள்ள ஒற்றுமையாவது: (அமலன்) உயர்வற உயர்நலமுடையவன், (அவி) யவன், (பிரான்) மயர்வற மதிநலமருளினன் (அடியார்) பயிலும் சுடரொளி. (விண்ணவர்கோன்) அயர்வறும் அமரர்கள் அதிபதி, (வந்து) நம்மாழ்வார் "துயரறுசுடரடி தொழுதெழு" என்றார். இவர்க்கோ அத்திருவடிகளே வந்தன.

2. உவந்த உள்ளத்தனாய் உலகமளந் தண்டமுற
நிவந்த நீள்முடியன் அன்று நேர்ந்த நிசாசரரைக்
கவர்ந்த வெங்கணைக் காகுத்தன் கடியார் பொழில்
அரங்கத்தம்மான் அரைச்
சிவந்த ஆடையின் மேல் சென்றதாம் என சிந்தனையே

பதவுரை :

உவந்த உள்ளத்தனாய்—(என்னை அகப்படுத்துகையாலே) மகிழ்ந்த மனத்தினனாய்க்கொண்டு, உலகமளந்து—மூன்று உலகத்தையும் அளந்து, அண்டமுற—அண்டங்கள் அனைத்தும் செல்லும்படி, நிவந்த—உயர்ந்தவனாய், நீள்முடியன்—அனைத்து ராஜ்யங்களுக்கும் தலைவன் என்பதை உணர்த்தும்படியான கிரீடத்தை உடையனாய், அன்று—ஜநஸ்தானத்திலே இருந்த அன்று, நேர்ந்த—எதிர்த்துப் போருக்கு வந்த, நிசாசரரை—கரதூஷணாதி ராட்சஸருடைய பிராணன்களை, கவர்ந்த—பறித்த, வெம்—கொடிய, கணை—பாணங்களை உடையவனாய், கடியார்—நறுமணம் மிக்க, பொழில்—சோலையாலே சூழப்பட்ட, அரங்கத்து—கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனான, அம்மான்—ஸர்வ ஸ்வாமியானவனுடைய, அரை—திருவரையில் சாத்திய, சிவந்த ஆடையின் மேல்—திருப்பீதாம்பரத்தின்மேலே, என் சிந்தனை—எனம் பெண்களிடத்து ஆழக்கடவ என்நினைவானது, சென்றது ஆம்—சென்றதே என்று ஆச்சர்யப்படுகிறார்.

அவதாரிகை :

இரண்டாம் பாட்டு. முதற் பாட்டில் "அரங்கத்தம்மான் திருக்கமலபாதம் வந்து என் கண்ணினுள்ளன ஒக்கின்றவே" என்று திருவடிகள் தானே தம்மை அனுக்ரஹித்துத் தம் திருவுள்ளத்திலே ஒளி வீசித் திகழ்ந்தபடியைச் சொன்னார். இப்பாட்டில் "வந்துனதடியேன் மனம் புகுந்தாய்; புகுந்ததற்பின் வணங்கும் என் சிந்தனைக்கினியாய்" என்கிறபடியே அவன் அனுக்ரஹித்துப் புகுந்தபின்பு திருவடிகளோடு நில்லாது, அத்தோடு சேர்ந்த திருப்பீதாம்பரத்தளவும் செல்லத் தம் மனம் ஆசைப்படுகிறபடியைச் சொல்லுகிறார். அப்பொழுது ஈன்ற தலைச்சன் கன்றை உடைய இளம் பசு, தன் கன்றுக்கு பழக்கமல்லாத தால் முதலில் தானே தன் முலையை அதன் வாயிலே கொடுக்கும். பின்பு அக்கன்று அப்பாலின் சுவை அறிந்தபடியால் தாய்ப்பசு காலாலே எற்றினாலும், மேற்சென்று பால் பருக அதன்மேல் விழும். அதைப்போன்று எம்பெருமான் திருவடிதானே வந்து ஆழ்வாருக்குச் சுவை உண்டானபடியை இந்தப் பாட்டில் சொன்னார். இதில் தம் [illegible] [illegible] மேல்விழுந்தபடியைச் சொல்லுகிறார். திருவடிகளிலே இருந்த திருவுள்ளம் திருப்பீதாம்பரத்தின் மேலே சேர்ந்தபடி எங்ஙனே என்னில்—தாமரைக்கு சேர்ந்தால் விஷயத்தின் வெள்ளைக்கு ஏற்றமாகும். அதையாவது வெள்ளம் அளவுபட்டதுமல்ல; அலை [illegible] சார்ந்து பொங்கியெழுந்து அலை வீசுகிறாற்போல் உள்ளேகிடந்தகொந்தளிப்பு, கடலை அளந்து முடித்த

பின்தான் கரையேறுமா என்ன ? ஓரலையிலிருந்து மற்றோரலைக்கு எறித்திரியுமத்தனையிறே.

கீழ்ப்பாட்டில், "நிமலன்; நின்மலன்" என்று எம்பெருமான் ஆழ்வாரது விருப்பத்தை எதிர்பாராமலே தனக்குரிய ப்ரயோஜநமான தன் திருவடிகளை உதவினான் என்றன்றோ இவர் சொல்லியது. "ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதிக்ஷதே" என்று பகவான் ரக்ஷிக்கப்படுகின்ற ஜீவாத்மாவின் ஆவலை எதிர்பார்த்திருப்பவனல்லவா; ஆகையால் இது பொருத்தமாகத் தோன்றவில்லையே என்ன ; இந்த உலகம் முழுதும் தன்னது என்று மகாபலி எண்ணியிருந்தபோது, இவ்வுலகமெல்லாம் பிறர்க்குச் சொந்தமானது என்று கருதப்பட்டிருந்த காலத்தில் இவ்வுலகத்தவர்களது விருப்பமில்லாமலேயே எல்லார் தலையிலும் தன் திருவடிகளை வைத்து இதுதானே ப்ரயோஜநமாக உகந்து செய்யும் விதம் இவர்க்கு ஆரம்பமே தொடங்கி உள்ள பழக்கமன்றோ. இன்று புதிதாக வருவதொன்றல்லவே.

விளக்கவுரை :

(உவந்த உள்ளத்தனாய்) ஆழ்வாரை அகப்படுத்துகையால் வந்த மகிழ்ச்சி. ஸர்வேச்வரனாய், திருமகள் கேள்வனாய், எல்லா விருப்பங்களும் நிறைவேறப் பெற்றவனாய், "அவாக்ய நாதர:" (ஒருவரோடு பேசி ஒரு கார்யத்தை ஸாதிக்க வேண்டிய நிலையில் இல்லாமையால் யாருடனும் பேசாதவன்; யாரையும் ஆதரித்துத் தனக்கொரு கார்யம் ஆகவேண்டிய நிலையில் இல்லாததால் யாரையும் கௌரவிக்காதவன்) என்று பரிபூர்ணனான பகவான், "கதாபுந: சங்க, ரதாங்க கல்பக, த்வஜாரவிந்தாங்குச வஜ்ரலாஞ்சநம். த்ரிவிக்ரம ! த்வச்சரணாம்புஜ த்வயம், மதீய மூர்த்தாநம் அலங்கரிஷ்யதி", என்றும், "படிக்களவாக நிமிர்த்த நின்பாத பங்கயமே தலைக்கணியாய்" (தி—9-2-2 என்றும் சிலர் விரும்பாது நிற்க, "பாதாருந்துதமேவ பங்கஜரஜ:" என்று மென்மையை உடையதாய், பெரிய பிராட்டியார் திருக்கைகளால் வருடவும் பொறாத அந்தத் திருவடிகளைக் காடுமேடுகளென்று பாராதே உயிருள்ளவைகள் உயிரற்றவைகள் என்ற வேறுபாடின்றி பரப்பினால், "இப்படி உபகாரம் செய்வதே" என்று இவர்கள் உகக்க வேண்டியதிருக்க, இவர்கள் அறிவுகேடு காரணமாக விலக்காமலிருக்கப்பெற்றோமே என்று இரண்டு மடங்கு மகிழ்ந்த திருவுள்ளத்தை உடையவனாய். குழந்தைகள் இன்னது என்று அறியாமலே பால் குடிக்க அது கண்டு உகக்கும் தாயைப் போலே உவந்த திருவுள்ளத்தை உடையவனாய்.

"க்ருதக்ருத்யஸ்ததாராம : விஜ்வர : ப்ரமுமோத ஹ" என்று ஸ்ரீ விபீஷணன், ஸ்ரீராமனுடையவும், தம்பிமார்களுடையவும் வாஸனையாலே, லங்காஸாம்ராஜ்ய முடியை விலக்குகிறானே என்று பெருமாள் வெறுத்திருக்க, ராவண வதம் முடிந்தபின், ஸ்ரீவிபீஷணன் ஸம்மதித்து பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டபின் உகந்தாப்போலே, மக்கள் பகைமைகொண்டு விலக்காமலிருக்கிறார்களே என்பதையே காரணமாகக் கொண்டு திருவடிகளை வைக்கப்பெறுகையாலே மிகவும் மகிழ்ச்சியுற்றவனாய். எதிரொளி அறியாதிருக்கச் செய்தே தானே மகிழ்வதுதான் வாத்ஸல்ய குணமன்றோ. உறங்குகிற குழந்தையைத் தாய் அணைத்துக் கொண்டு ஆநந்திப்பதுதான் வாத்ஸல்யமாகும். இவற்றைப் பிரிந்தால் துயருறுவதும் தானேயன்றோ. "வ்யஸநேஷு மநுஷ்யாணாம்" (ஸ்ரீராமன் அயோத்தி மக்கள் துயரைக் கண்டு தன் துயரமாகக் கருதிப் பெரிதும் வருந்தினான்).

(உலகமளந்து) உயர்குலத்தவன், தாழ்குலத்தவன், ஆண்பெண், அறிஞன், அறிவிலி, முதலிய வேற்றுமை பாராதே எல்லார் தலையிலும் ஒக்கத் திருவடிகளை வைத்தபடி. (உலகமளந்து) வைத்த திருவடிகள் தலையிலே வந்திருந்தாலும் மகிழ்வதை அறியாத உலகத்தையல்லவா தான் விடாது அளந்தது. குணமுள்ளது குணமற்றது என்றெல்லாம் ஆராயாமல் எல்லார் தலையிலும் ஒக்கத்திருவடிகளை வைத்தபடியாலே, பக்திமான்களும் பாதகரும் ஒக்க வாழ்ந்து போனார்கள். (அண்டமுற நிவந்த நீண்முடியன்) வானத்தின் உச்சியைச் சேர்ந்த கிரீடத்தை உடையவன். விரும்பியது கிட்டப்பெற்ற மகிழ்ச்சியால் அண்ட கடாஹம் (வானத்தின் உச்சி) வெடித்துச் சிதறும் வண்ணம் வளர்ந்தபடி. "அண்டம் மோழையெழ முடிபாதமெழ" என்றார் நம்மாழ்வாரும். "நிவந்த" என்கிற சொல் உயர்வு என்றும் ஓங்கி என்றும் பொருள்படும். "உற" என்கையாலே—ஓங்கி என்றபடி.

(நிவந்த) பூவலர்ந்தாப்போலே (நீள்முடியன்) முடிக்கு நீட்சியாவது மண்ணுலகச் செல்வங்களுக்குச் சூட்டிய முடியென்று தோற்றும் படியாயிருக்கை. "ஆதிராஜ்யமதிகம் புவநாநாம் ஈச ! தே பிசுநயன் கிலமௌலி :" (வரதராஜஸ்தவம்) "கிரீடசூட ரத்நராஜிராதி ராஜ்ய ஜல்பிகா" (ஸ்ரீரங்க ராஜஸ்தவம்) என்னுமாப்போலே. ரக்ஷிக்கப்பட வேண்டிய கூட்டத்தை நோக்கியல்லவோ ரக்ஷகன் முடியை நன்றாக தரித்திருப்பது. "ஒருகாலும் காமருசீர் அவுணனுள்ளத்து எண்மதியும் கடந்து" என்று திருவடிகளுக்கு வளர்த்தி சொல்லவேண்டியதிருக்க திருமுடிகளுக்கு வளர்த்தி சொல்லுகிறது. இத்திருவடிகள் தகாத திருவடிகளன்று ; சாஸ்திரங்கள் தேர்ந்தெடுத்துக் கொடுத்த நமக்கென்றே

வகுத்த திருவடிகள் என்று அறிவதற்காக, தான் யாசிப்பவனாய்ச் சென்ற காலத்து யாசித்தபடியே அவன் கொடுத்தபடியாலே உவந்த உள்ளத்தனாய் (உலகமித்யாதி) திருக்கையிலே நீர் விழுந்த அளவிலே அந் நீரையே பற்றுக்கோடாகக் கொண்டு வளர்ந்து அளந்து கொண்டான்.

ஆக, இப்படி எவரும் வேண்டாமலே உலகத்தை இருந்தபடியே திருவடிகளாலே அனுக்ரஹித்தாப்போலே உம்முடைய தாழ்வைப் பாராதே "அரவிந்தப்பாவையுந்தானும் அகம்படிவந்து புகுந்து" என்று நெஞ்சிலே வந்து புகுந்தானேயானாலும், உம்முடைய நெஞ்சமானது விருப்பு வெறுப்பு முதலிய குற்றங்களை உடையதாயிருக்கையாலே அங்கு கால் பொருந்தியிருக்கமாட்டானே. ஆதலால் அதனை நீர் போக்கப் பாரீர் என்ன; (அன்று நேர்ந்த நிசாசரரைக் கவர்ந்த வெங்கணைக் காகுத்தன்) கண்ட காட்சியிலே "ஜிதந்தே" (தோற்றோம்) என்னவேண்டியிருக்கிறவனன்றோ. எதிர்த்த பையல்களை முடிக்கைக்குக் கொடிய அம்புகளை உடையவன்.

பெருமாளும் சீதாபிராட்டியும், நித்யசூரிகளைப் போன்று எல்லா வித உறவினனுமான இளையபெருமாளுமாக தண்டகாரண்யத்திலே போய்ப் புக்கு, பரதன் அங்கே வந்து பின்தொடர்கையாலே அங்கிருக்க மாட்டாதே ஜநஸ்தானத்திலே போய்ப் புக்கு, அங்கு வாழ்கின்ற ரிஷிகளிடம் சென்று, "ஆவாஸந் த்வஹமிச்சாமி ப்ரதிஷ்டமிஹ காநநே" என்று உங்கள் கண்வட்டத்தில் இருக்க எண்ணுகிறோம்; இடம் தர வேணும் என்றார். அவர்களும் அங்கேயிருக்க அனுமதிபண்ண, நன்றாகப் பர்ணசாலை கட்டி, வாஸ்து சாந்தி, பலி முதலியன செய்து அங்கே எழுந்தருளியிருந்தார். அப்போது ரிஷிகள் "ஏஹி பச்ய சரீராணி" என்று அவ்வரக்கர்கள் தங்களை ஹிம்ஸித்தபடியெல்லாம் சொல்லுகிறார்கள். பின்னர் கரதூஷணாதிகள் விரோதிகளாய் வந்து எதிர்க்க, ரிஷிகளை உருமாய்த்த அவ்வரக்கர்களைத் தம்முடைய திருக்கைத்திருச் சார்ங்கங்களாலே அம்பு மழை பொழிந்த சக்ரவர்த்தி திருமகன், என்னுடைய ராகம் (ஆசை) முதலிய குற்றங்களை விவேகம் என்னும் அம்புகளாலே அழித்து, "அரவத்தமளியினோடும், அழகிய பாற்கடலோடும் அரவிந்தப் பாவையும் தானும் "பேரேன்" என்று என் நெஞ்சு நிறையும்படி புகுந்திருக்கிறவன் என்கிறார்.

(அன்று) ஜநஸ்தானத்திலே இருக்கிற அன்று, ரக்ஷகனான ராமன் நலிவுபட்ட ரிஷிகளைப் பாதுகாக்க வந்துநின்ற அன்று, (நேர்ந்த நிசாசரனை) நெஞ்சிலுள் இருள் சூழ்ந்திருப்பதோடன்றி பாம்பு உணர்த்தி பற்று ராத்ரியிலே புறப்படுமாபோலே பரஹிம்ஸைக்கு ஏகாந்தமான

காலத்திலே வந்து எதிர்த்த கர தூஷணாதி ராக்ஷசரை. "நேர்ந்த நிசாசரரை" என் கையாலே விபீஷணாதிகளை விலக்குகிறது. (அன்று நேர்ந்த நிசாசரரை) "தேதம் ஸோமமிவோத்யந்தம் த்ருஷ்ட்வா வை தர்மசாரிண :; மங்களாநி ப்ரயுஞ்ஜாநா : ப்ரத்யக்ருஹ்ணந் த்ருடவ்ரதா :" என்று தண்டகாரண்ய வாசிகளான ரிஷிகணங்களும், "ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாம் அபவந் கதா :, ராமபூதம் ஜகதபூத் ராமே ராஜ்யம் ப்ரசாஸதி" என்று அயோத்தி வாழ் மக்களும் அனைவரும் பெருமாளைக் கண்டவாறே "மங்களா சாஸநம்" (பல்லாண்டு பாடுகை) பண்ணுவார்கள். அநுகூலர் ப்ரதிகூலர் அனைவரும் வாயாரப் புகழக் கூடிய காலத்திலே இவ்வரக்கர்கள் எதிர்த்துநின்று நசித்துப் போனார்களே என்று வெறுக்கிறார் ஆழ்வார்.

(அன்று) இப்படி எல்லாரும் ஈடுபாடுடையவர்களாய் இருக்கிற அன்று. (நேர்ந்த நிசாசரரை) இவ்வடிவழகிலே தோற்றுவிழாதே அம்புகளையும் ஆயுதங்களையும் தாவிக் கொண்டுவந்தெதிர்த்த ராக்ஷசரை. நிசாசரர்—பகலில் வெளியில் முகம் கண்டறியாத பையல்கள், (கவர்ந்த) புறப்படும்போது விநயத்தோடு புறப்பட்டு, வேட்டை நாய்கள் ஓடிவிழுமாப்போலே விழுகை. மேலும் மாரீச சுபாகுக்களுக்குப் பிறகு ஓர் இரைபெறாதே கிடக்கிறவையாகையாலே, இரை பெறாத ஸர்ப்பம் போலே எதிரிகள் மேலே விழுந்து பற்றினபடி (வெங்கணை) அவன்தன்னைப் போலேயாய்த்து அவன் அம்புகளுமிருப்பது. "தீப்தபாவக ஸங்காசை : சிதை : காஞ்சன பூஷணை :, நத்வாமிச் சாம்யஹம் த்ரஷ்டும் ராமேண நிஹதம்சரை:" தொடுக்கிறபோது அம்பாய், எதிரிகள்மேலே போய்விழும்போது எரிகிற காலாக்னியைப் போலன்றோ விழுவது. தயரதன் பெற்ற மரதக மணித்தடத்திலே புக்கு சிரமம் தீர்த்துக்கொள்ளாதே சாவதைக் காணமாட்டாதவர் ஆகிறார். பெருமாள் கடைக் கண்ணால் பார்த்த மறு கணத்தில் பகைவர்களை முடிக்கும் வெம்மையுடைய அம்புகள். (வெங்கணை) வெஞ்சிலையினின்றும் புறப்படுகிறவை ஆகையாலே வெங்கணையாய் இருக்கும். அவன் அநுகூலர்க்கு "புனலுருவாய்", (கண்ணீர்போன்று குளிர்ந்தவனாய்) ப்ரதிகூலர்க்கு "அனலுருவாய்" (நெருப்பின் வடிவாய்) இருக்குமாப் போலே பொன் வேய்ந்த அம்புகளாயிருப்பதனால் அநுகூலர்க்கு அழகியதாய், அக்னி ஜ்வாலையைப் போன்று இருப்பதால் பிரதிகூலர்க்கு பயங்கரமாயன்றோ இச்சரங்களும் இருக்கின்றன.

ஸ்ரீராமாயணத் துவக்கத்தில் வால்மீகி நாரதனை நோக்கி, "கோ குணவான் ; கஸ்சவீர்யவான்" என வினவினார். அதே முறையில்

இவரும் "உவந்த உள்ளத்தனாய் உலகமளந்தண்டமுற நிவந்த நீள் முடியன் (குணவான்) என்றும், "அன்று நேர்ந்த நிசாசரரைக் கவர்ந்த வெங்கணைக் காகுத்தன்" (வீர்யவான்) என்றும் கூறினார். ஆக, "மாம் அஹம்" (ஸௌசீல்ய குணம் வீரம்) என்ற இரண்டின் பொருளையும் அருளினார். "உலகமளந்து" என்று அளந்துகொண்ட திருவடிகளின் வீரத்தைச் சொல்லி "கவர்ந்த வெங்கணைக் காகுத்தன்" என்று திருத்தோள்களின் வீரத்தைச் சொன்னார். இந்த ஸௌசீல்ய வீர்ய குணங்கள் வைகுண்ட நாதன் என்பதனால் வந்தவையல்ல; ககுத்ஸ்த்த வம்சத்திலே பிறந்ததனால் உண்டானது என்கிறார்.

(கடியார் பொழில் அரங்கத்தம்மான்) திருவுலகளந்தருளியதால் வந்த சிரமமும் ஆறுகைக்காக, பரிமளம் நிறைந்த சோலையை உடைய தான கோயிலிலே வந்து அந்தத் திருவடிகளையும் திருத்தோள் களையும் நீட்டிக்கொண்டு சாய்ந்தான். "கொடியார் மாடக் கோளூரகத்தும் புளிங்குடியும், மடியாதின்னே நீ துயில்மேவி மகிழ்ந் ததுதான் அடியாரல்லல் தவிர்த்த அசைவோ அன்றேல்இப் படிதான் நீண்டு தாவிய அசைவோ பணியாயே" என்றார் நம்மாழ்வார். நீ இங்கு வந்து கண்வளர்ந்தருளுகிறது, ஹிரண்ய ராவணாதிகளைக் கொன்றதால் வந்த சிரமம் தீரவோ? மூவுலகையும் அளந்துகொண்ட ஆயாஸத்தால் வந்த சிரமம் தீரவோ? சொல்லாய்; உன் நாவைக் கொண்டு நாங்கள் அறியும்படி சொல்லாய் என்கிறார்கள். பிள்ளாய்! நீ கிடக்கும்போது ஒரு மூலையிலே ஒருவரறியாமல் கண்வளர்ந் தானாகாதோ; இன்னமும் அவ்வசுரர் இராக்ககர்கள் மறுகிளை கிளைத்து "அவனெங்கே?" என்று தேடிக்கொண்டு வந்தாலும் கொடிகட்டிக் கொண்டு கிடக்க வேண்டுமோ என்று வயிறெரிகிறார் நம்மாழ்வார். அதுபோலல்லவா அரங்கனும் கண்வளர்ந்தருளுகிற படி என்கிறார் இவர்.

அங்கேயாவது (திருப்புளிங்குடியில்) கொடிகள் கண்ணுக்குத் தெரிந்தால்தான் அவன் கிடக்கிறபடி தெரிந்துகொள்ளலாம். இத்திரு வரங்கத்திலோ அப்படியல்ல; சோலைகளிலுள்ள நறுமணமானது "தூராத் கந்தோவாதி" என்று வெகு தொலைவிலுள்ளவர்களையும் அழைக்கிறதே. ஸர்வ கந்த வஸ்து (எல்லாவிதமான வாசனையும் விலுமிருப்பவன் என்று எம்பெருமானை வேதங்கள் கூறும்) கண் வளர்ந்தருளுகையாலே "கடியார் பொழில்" ஆக இருக்கும். திருச் சோலையில் பரிமளம் விடாயர்க்கு (தாபத்தினால் வருந்தியவர் களுக்கு) சிசிர (குளிர்ந்த) உபசாரமாக இருக்கும்படி. (அரங்கத்தம் மான்) அவதாரத்துக்குப் பிற்பட்டவர்களும் இழக்காதபடி இங்கு வந்து கண்வளர்ந்தருளுகிறது ப்ராப்தியாலே (ஆண்டான் அடிமை

என்கிற உறவுமுறை உள்ளமையாலே) என்கிறார். ஆக, இதனால் போக்யதை சொல்லியது.

(அரைச் சிவந்த ஆடையின் மேல்) மேகவண்ணத்துக்கு மாற்று வண்ணமாக அழகிய திருப் பீதாம்பரத்தின்மேலே (சிவந்த ஆடையின் மேல் சென்றதாம்) பசியுடையவன் "சோற்றிலே எனக்கு மனம் சென்றது" என்னுமாப்போலே ஆச்சரியப்படுகிறார். (என சிந்தையே) ஆருடைய கூறையுடை கண்டு மகிழக் கூடிய நெஞ்சு இதிலே அகப்பட்டது. இம்மையில் பார்ப்பவர்களாலே பழிக்கப்படுவதாய், மறுமையிலே வெம்மையான நரகிலே தள்ளக் கூடியது அது. இம்மையிலே நெஞ்சை ஈர்க்கக் கூடியதாய், மறுமையிலே மோக்ஷத்துக்குக் காரணமான திருப்பீதாம்பரத்திலே விழுந்து ஆசைப்பட்டது. (என சிந்தனை) திருவடிகளின் பெருமையை அறிந்தபின்பு வெளியே போக மாட்டாத நெஞ்சு. ஒருவன் ஆற்றில் நீராடும் துறையில் பிள்ளையைக் கெடுத்து திருவோலக்கத்திலே காண்பாரைப்போலே திருவடிகளில் நின்றும் திருப்பீதாம்பரத்தே கண்டபடி. மநஸ்ஸு என்னாதே "சிந்தனை" என்றது சிந்தா விசேஷத்தைப்பற்ற. இத்தால் திருவுலகளந்தருளினதையும், ராமாவதாரத்தையும் பெரியபெருமாள் பக்கலிலே ஒரோவகைகளாலே காண்கிறார்.

ஆக, கீழே "கமலபாதம் வந்தென் கண்ணினுள்ளன" என்று தானே முற்பட்டு வந்து அனுக்ரஹித்தபடியாலே ஆழ்வாரது முயற்சி ஏதுமின்மை சொல்லப்பட்டது. "சென்றதாம்" என்று திருவுள்ளம் மேல் விழுந்ததாகச் சொல்லுகையாலே அதிகாரியின் தன்மை தெரிவிக்கப்பட்டது. அங்கு கீழே "நீள்மதிளரங்கம்" என்று ரக்ஷகத்வம் சொல்லிற்று. "கடியார் பொழில்" என்று போக்யதை சொல்லிற்று இங்கு.

அவதாரிகை :

(மூன்றாம் பாட்டு) திருப்பீதாம்பரத்தின் அழகின் மிகுதி திருநாபீ கமலத்திலே வீசிற்று. முதற்பாட்டில் "ஆதிபிரான்" என்று உலகுக்கெல்லாம் காரணபூதனாய், எல்லாரிலும் மேம்பட்டவனாயிருக்கும் என்று சொல்லக்கேட்டவர்கள் "ஸ்ருஷ்டி ஸ்தித்யந்த காரணீம் ப்ரஹ்ம விஷ்ணு சிவாத்மிகாம். ஸஸம்ஜ்ஞாம் யாதி பகவான் ஏக ஏவஜநார்தந :" (விஷ்ணு புராணம்) என்று மூவரன்றோ ஜகத் காரண பூதர் என்று ப்ரஸித்தமாயிருக்க இவனே ஜகத் காரண பூதன் என்று அறியும்படி என்னென்ன : சாஸ்திரத்தின் மூலமாக நம்முடைய காரணத்வத்தை வெளிப்படுத்துவோமாகில் அது கர்மவயப்பட்டு அவரவர் ருசிக்குத் தக்கவாறு விபரீதமாக வெளிப்படும் என்று பார்த்து "முதலாம் திருவுருவம் மூன்றென்பரொன்றே, முதலாகு

மூன்றுக்கு மென்பர்—முதல்வா, நிகரிலகு காருருவா நின்னகத்த தன்றே, புகரிலகு தாமரையின் பூ" என்றும் சொல்லுகிறபடியே தன் திரு நாபீகமலத்திலே ஜகத் காரணபூதராக ப்ரஸித்தரான ப்ரம்ம ருத்ரர்களை ஸ்ருஷ்டித்துக் காட்ட, மேன்மையையும் அழகையும் காட்டி, திருப்பீதாம்பரத்திலே சிக்கிய என்னுடைய மநஸ்ஸை தன் பக்கலிலே இழுத்துக்கொள்ளா நின்றதென்கிறார். அனுபவிக்க வேண்டியதன் எல்லையைக் கண்டு, தம்முடைய ஆர்வம் குன்றியதால் மீளுகிறார் என்றோ இல்லை; தம்முடைய சபல புத்தியால் அங்கு மிங்கும் இழுப்புண்ணப்படுகிறார் அத்தனை.

3, மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள்
சந்தி செய்ய நின்றான் அரங்கத்தரவி னணையான்
அந்திபோல் நிறத்தாடையும் அதன் மேல் அயனைப்
படைத்த தோரெழில்
உந்திமேல தன்றோ அடியேன் உள்ளத்தின் னுயிரே.

பதவுரை :

மந்தி—ஆண் குரங்குகளானவை, பாய்—ஒரு கிளையினின்றும் மற்றொரு கிளையில் இடைவிடாமல் பாய்ந்தபடியே இருப்பதாய், வட—தமிழுக்கு வடவெல்லையும், வேங்கடம்—திருவேங்கட மலை என்னும் திருநாமத்தை உடையதும், மாமலை—உயர்த்தியையும் பரப்பையும் உடையதான திருமலையிலே, வானவர்கள்—பரமபதத்திலே உள்ள நித்ய சூரிகள், சந்திசெய்ய நின்றான்—புஷ்பங்களைக் கொண்டு ஆராதிக்கும்படி நின்றவனாய், அரங்கத்து—கோயிலிலே, அரவினணையான்—திரு அநந்தாழ்வான் மேலே பள்ளி கொண்டருளுமவனுடைய, அந்திபோல் நிறத்து ஆடையும்—செவ்வானம் போன்ற நிறத்தையுடைய திருப்பீதாம்பரமும், அதன்மேல்—அதுக்குமேலே, அயனைப் படைத்தது—ப்ரம்மாவுக்கு உற்பத்தி ஸ்தானமான, ஓர் எழில்—ஒப்பற்ற அழகையுடைய, உந்திமேலது அன்றோ—கொப்பூழின் மேலது தன்றோ, அடியேன் உள்ளத்து—அடியேனுடைய மனதிலிருக்கிற, இன் உயிர்—நல்ல ஜீவன்.

விளக்கவுரை :

(மந்திபாய்) கீழ்ப்பாட்டிலே "உலகமளந்தண்டமுற நிவந்த நீண் முடியன்—கடியார் பொழில் அரங்கத்தம்மான்" என்று இந்த உலகங்களை அடையத் தன் திருவடிகளாலே அளந்துகொண்டார் பெரிய பெருமாள் என்கிறாரே; இங்ஙனே சொல்லலாமோ? "அன்று ஞாலமளந்த பிரான்—சென்று சேர்திருவேங்கடம்" என்றன்றோ நம்மாழ்வார் வார்த்தை: திருவேங்கடமுடையான் திருவடிகளைக் காணவேணு

மென்று வழிபாடு செய்த நித்யசூரிகளும் "எந்நாளே நாம் மண்ணளந்த இணைத்தாமரைகள் காண்பதற்கு" என்றன்றோ ப்ரார்த்தித்தது. ஆகையாலே இந்த பூமியடையத் திருவடிகளாலே ஆக்ரமித்து "அடிக்கீழமர்ந்து புகுந்து அடியீர் வாழ்மின்" என்று தன் திருக்கையாலே உலகமளந்த பொன்னடியைக் காட்டிக்கொண்டு நிற்கிறவனுமாய், "தானோங்கி நிற்கின்றான் தண்ணருவி வேங்கடம்" என்கிறபடியே அண்டமுற நிவந்த நீள்முடியனுமாய் நிற்கின்றான் திருவேங்கடமுடையான் அன்றோ என்ன; அந்தத் திருவேங்கடமுடையானும் இங்குக் கண்வளர்ந்தருளுகிற பெரிய பெருமாளே என்கிறார்.

(மந்திபாய் வட வேங்கட மாமலை) திருப் பீதாம்பரத்தின் அழகை அனுபவிக்கச் செய்தே, திருநாபீ கமலத்தழகிலே தாமிழுப்புண்ட சபல புத்தியைப்போன்றிருக்கையாலே குரங்குகளை எடுத்துக் காட்டாகச் சொல்லுகிறார்.

(மந்திபாய்) திருமலையில் பலாக்கள் வேரே பிடித்துத் தலையளவும் பழுத்துக் கிடக்கையாலே அங்குள்ள குரங்குகள் ஜாதிக்கேற்ற சபலத்தாலே ஒரு பழத்தை உண்ண மூற்பட்டவை மற்றொரு கொம்பிலே உள்ள பழத்திலே கண்ணைச் செலுத்த இத்தை விட்டு அதிலே தாவிப் பாய்ந்து திரியாநிற்குமாய்த்து. பெரியபெருமாளுடைய திவ்யாவயவங்களிலே இவர் ஆழங்காற்படுகிறாப்போலே. "கானமும் வானரமும் வேடுமுடை வேங்கடமிறே" (மந்திபாய்) ஒன்றையொன்று பற்றி மாலையாகத் தொங்கி நிற்கும். திருச்சின்னக் குரல் கேட்டவாறே பாய்ந்து ஓடும் என்றுமாம். பரமபதமும், திருமலையும், கோயிலும், திருவயோத்யையும் ஒருபடிப்பட்டிருக்கிறபடி. எங்கும் மாறி மாறித் தங்குகை.

(வட வேங்கடம்) "திருமலை "என்னாதே" வடவேங்கடம்" என்கிறது, தமிழுக்கு எல்லை நிலம் அதுவாகச் சொல்லுகையாலே. வேதங்கள், ராமாயண பாரதாதிகள் இவற்றின் சப்தங்களாலே விளக்கப்படுகையன்றிக்கே தம்முடைய குடிப் பிறப்புக்கேற்ற வகையில் தாம் கவி பாடுகிற தமிழ்ச் சொல் நடமாடுகைக்கு எல்லை அது ஆகையாலே சொல்லுகிறார். (மாமலை) போக்யதையின் மிகுதியைச் சொல்லுகிறது என்னலாம். அல்லது "பரன் சென்று சேர் திருவேங்கடம்" என்றும், "முன்னம் அடைமினோ" என்றும் சொல்லுகிறபடியே சேஷி (ஆண்டான்) ஆனவன் தன்னுடைய ரக்ஷகத்வம் கைகூடுவதற்காகவும், வந்து சேருகையாலே வந்த சிறப்புடைமையைச் சொல்லுகிறது என்றும் கொள்ளலாம். பரமபதத்தில் உள்ள நித்யசூரிகள் அங்கிருந்து திருவேங்கடமுடையானை அனுபவிக்க வரும்போது தன் சிகரத்தில் இளைப்பாறி வரலாம்படி இருக்கிற உயர்த்தியைச்

சொல்லுகிறார் ஆகவுமாம். அல்லது உபய விபூதியும் (மண்ணுலக விண்ணுலகங்கள்) திருமலையின் ஒரு மூலையிலே அடங்கும் என்றுமாம்.

(வானவர்கள் சந்தி செய்ய) நித்யசூரிகள் பூக்களைக் கொண்டு பரமபதத்தில் பகவதாராதனம் பண்ணி வந்தனர். பகவான் பரம பதத்தினின்றும் தன் எளிமை, வாத்ஸல்யம் முதலிய குணங்கள் வெளிப் படுவதற்காக திருமலைக்கு எழுந்தருளினான். பரமனது மேன்மையை அனுபவித்து வந்த சூரிகள் நீர்மையைக் காணத் திருமலைக்கு வந்தார்கள். பின் அந் நீர்மைக்குக் காரணமான மேன்மையைக் காண மீண்டும் பரமபதத்துக்குச் சென்றார்கள். (நின்றான்) பெரு மாள் ருச்யமூக பர்வதத்தில் சுக்ரீவன் முதலிய வானர ஸேனைக்கும், இளைய பெருமாளுக்கும் ஒக்க முகங்காட்டி நின்றாற் போலே யாய்த்து, திருவேங்கடமுடையான் குரங்குகளோடு சூரிகளோடு வாசியற அனுபவிக்கும்படி முகம் கொடுத்துக் கொண்டு நிற்கிற நிலையும். "வாநராணாம் நராணாம்ச கதமாஸீத் ஸமாகம:" சீதை அசோக வனத்தில் அனுமனிடம், "ஆஞ்சநேயா ! மரத்தோடு மரம் தத்தித்திரியக் கூடிய வாநரர்களுக்கும், வசிஷ்ட சிஷ்யரான சக்ர வர்த்தி திருமகனுக்கும் எவ்வாறு நட்பு ஏற்பட்டது?" என வின வினாள். "ராம சுக்ரீவயோரைக்யம் தேவ்யேவம் ஸமஜாயத" தாயே ! எல்லாவித அடிமைகளும் செய்துவரக் கூடிய இளையபெரு மாள் அருகே நிற்கச் செய்தே சுக்ரீவனது ஏவலாளான நான் தங் களிடம் அந்தரங்க தூதுவனாய் அனுப்பப்பட்டு வந்து நிற்கிறேனே அந்த அளவிற்கு ராமசுக்ரீவ நட்பு நெருக்கமாக ஏற்பட்டுள்ளது என்றார்.

(நின்றான்) நித்யசூரிகள் திருமலையிலே இவனது எளிமைக் குணத்தில் ஈடுபட்டு வந்து பற்றி நிற்க, "குருடர்க்கு வைத்த அறச் சாலையில் மிளிர்கண்ணர் புகுரலாமோ" என்று அவன் எண்ணி, ஆனைக்குப்பு (சதுரங்கக் கருவி) கொண்டு ஆடுவாரைப்போலே மந் திகள் பக்கலிலே திருவுள்ளத்தை வைத்தான் என்னலாம். அல்லது, "மங்குல்தோய்சென்னி வடவேங்கடத்தானைக், கங்குல் புகுந்தார்கள் காப்பணிவான்—திங்கள், சடையேற வைத்தானும் தாமரை மேலானும், குடையேறத்தாம் குவித்துக்கொண்டு" என்கிறபடி ப்ரம்ம ருத்ராதிகள் மாலை வேளையில் வந்து ஸமாராதனம் பண்ணப் பெரிய மேன்மையோடே நின்ற நிலையைச் சொல்வதாகவும் கொள்ளலாம். (நின்றான்) இந் நிலைக்கு ஒரு ப்ரயற்சியுண்டு என்று தோற்றும்படி நின்றான், நித்யசூரிகள் அக்காரணத்தை அறியப் பின்தொடர்ந்த வாறே வடக்குத் திருவாசலாலே வந்து புகுந்து கோயிலிலே படுக்கை யிலே சாய்ந்தவனாயிருந்தான், இவன் கிடக்கிறபடியைக் கண்டு "நடந்த கால்கள் நொந்தவோ" என்று வருந்தாமல் மிகவும் மகிழ்ந்

தவர்களாய் இனி இவன் *ஸம்ஸாரம் கிழங்கெடுத்தால் அல்லது (*மக்களது பிறவித் துன்பத்தை ஒழித்து வீடு நல்கினால் ஒழிய) கிளம்பான் என்று மீண்டு போனார்கள்.

(அரவினணையான்) மலர்ந்த பூவைப் போன்று மென்மையான அவ்வடிவுக்குப் பொறாதபடி, காடுகளிலும் கரைகளிலும் திருவடிகளைக் கொண்டுலாவின களைப்பெல்லாம் தீரும்படி, மென்மை, குளிர்த்தி, நறுமணம் இவற்றையுடைய திருவநந்தாழ்வான் மேலே கண்வளர்ந்தருளினான். "அரங்கத்தரவினணையான்" சீலத்தையும் மேன்மையையும் அழகையும் அனுபவிக்கிறார்.

(அரங்கத்தரவினணையான்) "சேஷ்யே புரஸ்தாத் சாலாயாம் யாவந்மே நப்ரஸீததி" என்று சித்ரகூட மலையிலே பரதாழ்வானைப் படுகாடு கிடக்கவைத்துவிட்டு, பெருமாள் தான் கடற்கரையிலே படுகாடு கிடந்தாப்போலே, ஸம்ஸாரிகளைப் பெற்றாலல்லது எழுந்திரேன் என்று படுகாடு கிடக்கிறான். ஸ்ரீராமன் முதலிலே சமுத்ர ராஜனைச் சரணாகதி பண்ணிவிட்டு அவன் வந்து முகம் காட்டாத போது "சாபமாநய ஸௌமித்ரே" (லக்ஷ்மணா ! வில்லைக் கொண்டு வா) என்று சீறினாற்போலே சீறுமவரல்லர் இவர். தன் ஆற்றாமையைக் காட்டிச் சரணம் புக்குக் கிடக்குமவர் அல்லவா இவர்.

(அந்திபோல் நிறத்தாடையும்) கீழ்ப்பாட்டில் சொன்ன சிவந்த ஆடை, ஆபரணங்களைப்போலே கழற்றத்தக்கதாயிருக்கும் ; இது உடன் பிறந்ததைப் போன்று உள்ளது என்றவகையில் "அந்திபோல் நிறத்தாடையும்" என்கிறார். மாலை வேளையில் செவ்வானத்தோடு கூடிய மேகம்போலேயன்றோ அழகிய இடுப்பும் பீதாம்பரமும் இருக்கிறபடி, திருமேனி மயில்கழுத்தின் சாயலாக உள்ளது. அதோடு சேர்ந்த திருப்பீதாம்பரம் மாலைவேளையில் செவ்வானம் படர்ந்த காளமேகம்போலே கண்டவர் தம் நெஞ்சம் கவர்வதாய் உள்ளது.

(அதன் மேல்) அவ்வழகுக்கு மேலே (அயனைப்பத்யாதி) படைப்புக்கடவுளான நான்முகனைத் தன் பக்கலிலே உண்டாக்கி, அது காரணமாக வந்த மேன்மையால் உண்டான ஒப்பற்ற அழகை உடையதாக அன்றோ திருநாபீகமலமிருப்பது. உலகில் ஒரு தாயின் அழகு பிள்ளைப் பேறு வரைதானிருக்கும். பிரமனைப் பெற்றெடுத்த பின்பு ஒளியும் அழகும் மிகுந்துள்ளது. "யோப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்—தம்ஹ தேவம்" என்று ச்வேதாச்வதரோபநிஷத்தில் சொன்னபடி இவனைப் படைத்த பின்பன்றோ அவன் ஒளிமிக்கவன் ஆனான்.

(ஓரெழிலுந்தி) "ஸௌந்தர்யாக்ஷர ஸரிதுரஸி விஸ்தீர்ய மத்யாவருத்தா, ஸ்தாநாத்ப்ரத்வாத் விஷம கதிஜாவர்த்த கர்த்தாப

நாபி :! ப்ராப்ய ப்ராப்த ப்ரதிமஜகநம் விஸ்த்ருதா ஹஸ்திநாத ! ஸ்ரோதோபேதம் பஜதி பவத : பாததேசாபதேசாத்" (கூரத்தாழ்வான் வரதராஜஸ்தவம்) என்கிறபடி அழகிதாகிய பெரிய ஆறானது திருமுடியாகிற மலையுச்சியினின்றும், அகன்ற திருமார்பாகிற தாழ்வரையிலே வந்து குதிகொண்டு அங்கே பரந்து கீழ்நோக்கி இறங்கி சிறிய இடை ஆகையாலே அங்கே குறுகிய இடத்திலே அகப்பட்டு விரைந்து புறப்பட்டு திருநாபியாய்ச் சுழியாக விளங்கியது.

(அடியேன் உள்ளத்தின்னுயிரே) அடிமை பூண்ட என்னுள்ளே யிருக்கும் இதயமானது. (உந்தி மேலதன்றோ) அனைத்துயிர்களும் பரமாத்மாவுக்கு அடிமை பூண்டிருப்பவை என்கிற வேத சாஸ்த்ர ப்ரமாணங்களைக் கொண்டு தன்னை "அடியேன்" என்று சொன்னாரில்லை இவர். "குணைர்தாஸ்யமுபாகத :" என்று பகவானது கல்யாண குணங்களுக்குத் தோற்றுத் தொண்டு செய்பவராய் "அடியேன்" என்றாரில்லை. அவன் அழகுக்குத் தோற்று "அடியேன்" என்கிறார். அதிலும் மொத்தவடிவழகையும் நோக்கிச் சொல்லுகிற வார்த்தையன்று. ஓர் அவயவத்தின் அழகுக்குத் தோற்றுச் சொல்லுகிற வார்த்தை இது. "உயிர்" என்கிறது மநஸ்ஸை. "உளனில் வாழுயிரே" என்று நம்மாழ்வார் கொண்டாடினாற்போலே. வடிவழகு தமக்கு ரஸித்து அனுபவிக்கும்படியிருக்கையாலே "இன்னுயிர்" என்கிறது. உலகைப் படைக்கிற உந்தியன்றோ என்னை அழிக்கிறது. அந்தத் திருநாபீகமலம் அதிகாரி புருஷர்களான ப்ரம்மாதிகளை உண்டாக்கும். "அடியேன்" என்றிருப்பாரை அழிக்கும். பிள்ளை அழகிய மணவாளர் அரையர் என்பவர், பெரிய பெருமாள் திருவடிகளிலே சென்று, "நாயந்தே ! அடியேன் திருவேங்கடமுடையானைத் திருவடிதொழுது வரவேணுமென்று நினைக்கிறேன்" என்று ஒருக்கால் இசையுடன் சொல்லிக் காண்பீர்" என்று அருள; பிள்ளையும் விண்ணப்பம் செய்ய ; பெருமாளும் "வாரீர் ! அமலனாதி பிரானை ஒருமுறை இசையுடன் விண்ணப்பம் செய்தார். பின் மனம் தேறி, இனி அங்கே போவதும் இங்கே இருப்பதும் ஒன்றுதான் என்று மனம் தெளிந்தார்.

இப்பாட்டில் பெரியபெருமாள் பக்கலிலே திருவேங்கடமுடையானான தன்மையும் உண்டு என்கிறது.

அவதாரிகை :

(நான்காம் பாட்டு) திருநாபீகமலத்தோடே சேர்ந்த திருஉதர பந்தத்தை (வயிற்றில் அணிவிக்கும் ஆபரணம்) அனுபவிக்கிறார். கீழ்ப் பாட்டில் தம் திருவுள்ளம் திருநாபீகமலத்திலே சுழியாறுபடுகிறபடியைக் கண்டு, அந்நாபீகமலத்துக்கிருப்பிடமான திருவயிற்றையும், அதிலுள்ள பொற்பட்டத்தையும் கண்டு அனுபவிக்கிறார். அந்நாபிக்கு

வெறும் ப்ரம்மா ஒருவனுக்கிருப்பிடமான மேன்மையும், அழகு மன்றோ உள்ளது. இத்திருவயிறும் உதர பந்தமுமோவெனில்:... "த்ரிவித சிதசித் ப்ருந்தம் துந்தாவலம்பி வலித்ரயம், விகணய திவைச்வர்யம் வ்யாக்யாதி ரங்கமகேசிது : ! ப்ரணதவசதாம் ப்ரூதே தாமோதரத்வகர : கிண :, ததுபய குணாக்ருஷ்டம் பட்டம் கிலோதர பந்தநம்" ஆத்மாக்கள் நித்யர், முக்தர், பத்தர் என மூவகையினர். இம் மூவரையும் தன் வயிற்றிற் கொண்டுள்ள பரம்பொருள் இவன் என் பதை உணர்த்துவதுதான் அரங்கன் வயிற்றிலுள்ள மூன்று மடிப்புகள். அதன்கீழ் யசோதை உரலோடு பிணைத்த கயிற்றின் தழும்பு உள்ளதே அது அடியவர்க் கெளியவன் (ஸௌலப்யம்) என்பதைக் காட்டுகிறது. இப் பரத்வத்தையும் ஸௌலப்யத்தையும் இணைக்கும் பாலம்தான் திரு வயிற்று உதரபந்தம் என்கிறார் பராசர பட்டர். அத் திருவயிற் றிலும், அவ்வுதர பந்தத்திலும் ஈடுபடுகிறார் ஆழ்வார் இப்பாட்டில்.

**4 சதுரமாமதிள் சூழ் இலங்கைக்கிறைவன் தலை பத்**
**துதிரவோட்டி ஓர் வெங்கணை உய்த்தவன் ஓத வண்ணன்**
**மதுரமா வண்டுபாட மாமயிலா டரங்கத்தம்மான் திருவயிற்**
**றுதரபந்தம் என்னுள்ளத்துள் நின்று உலாகின்றதே.**

பதவுரை :

சதுரம்—நற்சதுரமாய், மா—உயர்ந்திருக்கிற , மதிள்—மதிள் களாலே, சூழ்—சூழப்பட்ட, இலங்கைக்கு—இலங்கை மாநகரத்துக்கு, இறைவன்—அரசனான ராவணனை, ஓட்டி—முதல் நாள் போரிலே பின்னிட்டோடும் படிசெய்து, (அடுத்த நாள் போரிலே) தலைபத்து —அவனுடைய பத்துத் தலைகளையும், உதிர—பனங்காய்கள் போலே உதிரும்படி, ஓர்—ஒப்பற்ற, வெம்—கொடிய, கணை—பிரம்மாஸ் திரத்தை, உய்த்தவன்—செலுத்தியவனாய் (அடியார்களுக்கு விரோதி யைப் போக்கினோம் என்ற மகிழ்ச்சியாலே) ஓதம் வண்ணன்...கடல் போலே குளிர்ந்தவடிவை உடையவனாய், வண்டு—வண்டுகளானவை, மதுரமா—இனிதாக, பாட—கானம் பண்ண (அதுக்குத்தக்கபடி), மா —பெரிய சிறகை உடைய, மயில்—மயில்களானவை, ஆடு—நர்த்தனம் பண்ணுகிற, அரங்கத்து—கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற, அம் மான்—பரம்பொருளான அழகிய மணவாளனுடைய, திருவயிறு உதர பந்தம்—திருவயிற்றில் கட்டப்பெற்ற உதர பந்தமானது, என் உள்ளத்துள்—என் நெஞ்சிலே, நின்று—நிலைபெற்று, உலாகின்றதே —ஸஞ்சரியா நின்றதே ! என்று ஈடுபடுகிறார்.

விளக்கவுரை :

(சதுரமா மதிள்சூழ்) நான்கு மூலையதாய், கட்டளைப்பட்டு, அரணாகப்போரும்படி உயர்த்தியை உடையதான மதிள்களாலே சூழப்பட்டிருக்கும். கட்டளைப்பட்டிருக்கையாவது—"வேலைசூழ் வெற்பெடுத்த விஞ்சிசூழ் இலங்கை" என்கிறபடியே கடலை அகழாக உடைத்தாய், பிறகு காடாய், மலையாய், அதின்மேலே மதிளாயிறே இருப்பது.

(மாமதிள்) சூர்ய சந்திரர்கள் பின் ஒதுங்கியே வரும்படியான உயரத்தை உடையது ; அதனால்தான் தைத்திரீய உபநிஷதமும் "பீஷோதேதி" (பயத்துடன் உதிக்கிறான்) என்கிறது. ஈச்வரன் (ஸ்ரீ ராமன்) நேரே நின்றபோதிலும் எதிர்த்து யுத்தம் பண்ணச் செய்த மதிள். இவ்வகழையும் அரணையும் நம்பியன்றோ பையல் ராவணன் பெருமாளோடே எதிர்த்துப் போர் புரிய முற்பட்டது. இது, தான் கட்டிய மதிள் என்றறிந்திலன். அரணுக்குள்ளேயிருக்கச் செய்தே பெருமாளோடே எதிர்க்கையாலே இதுதான் அழிக்கைக்குக் காரண மாய்த்து. அவ்வரணை விட்டுப் பெருமாள் தோளையே அரணாகப் பற்றிய ஸ்ரீவிபீஷணாழ்வான் நிலைபெற்று நின்றான்.

(இலங்கை) குளவிக் கூடு போலே பிறரைத் துன்புறுத்தி விட்டு ஒதுங்குமிடம். நல்லோர்களுக்கு நுழையவொண்ணாதபடி இருக்கும் அரணும் மதிளும் என்கை. அதனால்தான் "த்வாம்து திக் குலபாம் ஸநம்" (என் குலத்தைக் கெடுக்க வந்த கோடரிக் காம்பே ! உன்னை வெறுக்கிறேன்) என்று வெளியேற்றினான் ஸ்ரீவிபீஷணனை. அது கொண்டே சீதையும் "ஸதோவா நாநுவர்த்தஸே" (ராவணா ! நல் லோர்களை நீ நாடுவதில்லையோ) என அறிவுரை புகன்றாள். அநு மான் ராக்ஷஸர்களைக் காண்பதற்கு முன்னர் லங்கையைத்தானே கண் டார். ஒரு கைம்பெண்ணுக்கும் அடைந்துக்கொண்டிருக்கலாம்படி யல்லவா ஊரும் அரணுமிருப்பது என வியந்தார். (இலங்கைக் கிறைவன்) "முழஞ்சிலே (குகையிலே) சிம்மம் கிடந்தது என்னுமாப் போலே. "லங்காம் ராவண பாலிதாம்" என்கிறபடியே புலி கிடந்த தூறு என்று அஞ்சுமாப்போலே அஞ்சும்படியன்றோ இதுக்குத் தலை வனான ராவணன் இருக்கும் விதம். (இறைவன்) ஸர்வேச்வரன் ஸ்ரீ வைகுண்டத்தை கலவிருக்கையாக (கொலுமண்டபமாக) கொண்டு வீற்றிருக்குமாபோலே தானும் லங்கைக்கு ஈச்வரன் என்றிருந்தான்.

பரம விரக்தரான திருவடியுங்கூட மதித்த ஐச்வர்யமுடைய தன்றோ லங்கை. "யத்யதர்மோ நபலவான் ஸ்யாதயம் ராக்ஷஸேச் வர : ! ஸ்யாதயம் ஸுர லோகஸ்ய ஸசக்ரஸ்யாபிரக்ஷிதா" (இறை வன்) துஷ்டக் கூட்டங்கள் அனைத்தும் ஒதுங்க நிழலாயிருப்பவன்.

ஒருவன் ஸாத்விகனானால் அவன் பக்கலில் ஸாதுக்களெல்லாரும் ஒதுங்குவார்கள். துஷ்டனானால் துஷ்டர்கள்தானே சேர்வர். தாயையும் தமப்பனையும் சேரவிருக்கவொட்டாதே பிரித்த பைய லன்றோ இவன். "தேந ஸீதா ஜநஸ்தாநாத் ஹ்ருதா ஹத்வா ஜடாயுஷம்" (ஜனஸ்தானத்திலிருந்து ராவணனாலே ஜடாயுவைக் கொன்று சீதை தூக்கி வரப்பட்டாள்) சீதாபஹரணத்துக்குப் பரி ஹாரமுண்டு. ஜடாயுவைக் கொன்றதற்குப் பரிஹாரமில்லை. பெரு மாள் திருவுள்ளமும் பரிகாரமே இல்லை என்று புண்பட்டிருக்கும். (தலைபத் துதிரவோட்டி) இப்படி பகவதபசார பாகவதாபசார அஸஹ்ய (பொறுக்க முடியாத குற்றம்) அபசாரங்களுக்கு எல்லை நிலமான பையலுடைய (ராவணனுடைய) வரபலத்தாலே பூண்கட்டின தலைகளைப் பனம பழங்களைக் காற்று உதிர்க்குமாப்போலே, முளைக்கிற தலைகள் விழுகிற தலைகளைக் காணும்படி நெடுநேரம் லீலாரஸம் அனுபவிக்க, இதைக் கண்ட தேவர்கள் "இங்ஙனே நடத் துமாகில் செய்வதென்" என்று அஞ்ச ; இவனைக் கொல்லவென்று வைத்த அம்பு தன்னை வாங்கி உதிரும்படியாக ஓட்டி. அனுகூலிக்கு மவன் ப்ரதிகூலித்தால் சொல்லவேண்டாவே. போரிலே இளைப் பிக்க வைத்து ஓட அடித்தபடி. "கச்ச அநுஜாநாமி" (இன்றுபோய் நாளை வா) என்றாரன்றோ.

(ஓர் வெங்கணை உய்த்தவன்) தடைப்படாத தாயும், எதிரியைக் கொன்றாலல்லது மீளாதிருக்கையும் உள்ள அம்பு. (உய்த்தவன்) செலுத்தியவன். மற்றை நாளைப் போரிலே வெற்றி தோல்விகள் உறுதியானதல்லவே என்று ப்ரம்மா முதலியவர் கருதியவாறே, அத் தேவர்களுக்கு அச்சத்தை உண்டு பண்ணும் ராவணனது நெஞ்சிலே ஒப்பற்ற பிரம்மாஸ்திரத்தை விட்டவன். ராவணன் விரோத பாவத்தில் முதிர்ந்து நின்றான் என்று அறிந்தபின்பு ப்ரம்மாஸ் திரத்தை விட்டபடி.

(ஓத வண்ணன்) ராவண வதம் முடிந்த பின் சுக்ரீவன் முதலிய வாநரர்களுடைய போர்க் களைப்பு முழுதும் போகும்படி ஒரு கடலின் கரையிலே நின்றாப்போலே இருக்கை. ராவணனைக் கொன்றானே யொழிய லங்கையில் ஒன்றும் குறி அழியாமல் இலங்கைச் செல்வம் முழுதையும் தன்னதாக்கிக் கொண்டான். அதனை விபீஷணனுக்கு உரியதாக ஆக்கிய வள்ளன்மைக்கு, உதார குணம் படைத்த கடல் போலே உள்ள ஸ்வபாவத்தை உடையவன் என்று "ஓத வண்ணன்" என்கிறார் என்றும் கொள்ளலாம். அல்லது "ஓத வண்ணன்" என்று பெரிய பெருமாளைச் சொல்லுகிறது என்றும் கொள்ளலாம். இதனால் ப்ரதிகூலரை அம்பாலே அழிக்கும் ; அநுகூலரை அழகாலே அழிக்கும் என்பது பெறப்பட்டது.

(மதுர மாவண்டு பாட மாமயிலாடரங்கத்தம்மான்) வேலை முடிந்தவாறே ஆடல் பாடலுக்கு இடங்கொடுத்தபடி. சிலர் பாடப் புக்கால் ஆடுவாரும் வேணுமன்றோ. மயில்கள் ஆடப்புக்கன. (மா மயில்) ஒரு மயில் தோகை விரித்தால் திருச் சோலைக்கே அழகு செய் தாப்போலே இருக்கை. "மாதலிதேர் முன்பு கோல்கொள்ள மாயனி ராவணன் மேல் சரமாரி தாய்தலை அற்றற்று வீழத்தொடுத்த தலை வன் வரவு எங்கும் காணேன்" (ஆண்டாள்) என்று என்னைப் போன்று ஒருத்தி (சீதை) யுடைய விரோதியான ராவணனுடைய தாய்தலை அற்றற்று விழும்படியாக அம்பு மழை பொழிந்த அந்த வீரன் என் னுடைய விரோதியையும் போக்கிக் கொண்டுவரக் காண்கிறேன் அல் லேன் என்று கண்மறையப் பார்த்துக் கொண்டிருந்தாளே ஆண்டாள். அப்படி இருக்க வேண்டாதபடி, "செருவிலே அரக்கர்கோனைச் செற்ற நம் சேவகனார்; மருவிய பெரிய கோயில் (திருமாலை) என் கிறபடியே அந்தச் சேவகனார் தாமே ராவண வதத்துக்குப் பிறகு அந்தப் போர்க்களைப்பு நீங்கும்படி தெற்குத் திருவாசலாலே புகுந்து கோயிலிலே சாய்ந்தருளினார்.

கோயிலிலே சோலைகள், என்றும் வசந்த ருதுவாய், தேன் பெருக்கெடுத்தோட நிற்பதாலே, அத்தேனைக் கழுத்தளவு குடித்து, அம்மகிழ்ச்சிக்குப் போக்கு வீடாக வண்டுகளானவை கலியால் வரும் அருமையில்லாமையாலே பாட்டை இனிமையாக "தென்னாதெனா" என்று பாடி நிற்க, சிந்துக்கு ஆடுவாரைப்போலே சிறந்த மயில் களானவை, இவ்வூரில் சோலை "கொண்டல் மீதணவும் சோலை" ஆகையாலே ஆலித்து ஆடாநிற்கும். இவ்வூரில் வாழுமவர்களுக்குப் பேரின்பமும் செருக்குமேயாயிருக்கும். ஸ்ரீவைகுண்டத்திலிருக்கும் போதும் நித்யர்களும் முக்தர்களும் தன்னை அநுபவித்து "ஹாவுஹா வுஹா வு" என்று களிப்பார்கள். மண்ணுலகில் ராமனாய் அவ தரித்தபோது "ஸர்வை: பரிவ்ருதோ தேவை: வாநரத்வ முபா கதை:" என்று வானர வீரர்கள் "காயந்தி கேசித்; ந்ருத்யந்தி கேசித்" என்று ஆடுவதும் பாடுவதுமாயிருப்பர்கள். அர்ச்சாரூபியாகக் கோயிலிலே கண்வளர்ந்தருளப் புக்கவாறே அந் நித்யஸூரிகளே வண்டு களும் மயில்களுமாகப் பாடுவதும் ஆடுவதுமாக நின்றார். ராஜா வெள்ளைச் சட்டையிட்டால் அடியார் கறுப்புச் சட்டையிடுவார்கள்.

(அரங்கத்தம்மான்) ஸம்ஸாரிகளுக்காகக் கோயிலிலே சாய்ந் தருளி, தன்னுடைய "ஸ்வாமித்வத்தை" உறங்கிப் படுத்தியவன். அல்லது "அம்மான்" என்று எளிமையின் மகிழ்ச்சியால் வந்த பெரு மையைச் சொல்லுகிறாராகவுமாம். (திருவயிற்றுதரபந்தம்) முன்பே திருவயிறுதான் "சிற்றிடையும்" என்று வெறும் புறத்திலே ஆலத்தி வழிக்கவேண்டும்படியன்றோ இருப்பது. அதுக்குமேலேயன்றோ ஆப

ரணத்துக்கு ஆபரணமான திருஉதரபந்தம். பெற்ற வயிற்றுக்குப் பொற் பட்டம் கட்டினபடி. (என்னுள்ளத்துள் நின்றுலாகின்றதே) அந்தத் திருப்பீதாம்பரத்திலும் செல்லவொட்டாதே, திருநாபீகமலத்தி னின்றும் வரவீர்த்து, இதுக் காதாரமான திருவயிற்றிலும் போக வொட்டாதே, தான் மேல் விழுந்து ரக்ஷித்துத் தன்னேற்றம் முழுதும் தோற்றும்படி மதங்கொண்ட யானைபோலே செருக்குற்று உலாவி நின்றது.

அவதாரிகை :

(ஐந்தாம் பாட்டு) எனக்குப் பற்றுக்கோடான பெரிய பிராட்டி யார் இருக்கிற திருமார்பு அல்லவா என்னை என் நிலைக்குத்தக்க கைங்கர்யம் கொண்டது என்கிறார். மூன்றாம் பாட்டிலே—திருநாபீ கமலம் ப்ரம்மாவைத் தாங்கிக் கொண்டிருக்கிற தன் மதிப்பையும் அழ கையும் காட்டி, தம்முடைய திருவுள்ளத்தைத் திருப்பீதாம்பரத்தி னின்றும் தன் பக்கலிலே இழுத்துக்கொள்ள, அங்கே அது சுழியாற்றில் அகப்பட்டது சொல்லப்பட்டது. நாலாம் பாட்டில்—இதனைக் கண்ட திருவயிறானது ஸகல சேதநா சேதநங்களையும் (உயிருள்ளவை உயிரற்றவை) தானே தாங்கிக் கொண்டிருக்கிற மதிப்பையும், யசோ தைப்பிராட்டி கட்டக் கட்டுண்ட தழும்பைக் காட்டி, தன்னுடைய ஸௌலப்யத்தையும் (எளிமை) சிற்றிடையான வடிவழகையும் காட்டி, அத்திரு நாபீகமலத்தினின்றும் திருவுள்ளத்தைத் தன் பக்கலிலே இழுக்க, அங்குப் போகவொட்டாதே அப்படிக்குப் பட்டம் கட்டி யிருக்கிறாப் போலே இருக்கிற திருஉதரபந்தநம் மேலிட்டு நின்று இஷ்டப்படி ஸஞ்சரிக்கும்படியைச் சொல்லிற்று.

அந்தத் திருவயிற்றுக்கு பிரளய காலத்திலே தாற்காலிகமாக ஸகல அண்டங்களையும் வைத்ததாலுண்டான மதிப்பும், ஒரு சமயம் யசோதாப் பிராட்டி கட்ட அதனால் வந்த எளிமையும் இருப்பது. அப்படியல்லவே திருமார்பு. எல்லாக் காலத்திலும் சேதன அசேதனங் களை ஸ்ரீவத்ஸகௌஸ்துப முகத்தாலே தரித்துக் கொண்டிருக்கிற பெரிய மதிப்பையும், அவனுடைய ஸ்வரூபாதிகளை நிரூபித்துக் காட்டு மவளாய் நீர்மைக்கு எல்லை நிலமாக இருக்கிற பெரிய பிராட்டி யாருக்குக் கோயிற் கட்டணமாய் (இருப்பிடம்) இருக்கிற ஏற்றத் தையும், உபய விபூதி நாதன் (மண்ணுலக விண்ணுலகங்கட்குத் தலைவன்) என்கிற தனிமாலையைத் தாங்கிக் கொண்டிருக்கிற வடி வத்தையும் உடையதாய், "அக்குவடமுடுத்து ஆமைத்தாலி பூண்ட அநந்த சயநன்" என்கிறபடியே யசோதைப் பிராட்டி பூட்டின ஆப ரணங்களையும் உடையதாக அன்றோ இருப்பது.

ஆகையாலே அந்தத் திருமார்பானது "திருவயிற்றைக் காட்டிலும் தனக்குண்டான மேன்மையையும், ஸௌலப்யத்தையும், திருஆரம்

உள்ள ஆபரணச் சேர்த்தியாலே வந்த அழகையும் உடையோம் நாமல்லவா; ஆன பின்பு பெரிய மேன்மைக்குரிய நமக்குச் சிறிய இடையானது நிகராகுமோ?" என்று தன் இறுமாப்பைக் காட்டி, அத்திரு உதரபந்தநத்தினின்றும் தன் பக்கலில் இழுத்துக்கொள்ள தம்முடைய நெஞ்சளவன்றிக்கே நெஞ்சு முதலிய பொறிகளை உடைய தம்மையும் ஸ்வரூப க்ஞானாதிகளைப் பிறப்பித்து அடிமைகொண்ட படியைச் சொல்லுகிறார்.

5. பாரமாய பழவினை பற்றறுத்து என்னைத்தன்
வாரமாக்கி வைத்தான் வைத்ததன்றி என்னுள் புகுந்தான்
கோரமாதவம் செய்தனன் கொல் அறியேன்
அரங்கத்தம்மான் திரு
ஆரமார்பதன்றோ அடியேனை ஆட்கொண்டதே

பதவுரை :

பாரமாய—மிகவும் பாரமாய், பழவினை—நெடுங்காலமாகச் சம்பாதித்த பாபங்களை, பற்று அறுத்து—அடியோடு போக்கி, என்னை பாபங்களுக்கு இருப்பிடமான என்னை, தன்—தன் விஷயத்திலே, வாரம் ஆக்கிவைத்தான்—பக்ஷபதிக்கும்படி பண்ணினான், வைத்தது அன்றி—அப்படிப் பக்ஷபதிக்கும்படி வைத்ததுக்குமேலே, என்னுள்—என் இதயத்திலே, புகுந்தான்—நுழைந்தான், (இப்படிப் புகுருகைக்குக் காரணமாக) கோரம்—இந்திரியங்களை வருத்திச் செய்யத்தக்க, மாதவம் செய்தனன் கொல்—பெரிய தவத்தைப் பண்ணினேனோ, அறியேன்—அறிகிலேன், அரங்கத்து—கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற, அம்மான்—ஸர்வ ஸ்வாமியான அழகிய மணவாளனுடைய, திரு—பெரியபிராட்டியாரையும், ஆரம்—முத்து மாலையையும் உடையதான, மார்பு அது அன்றோ—திருமார்பன்றோ, அடியேனை—அழகிலே அழிந்த என்னை, ஆள்கொண்டது—அடிமைகொண்டதென்கிறார்.

விளக்கவுரை :

(பாரமாய) நம்மாழ்வாரும், வகைசொல்லமாட்டாதவராய், "தொல்மாவல் வினைத்தொடர்" என்று திரளச் சொன்னாப்போலே, இவரும் "பாரமாய" என்கிறார். கர்மத்தினுடைய கனத்தினாலே அல்ப சக்தியை உடையவனான தான் சம்பாதித்ததாக இரக்கச் செய்தேயும் வகை சொல்லப்போகாதபடியன்றோ இருப்பது. ஸர்வ சக்தனான அவன் போக்கும்போதும் வகையில் போக்கப் போகாது; தொகையில் போக்குமித்தனை. (ஒட்டுமொத்தமாகப் போக்குவான்)

வரையானவை—நான்கு வகையான (தேவர், மனிதர், விலங்கு, தாவரம்) தேகத்தை எடுப்பதற்குக் காரணமாயிருப்பனவும், எடுத்த தேகத்திலே பிறக்கிற ருசிக்குக் காரணமாயிருப்பனவும், விஷய ப்ராவண்யத்துக்கு (சிற்றின்ப ஈடுபாட்டுக்கு) காரணமாயிருப்பனவும், வேறு தேவதைகளுக்குத் தன்னை அடிமையாக்கிக் கொள்ளும் புத்திக்குக்காரணமாயிருப்பனவும், எம்பெருமானைப் பற்றி நிற்கச் செய்தேயும் வேறு ஸாமாந்யமான பலன்களைக் கொண்டு அகலுகைக்குக் காரணமாயிருப்பனவுமாக ஒரு பெரிய சுமையாக அன்றோ அவ்வினைகள் இருப்பது.

அதுக்குமேலே சாஸ்திரங்களிலே சொல்லப்பட்ட கர்மாக்களைச் செய்யும்போது ஏற்பட்டவை, சாஸ்திரங்களில் விலக்கப்பட்டவற்றைச் செய்ததனால் ஏற்பட்டவை, பாபகர்மாக்களைச் செய்தவர்களோடு ஸஹவாஸத்தால் ஏற்பட்டவை என்று இப்படி மூன்று விதமாய், அவை தான் மநஸ்ஸு, வாக்கு, காயம் ஆகிய மூன்றிலும் செய்யப்பட்டதாய் இருப்பது. "யத்ப்ரஹ்ம கல்ப நியுதாநுபவேப்யநாச்யம் தத் கில்பிஷம் ஸ்ருஜதி ஜந்துரிஹ க்ஷணார்த்தே" (பல லக்ஷக் கணக்கான ப்ரம்ம கல்பத்திலும் அனுபவித்து மாளாத பாபத்தை ஒரு ஜீவனானவன் அரை க்ஷணத்தில் செய்து விடுகிறான்) என்கிறபடியே எல்லையற்ற பாபத்தை "பாரமாய" என்கிறார். ஸம்ஹரிப்பதும் நரகத்திலேயாய், ஸ்ருஷ்டிப்பதும் நரகத்திலேயாயிருக்கை. இப்படி பாரமாகைக்குக் காரணம் சொல்லுகிறார் மேல். (பழவினை) காலமோ அநாதி; ஆத்ம வஸ்துவோ நித்யம்; அசித்துக்களுடைய சேர்க்கையும் அன்று தொடங்கியே பின்வருகின்றன. இக்காலமெல்லாம் கூடக் கூடு பூரித்ததாய் (நிறைந்ததாய்) இருக்கும். "ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்று அவன் தானே தீர்க்கவேண்டும்படியாயிருக்கை.

(பற்றறுத்து) ஸாமர்த்தியசாலிகள் அடியறுத்து நெடுங்கவர் தள்ளுமாப்போலே துளியும் வாஸனையில்லாமல் போக்கி, நித்ய ஸூரிகளுக்குக் கூட சிறிது பாபமிருந்தாலும் இருக்கலாம்; இவர்களுக்குத் துளியும் இல்லை என்னும்படி பண்ணி. அஜ்ஞானமும், (அறியாமை) அதனால் செய்யப்பட்ட கர்மமும், அதன் காரணமாக ஏற்பட்ட தேஹ ஸம்பந்தமும் என மூன்றாய் அவற்றை அடியோடு போக்கி. அதாவது—அஜ்ஞாநமும், அஜ்ஞாந வாஸனையும், அஜ்ஞாந ருசியும், கர்மமும், கர்ம வாஸனையும், கர்ம ருசியும், தேஹமும், தேஹ வாஸனையும், தேஹ ருசியும் அறுத்து. வரிசைப்படி அனுஷ்டிக்கும் ஸாத்ய கர்மமாக இருந்தால்தானே வரிசையாகப் போக்க வேணும். ஸித்த ரூபன் ஆகையாலே அடியோடு அறவே விரைவில் போக்கினான்.

இவ்வாறு நெடுங்காலமாகச் செய்த பாபத்தையெல்லாம் அறவே போக்கிய பிறகு என் செய்தனன்னில் (என்னைத் தன் வாரமாக்கி வைத்தான்) "ஈச்வரோஹம் அஹம் போகீ" (நானே ஈச்வரன்) என்று செருக்கித் திரியும் என்னை அவன் பக்கமாக ஆக்கிக் கொண்டான். (என்னை) "அஹமஸ்ம்யபராதாநாம் ஆலய:" (குற்றங்களுக்கெல்லாம் இருப்பிடம் நானே) என்றும் "பாவமே செய்து பாவியானேன்" என்றும் சொல்லுகிறபடியே அபராதமே உருவாக இருக்கும் என்னை. இப் பாபங்களையெல்லாம் எவ்வாறு போக்குவது என்பதனை அறியாத என்னை. இப்படி நோவுபட்டோமென்கிற அநுதாபமு மின்றிக்கேயிருக்கை.

(தன் வாரமாக்கி வைத்தான்) வாரம்—அதிகமான ப்ரீதி. இவன் செலுத்த வேண்டிய தொகையை நாமே செலுத்திவிடுகிறேனென்று ஒருவனது கடனைத்தான் ஏறிட்டுக்கொள்ளுமாப்போலே என் பாபத்தையெல்லாம் போக்கி என்னைத் தனதாக்கிக் கொண்டான் என்கை. அல்லது வேறு சிற்றின்பங்களை விட்டுத் தன்னையே உறுதியாகப் பற்றும்படி பண்ணினான். (வைத்தான்) தம்முடைய நினைவன்றிக்கே எல்லாம் அவனாலே வந்தது என்று தோற்றவைத்தான் என்கிறார். என்னைத் தம்மோடே ஒரு பேராகக் கூட்டுகையாலே யமாதிகளால் நினைக்கவொண்ணாதபடி ஆனேன் (வைத்தான்) *இச்சந்தானச் சாபம் (*தன் வாரிசுகளுக்கு வைக்கும் சொத்து) வைத்தான்.

(வைத்ததன்றி என்னுள் புகுந்தான்) என்னுடைய துஷ்கர்மங்களை அடியோடு போக்கி, தான் அறிந்த பக்திரூபமான ஞானத்துக்குத் தன்னையே விஷயமாக்கி வைத்ததுக்கு மேலே, தான் அகல நின்றாராகில் முன்புள்ள ருசி வாஸனைகள் மேலிட்டு, பழையபடி துஷ்கர்மங்களைப் பண்ணி நான் அகலக் கூடும் என்று பார்த்து, அவை தோன்றாதபடி என் நெஞ்சில் புகுந்து அவை தேய்ந்து மாயும்படி பண்ணியிருந்தான். (என்னுள் புகுந்தான்) "அடியேன் உள்ளான் உடலுள்ளான்" என்றும், "பேரேன் என்று என் நெஞ்சு நிறையப் புகுந்தான்" என்றும் சொல்லுகிறபடியே மிகப் பெரியவர்கள் விஷயத்தில் செய்யக் கூடியதை என் தாழ்மை பாராதே வசிஷ்டர் ஓரிழிகுலத்தோன் வீட்டினுள் நுழைந்தாற்போல் புகுந்தான். "அநச்நந் நந்ய:" (ஒரு சரீரமாகிற மரத்தில் ஜீவாத்மா பரமாத்மா ஆகிய இரு பட்சிகள் உள்ளன. ஒன்று அதிலுள்ளவற்றைச் சாப்பிட்டு வாழ்கிறது. மற்றொரு பரமாத்மாவாகிய பட்சி எதையும் சாப்பிடாது ஒட்டின்றி இருந்து வருகிறது) என்று ஜீவனுடனும் சரீரத்துடனும் சம்பந்தமில்லாமலிருக்கும் எம்பெருமானுக்கு இதனால் அல்லது தான் தரிக்க முடியாது என்கிற அளவிற்குப் புகுந்தான். (கோரமா தவம் செய்தனன் கொல்) இப்பேறு பெறுவதற்கு நெடுங்காலம் அதிகோரமான தபஸ்ஸுக்களைப் பண்ணினேனோ "மஹதா தபஸா ராம! மஹதா சாபி கர்மணா" என்று அவனைப் பெறும்போது அதிகோரமான

தவத்தைப் பண்ணவேணுமிறே. (அறியேன்) நானறிய ஒன்றுமில்லை. இப்படி சந்தேகம் கொள்வது என்னென்னில்—தனக்குக் கிட்டின பாக்யம் அப்படிப்பட்டவர்களுக்குத்தான் கிடைக்கக் கூடியதாகை யாலே, அவன்தான் ஆற்றின் கரையிலே கிடந்து தபஸ்ஸைப் பண்ணி னானோ, அறிகிறேனல்லேன். கோரமான ராவண யுத்தத்திலே தம்மையே அழித்துக் கொண்ட பெரிய உடையாரைப்போலே (ஜடாயு) இருக்கை. "என் நன்றி செய்தேனோ என் நெஞ்சில் திகழ் வதுவே" என்று தம்மிடத்தில் ஒரு நன்மையும் காணாமையாலே ஸந்தேஹிக்கிறார். "நிர்ஹேதுகமாக இப்படி உபகரிப்பதே" என்றே இவர் மயங்குகிறார். இதனால் நிர்ஹேதுகமாக (காரணம் ஏது மின்றி) அனுக்ரஹித்தான் என்பது பெறப்படுகிறது. பகவான் தன் னையும், தன்னுடைமையையும், நமக்குரியதாகத் தந்தமைக்கு, நம் மையும் நம்முடைமையையும் எம்பெருமானுக்கு ஆக்கின முறை முதுகு தேய்த்ததோடு ஒக்கும். எம்பெருமான் எல்லாம் செய்தாலும், தான் ஒன்றும் செய்யாதவனாகவே எண்ணியிருக்கிறான். "ஒன்றுண்டு செங்கண்மால்—உன்னடியார்க்கு என்செய்வன் என்றே இருத்தி நீ" என்று நம்மாழ்வாரும் அருளினார்.

"அறியேன்" என்றவர்தானே இவ்வளவு பெரிய அனுக்ரஹத்துக்கு ஒரு காரணம் இருந்தே தீரவேணுமென்று ஆராய்ந்து "அறிந்தேன்" என்கிறார் மேல். (அரங்கத்தம்மான் திருவாரமார்பதன்றோ அடி யேனை ஆட்கொண்டதே) இவருடைய கோர தவம் இருக்கிறபடி. (அரங்கத்தம்மான்) ஆழ்வாருடைய விரோதியைப் போக்கி வாழ் விப்பதற்காகவன்றோ இங்கு வந்து சாய்ந்தருளியது ஆழ்வாருடைய பேறு தன்னுடையதாகும்படி தாம் பண்ணுகைக்குண்டான சம்பந்தத் தைச் சொல்லுகிறது. இப் பேற்றுக்கு ஆற்றங்கரையைப் பற்றிக் கிடந்து தவம் செய்யுமவனும் அவனாயிருந்தது. இல்லையாகில் இவ் வளவு பெரிய பேற்றுக்கு வேறு உபாயம் உண்டாக மாட்டாதே.

(திருவார மார்பதன்றோ) பெரியபிராட்டியாரையும் ஆரத் தையும் உடையதான திருமார்பல்லவா. தாம் பெரியபெரு மாளன்றோ. "ஹிரண்யவர்ணாம் ஹரிணீம், ஹிரண்ய ப்ராகாராம் ஆர்த்ராம்" என்று பெரிய பிராட்டியாருக்குக் கோயில் கட்டணமாய் (தங்குமிடமாய்) அதுக்குத் தங்கமயமான மதிள்போலே இருக்கிற திருவாரத்தை உடையதாக அல்லவா திருமார்பு இருப்பது. அத் திரு மார்பையே தமக்குப் பற்றுக் கோடாகக் கொண்டு தாயின் நிழலிலே ஒதுங்குகிறார். ராவணனை நோக்கி, "தேந மைத்ரீபவது தே யதி ஜீவிதுமிச்சஸி" என்றும், அனுமானை நோக்கி, "நகஸ்சிந்நாபராத் யதி" என்றும் சிறையிலே இருந்த போதே பகவானையும் நம் மையும் சேரவிட முயலுமவள். மார்பிலே இருந்தால் சேர விடச்

சொல்லவேணுமோ? அழகிய மார்பில் ஆரம். ஆரத்துக்கு அழகு கொடுக்கவல்லதாயிருக்கை. "ஆபரணத்துக்கு அழகு கொடுக்கும் பெருமாள்" அல்லவா அவர். ஆரம் அழகை மறைப்பதற்குக் காரணமாயிருக்குமத்தனை. "ஸர்வபூஷண பூஷார்ஹா:" என்று திருவடி பெருமாளை நோக்கிச் சொன்னாப்போலே.

(அடியேன்) முன்பெல்லாம் கூலிச் சேவகரைப் போலே அழகுக்குத் தோற்ற அடிமை. இது பிறவிப் பயன்பெற்ற அடிமை. அனுமன் சீதையைக் காண்பதற்கு முன்பு "தூதோ(அ)ஹம் ராமஸ்ய" என்றார். பிராட்டி கடாக்ஷம் பெற்றவாறே "தாஸோஹம் கோஸலேந்த்ரஸ்ய" என்றார். (அடியேனை) ஆத்மாவுக்கு ஞான ஆநந்தங்கள் ஸ்வரூபம் என்பதைக் காட்டிலும் அடிமை பூண்டிருப்பதே ஸ்வரூபம் என்பதனை உணர்ந்த என்னை. (ஆட்கொண்டது) இழந்த சேஷத்வத்தை (அடிமைப்பட்டிருத்தல்) தந்தது.

முடிக்குரியவனை முடிசூட்டுமாப்போலே, என்னுடைய ஸ்வரூப விரோதியையும், ஆச்ரயண விரோதியையும், உபாய விரோதியையும், உபேய விரோதியையும், போக விரோதியையும் போக்கி ஸ்வரூபானுரூபமான கைங்கர்யத்தைக் கொண்டது தன்னுடைய மேன்மையையும், அழகையும் காட்டி, என்னை அநந்யார்ஹமாம்படி பண்ணி, பெரிய பிராட்டியாரை இடுவித்து, "நகஸ்சிந்நாபராத்யதி" என்னப் பண்ணி, பெரிய பெருமாளை இடுவித்து எனனுடைய விரோதி பாபங்களை ஸவாஸநமாகப் போக்குவித்து, அவர், தம்முடைய போக்யதையை என் நெஞ்சிலே ப்ரகாசிப்பித்துக் கொண்டு புகுரும்படி பண்ணி, என்னுடைய ஸ்வரூபானு ரூபமான கைங்கர்யத்தைக் கொண்டது அத் திருமார்பன்றோ.

(அடியேனை ஆட்கொண்டது—அந்தத் திருமார்பன்றோ) என்னைப் போலேயிருப்பார் வேறே சிலரைத் (தொண்டரடிப்பொடியாழ்வாரை) திருத்தி அடிமைகொள்ளுகைக்கு, "பாயுநீரரங்கம்தன்னுள் பாம்பணைப் பள்ளிகொண்ட, மாயனார் திருநன்மார்பும் மரகத உருவும் தோளும், தூய தாமரைக் கண்களும் துவரிதழ்ப்பவள வாயும், ஆயசீர் முடியும் தேசும்" என்று தாம் கிடக்கிற ஆற்றின் அழகு தொடங்கிக் காட்டவேண்டியிருந்தது. எனக்கோ மார்பு ஒன்றுமே அமைந்தது. அழகிலே அழுந்தின என்னை அவன் குணமன்றோ பிழைப்பித்தது என்கிறார். அழகிலே அழுந்தினாரைக் குணத்தைக் காட்டிப் பிழைப்பிக்கலாம்; குணத்திலே அழுந்தினார்க்குக் குணமே வேணும். நீரிலே அழுந்தினார்க்கு நீரையிட்டுத் தெளிவிக்கும் அத்தனையன்றோ.

இப்பாட்டில்—வைத்ததன்றி என்னுள் புகுந்தான் என்று அந்தர் யாமி ப்ராம்மணத்தில் சொல்லுகிறபடியே எங்கும் நிறைந்திருக்கும் திறமையும் இங்கே உண்டு என்கிறார்.

அவதாரிகை :

(ஆறாம்பாட்டு) அனைத்துலகையும அமுது செய்தருளின கழுத்தினழகு என்னை உண்டாக்கிற்று என்கிறார். திருமார்பின் அழகு திருக்கழுத்தில் ஏறிட்டது என்றுமாம். கீழ்ப்பாட்டில்—திருமார்பானது ஹாரம் முதலிய ஆபரண சோபையையும், பெரியபிராட்டியாருக்குக் கோயில் கட்டணமாயிருக்கிற மேன்மையையும காட்டி தம்மைத் திருவயிற்றினின்றும் ஈர்த்து எழுதிக் கொண்டபடி சொல்லிற்று. இதில் அந்தத் திருமார்புக்குமேலே "ரமயது ஸமாம் கண்ட: ஸ்ரீரங்கநேது ருதஞ்சித க்ரமுக தருணக்ரீவா கம்பு ப்ரலம்ப மலிம்லுச:! ப்ரணய விலகல்லக்ஷ்மீ விச்வம்பராகரகந்தளீ சநகவலயக்ரீடா ஸங்க்ராந்த ரேக இவோல்லஸந்" என்கிறபடியே—இளங் கமுக மரத்தின் கழுத்துப்போலே பசுகு பசுகென்றிருப்பதாய், மூன்று ரேகைகளுடன் கூடியதாய், இரு பக்கமும் நெருங்கி நடுவு பருத்திருக்கையாலும், மொசுகு மொசுகென்றிருக்கிற நாதத்தை உடையதாயிருக்கையாலும், ஸ்ரீபாஞ்சஜந்யம் போலே இருக்கிற திருக கழுத்தின் பெருமை பேசப்படுகிறது திருமார்புக்கோவென்றால் "அலர்மேல் மங்கையுறை மார்பா" என்கிறபடியே பெரியபிராட்டியாருக்குக் கோயில் கட்டணமாயிருக்கிற தன்மையும், திரு ஆரத்நாலே அலங்கரிக்கப்பட்ட தன்மையும் உள்ளது. இனி திருக்கழுத்து தன் பெருமைகளைத்தானே சொல்லுகிறது. சங்குதங்கு முன்கைநங்கையாயிருப்பார் அனேகம் நாய்ச்சிமார் ஆபரணங்களுடன்கூடிய தங்கள் கைகளாலே அணைக்கையாலே அவ்வாபரணங்கள் அழுத்த அவற்றாலே தழும்பேறியிருப்பது நாமன்றோ. ப்ரளய காலத்தில் ஆபத்து வர அனைத்து அண்டங்களையும் அதிலுள்ள உயிர்களையும், ரக்ஷித்தோமும் நாமேயல்லவா. மேலும் பிராட்டியே மார்பிலே இருந்தாலும் அணைப்பதும் நம்மையே அன்றோ. அதுவும் கிடக்க பாண்டவர்கள தூது விடுகிறபோது கட்டிவிட்ட மடக்கோலை இன்றும் நம்மிடத்தில்லவா கிடக்கிறது. அந்த ஹாரந்தனக்கும் ஆதாரம் நாமேயன்றோ. இவ்வளவு பெருமைகளை உடைய கழுத்து, தன்னுடைய ஆபரண சோபையையும், யௌவநத்தையும், ஆபத்துக்களைப் போக்கும் தன்மையையும் காட்டி என்னை ஸம்ஸாரமாகிற ப்ரளயத்தினின்றும் எடுத்து உஜ்ஜீவிப்பித்தது என்கிறார் ஆழ்வார்.

6. **துண்டவெண்பிறையன் துயர் தீர்த்தவன் அஞ்சிறைய**
**வண்டுவாழ் பொழில்சூழ் அரங்கநகர் மேயஅப்பன்**
**அண்டரண்டபகிரண்டத்து ஒருமாநிலம் எழுமால் வரை முற்றும்**
**உண்ட கண்டம் கண்டீர் அடியேனை உய்யக் கொண்டதே.**

பதவுரை :

**துண்டம்**—ஒரு கலை அளவாய், **வெண்**—வெளுத்து இருந்துள்ள, **பிறையன்**—பிறையை சடையிலே உடையவனான ருத்ரனுடைய, **துயர்** பிக்ஷையெடுத்துத் திரிந்த பாதகத்தை, **தீர்த்தவன்**—போக்கின வனாய், **அம்**—அழகிய, **சிறைய**—சிறகை உடையதான, **வண்டு**—வண்டுகள், **வாழ்**—வாழாநின்றுள்ள, **பொழில்சூழ்**—சோலை சூழ்ந்த, **அரங்கநகர்**—கோயிலிலே, **மேய**—கண்வளர்ந்தருளுகிற, **அப்பன்**—தந்தையானவன், **அண்டர்**—அண்டத்தின் உள்ளே வாழும் அனைத்து உயிர்களோடும்கூடிய, **அண்டம்**—அண்டத்தையும், **பகி ரண்டம்**—வெளியே உள்ள அண்டங்களையும், **ஒரு**—ஒப்பற்ற **மாநிலம்**—பெரிய பூமியையும், **எழு**—ஏழுவகைப்பட்ட, **மால்வரை**—குலபர்வதங்களையும், **முற்றும்**—ஒன்றொழியாதபடி, **உண்ட**—அமுது செய்தருளின, **கண்டம்கண்டீர்**—திருக்கழுத்தன்றோ, **அடியேனை, உய்யக்கொண்டது**—ஸம்ஸாரத்தில் அகப்படாதபடி பண்ணிற்று.

விளக்கவுரை :

கீழ்ப்பாட்டிலே— என்னுடைய அஜ்ஞானத்தாலே என்னாலும் பிறராலும் போக்கமுடியாதபடி நெடுங்காலமாகச் சம்பாதிக்கப்பெற்ற தாயும், அவச்யம் அனுபவித்தே தீரவேண்டும் என்னும்படி உள்ள தாயும், பிடரியைப் பிடித்துக்கொண்டு நிற்பவையாயும் உள்ள தீவினை களை பெரியபிராட்டியார் புருஷகாரமாக (சிபாரிசினாலே) "தத் க்ஷணாதேவ நச்யதி" என்று பெரியபெருமாள் நசிப்பித்தார் என்று சொல்லிற்று. இதைக் கேட்டவர்கள், ஒருவன் நெடுநாளாய்ப் பண்ணிய பாவங்களையெல்லாம் பிராட்டியின் புருஷகாரமாகப் போக்கினான் என்று கேட்க ஆச்சர்யமாயிருக்கிறதே ; இது உண்மைதான் என்பதை நாங்கள் அறியும்படி உணர்த்தவேணும் என்று கேட்க, ஆழ்வார் கூறுகிறார். என்னைப்போலே தன்னுடைய அஜ்ஞானத்தாலே தன்னை ஈச்வரன் என்று அபிமானித்துத் திரியக் கூடிய ருத்ரன், லோக குருவாய் தனக்குத் தந்தையுமான பிரம்மாவினுடைய தலையை நகத் தாலே அறுத்து, அதனால் தன்னாலும் பிறராலும் போக்க முடியாத பெருந்துயரைச் சம்பாதித்துக் கொண்டான். அதுபோகைக்காக க்ஷீராப்தி நாதன் பக்கலில் வர, அவ்விடத்தில் பெரியபிராட்டியாரும் தானுமாய்த் தோன்றியபோது, "ஸ்ரீமாந் மயாபிக்ஷாம் ப்ரயாசித :" என்று பெருமாளிடம் பிக்ஷை வேண்ட, அவள் (லக்ஷ்மி) புருஷகார மாக சிவனுடைய ப்ரம்ம ஹத்யையால் வந்த துயர் தீர்த்தார். அதுபோல என்னுடைய ப்ரம்மஹத்யாதி பாபங்களையெல்லாம் போக்கினான் என்கிறார்.

இந்தச் சேதநன் (ஜீவாத்மா) மகாபாதகம் முதலிய பாபங்களைப் பண்ணி, பெரிய ரௌரவம் முதலிய நரகங்களிலே யமபடர்கை சளைக்குமளவும் துன்புறுத்த அசித்தைப்போன்று (உயிரற்றவன் போல) கிடந்து அத்தனையும் அனுபவித்தான். அவர்கள் நரகினின்றும் விடுவித்தவாறே, "ஸ்தாவர க்ரிமயோப்ஜாஸ்ச பக்ஷிணஸ்ச ஸரீஸ்ருபா :" என்று மரம், புழு, பூச்சி, பட்சி, எறும்பு முதலிய ஜென்மங்களில் பிறந்து பின்னர் "மாநுஷ்யம் ப்ராப்ய லோகேஸ்மிந் மூகோ பதிரோ பிவா ; நாபக்ராமதி ஸம்ஸாராத் ஸகலு ப்ரஹ்மஹா பவேத்" என்கிறபடி உலகில் ஊமையாகவோ செவிடாகவோ இன்றி மானிடப் பிறவி எடுத்து ஐம்புலனும் நன்றாக இருக்கப் பெற்றும் இவற்றைக் கொண்டு ஈச்வரனைப் பற்றித் திருநாம ஸங்கீர்த்தனத்தாலே இந்த ஸம்ஸாரத்தைக் கடவானாகில் அவனை ப்ரம்ம ஹத்தி பண்ணினவன் என்கிறார்கள். புழுவைக் கொல்லுபவனுக்கும், பிராம்மண சரீரத்தை வதம் செய்பவனுக்கும், ஹிம்ஸை ஒத்திருக்கச் செய்தே பிராமண வதத்தை மட்டிலும் ப்ரம்ம ஹத்யை என்று சொல்வானேன் என்னில்— பிராமணனது பிறப்பு, ஒழுக்கம், ஞானம் இவற்றால் வந்த கௌரவத்தால் சொல்லப்படுகிறது. அதுபோலவே "யஸ்யாத்மா சரீரம்" என்று பகவானுக்கு சரீரமாக விளங்கக் கூடிய ஆத்மாவை அபஹரித்து நாராயணத்வத்தை சூனியாக்கின ப்ரம்மஹத்தி பண்ணியவன் நான் என்று சொல்லத்தடையில்லை.

(துண்டவெண்பிறையன் துயர் தீர்த்தவன்) "சலங்கலந்த செஞ்சடைக்கறுத்த கண்டன் வெண்தலை, புலன்கலங்கவுண்ட பாதகத்தன் வன் துயர்கெட, அலங்கல் மார்வில் வாச நீர்கொடுத்தவன்" (திருச்சந்த விருத்தம்) என்கிறபடி புண்ய தீர்த்தயாத்ரையாலும், தன் தபஸ்ஸாலும், தன் சக்தியாலும் போக்க முடியாத வலிய துயரை, பிராட்டி புருஷகாரமாகத் தன் மார்பின் வாச நீராலே (மார்பிலுள்ள வியர்வையாலே) போக்கினது தம்முடைய துயரைப் போக்கினதுக்கு எடுத்துக் காட்டாக இருக்கையாலே சிவனை உதாஹரணமாக்குகிறார். தாழை மடலைச் சூடிவருவாரைப் போலே ஒரு கலாமாத்ரமான வெளுத்த சந்திரனை ஜடையிலே உடையனான ருத்ரனுடைய பாபத்தைப் போக்கினவன். கலாமாத்ரமான சந்திரனை ஜடையிலே சூடிவந்தான் என்கையாலே—இப்படி ஆபந்நனாய் (துயருற்றவனாய்) வருகிற விடத்திலும் அலங்காரத்தோடே செருக்கனாய் வந்தானென்கை. சந்திரனின் வெண்மையாலே சிவந்த ஜடைக்குப் பரபாகமாய் இருக்கிறபடி. சுமையாயிருப்பார் சும்மாட்டுக்குள்ளே தாழை மடல் செருகுமாப் போலே யாசகனாயிருக்கச் செய்தே சுக புருஷனாய் அபிமானித்திருக்குமாய்த்து. அனாலும் ஆபத்து வந்தால் எம்பெருமானல்லது புகலில்லையிறே. இதனால் ஒரு தேவதையை ஆபரணமாக உடையவனாகை

யால் வந்த மதிப்பும், போகப்ரதாநன் என்பதுவும், மோக்ஷத்தை அடைய விரும்புமவனல்லன் என்னுமிடமும் சொல்லுகிறது.

(வெண்பிறையன் துயர்) லோகத்துக்கு சங்கரனாய் (மங்களத்தைச் செய்யுமவன்) இருக்கிறவனுக்கு வந்த துக்கமிறே. இவன் தன்னுடைய கர்வத்தாலே பிரமனின் தலையைக் கிள்ளிய பிறகு, சிவன் புத்திரனான தன்மைக்கு மாறாக நடந்துகொண்டாலும் (பிரம்மா) தான் தகப்பனானபடியாலே இவனை அழிக்காமல் கர்வத்தை ஒழிக்குவதற்காக "கபாலீ த்வம் பவிஷ்யஸி" என்று சபித்தார். சிவன் கையிலே "முடையடர்த்த சிரமேந்தி மூவுலகும் பலிதிரிவோன்" என்கிறபடியே கபாலத்தை எந்திக்கொண்டு காகாஸுரனான ஐயக்களைப் போலே "த்ரீன் லோகான் ஸம்பரிக்ராம்ய தமேவ சரணம் கத:" என்று எங்கும் சுற்றி திருப்பாற்கடலிலே சென்ற அளவிலே "இடர்கெடுத்த திருவாளன்" என்கிறபடி பிராட்டியும் தாரமாய் வந்து துயரைத் தீர்த்தானிறே. உலகம் முழுதுக்கும் ஸம்ஹார கர்த்தாவாய் பெரிய மதிப்போடே எல்லாரையும் கும்பிடச் செய்துகொண்டு, உலகுக்கு வழிகாட்டியாய் இருந்துகொண்டு, எம்பெருமானாலே காட்டிக் கொடுக்கப்பட்ட வழியிலே நடந்துகொண்டிருந்து சுயசக்தியினாலே ஸம்ஹரிக்கத் தலைப்பட்டுப்பட்ட பாடன்றோ இது. "தத்ர நாராயண: ச்ரீமான் மயாபிக்ஷாம் ப்ரயாசித:, விஷ்ணு ப்ரஸாதாத் ஸுச்ரோணி கபாலம் தத் ஸஹஸ்ரதா, ஸ்புடிதம் பஹுதா யாதம் ஸ்வப்நலப்தநம் யதா." என்று பரமசிவனே தன் துணைவியாகிய பார்வதியிடம் சொல்லும்படியன்றோ அவன் துயரத்தைப் போக்கினபடி. (துண்ட வெண்பிறையன் துயர் தீர்த்தவன்) சந்திரனுடைய க்ஷயத்தைப் போக்கினான் என்றும் பொருள் கொள்ளலாம். அவனுடைய துயரத்தைப் போக்கினாப்போலே என்னுடைய பாவத்தையும் போக்கும் என்று கருத்து.

(அஞ்சிறைய இத்யாதி) உலகில் முக்யஸ்தர்களே ப்ரம்ம ஹத்தி முதலிய பாபங்களைப் பண்ணி அலைந்துகொண்டிருக்கச் செய்தே நாம் ஒதுங்கி நிற்கக் கூடாது என்று அவர்களைப் பாதுகாப்பதற்காகக் கிட்டவந்து கண்வளர்ந்தருளுகிற உபகாரகன். அழகிய சிறகை உடைய வண்டுகள் வாழும் சோலை சூழ்ந்த பெரிய கோயிலிலே கண் வளர்ந்தருளுகிற பிதாவானவன். அந்த ருத்ரன் இவன்மார்பின் வியர்வையாலே சாபம் நீங்கப்பெற்றுக் களித்தாப்போலே, இந்த வண்டுகளும் அந்தச் சோலையிலே மதுபானம் பண்ணியதால் பிறந்த மகிழ்ச்சி சிறகிலேயே தெரியும்படி களித்து வாழ்கிறபடி.

(வண்டு வாழ்பொழில்) வண்டுகள் அவன் பக்கல் செல்லாதே சோலையின் போக்யதையிலே இளமணல் பாய்ந்து கால்வாங்க மாட்டாதே நிற்கும். அவ்வண்டுகளைப் போலே தம்மையும் அநுபவிப்

பித்து விடாய் கெடுத்தான் என்கிறார். அல்லது "உபாப்யாமேவ பக்ஷாப்யாம் யதாகே பக்ஷிணாம் கதி :! ததைவ ஜ்ஞாந கர்மப்யாம் ப்ராப்யதே புருஷோத்தம :" என்கிறபடியும், "வண்டுகளோ வம்மின்" என்றும் இங்கு வண்டாகச் சொல்லப்படுவது முமுக்ஷுக்களான (மோட்சத்தை அடைய விரும்பி அதற்கான ஸாதனங்களைச் செய்யு முவர்கள்) ஸாத்விகர்களாய், சிறந்த ஞானம் நிறைந்தவர்களாய் ஸத் கர்மாக்களைச் செய்யுமவராய் வாழ்பவர்களைக் குறிப்பதாகும். (பொழில்) பெரிய பெருமாளுக்கு ஆபரணமாய், ஊருக்கும் ஆபரண மாய் இருக்கும் சோலை. அச் சோலைக்கு ஆபரணமாயிருக்கும் வண்டுகள். அவ்வண்டுகளுக்கு ஆபரணமாயிருக்கும் அழகிய சிறகு என்கை.

ருத்ரனானவன் வந்து வேண்ட, அவன் ஒருவனுக்கு உதவினபடி யைச் சொல்லிற்று கீழ். எவருடைய வேண்டுகோளுமின்றி அனைத்து உலகத்தினுடைய ஆபத்துக்களையும் போக்கியதல்லவா திருக்கழுத்து என்கிறார் மேல். (பகிரண்டம்) வெளியே உண்டான அண்டங்கள். (ஒரு மாநிலம்) இப்படிப்பட்ட அண்டங்களைத் தாங்கிக்கொண்டிருக் கையாலே ஒப்பற்ற பெரிய பூமி. (எழுமால்வரை) இவ்வண்டங்களும் பூமியும் பாதாளத்தில் விழாதபடி சங்கு ஸ்தாபநம் (ஆணி அடித்தாற் போலே) பண்ணினாப் போலே இந்த பூமியை ஊடுருவி நிற்கிற மலைபர்வதங்கள் ஏழும்.

(முற்றுமுண்டகண்டம் கண்டீர்) வேற்றைத் தனித்தனியே சொல்லுவானென்னென்னில்; தனித்தனியே சொல்லுகைதான் போக்ய மாயிருக்கையாலே. பெரிய பெருமாள் திருக்கழுத்தைக் கண்டவாறே ஜகத்தையெடுத்து திருவயிற்றிலே வைத்தமை தோன்ற நின்றதாய்த்து. (உண்டகண்டம்) விடுகாது தோடிட்டு வளர்ந்தது என்று தெரியுமாப் போலே.

(அடியேனை உய்யக்கொண்டதே) முன்பு பெற்ற கைங்கர்யத்துக் குத்தடை பிறவாதபடி நோக்கிற்று. என்னை ஸம்ஸாரத்தில் ஒரு நாளும் அகப்படாதபடி பண்ணிற்று.

இப்பாட்டில்—ஆபத்ஸகனான (ஆபத்தில் உதவும் தோழன்) ஸர் வேச்வரன்படியும் இங்கேயுண்டு என்கிறார்.

அவதாரிகை :

ஏழாம் பாட்டில் திரு அதரத்தில் (உதட்டில்) அகப்பட்டபடி சொல்லகிறார். நீந்தப்புக்குத் தெப்பமிழந்தேன் என்னுமாப்போலே, கீழ்ப்பாட்டில் "முற்றுமுண்டகண்டம் கண்டீர் அடியேனை உய்யக் கொண்டதே" என்று திருக்கழுத்தானது தன் பெருமைகளைக் காட்டித் தம்மை எழுதிக்கொண்டபடியைச் சொல்லிற்று. இதுக்குமேலான

திருப்பவளச் செவ்வாயானது, "உலகுண்ட பெருவாயர்" என்று கழுத்தின் பெருமைக்கு முற்பட்டவர் நாம் அல்லவோ என்று தன்னுடைய ஏற்றத்தைக் காட்டி தம்முடைய திருவுள்ளத்தை அக்கழுத்திலின்றும் தன் பக்கலில் இழுத்து வந்தபடியைச் சொல்லுகிறார்.

**7 கையினார் சுரிசங்கனலாழியர் நீள் வரைபோல்**
**மெய்யனார் துளப விரையார் கமழ் நீண்முடியெம்**
**ஐயனார் அணியரங்கனார் அரவினணைமிசைமேயமாயனார்**
**செய்யவாய் ஐயோ ! என்னைச் சிந்தை கவர்ந்ததுவே.**

*பதவுரை :*

*(கையின்)—திருக்கைகளிலே, ஆர்—அழகு நிறைந்த, சுரி—சுழியை உடைத்தான, சங்கு—ஸ்ரீ பாஞ்சஜந்யத்தையும், கனல்—பகைவர்மீது நெருப்பை உமிழ்கிற, ஆழியர்—திருவாழியையும் உடையவராய், வரை போல்—பர்வதம்போலே, நீள்—அழகுமிக்கிருந்துள்ள, மெய்யனார்—திருமேனி உடையவராய், விரை-ஆர்—பரிமளம்மிக்கிருந்துள்ள, துளபம்—திருத்துழாய் மாலையாலே, கமழ்—பரிமளிதமாய், நீள் உயர்ந்துள்ள, முடி—கிரீடத்தை உடையாராய், எம் ஐயனார்—எனக்குப் பிதா ஆனவராய், அணி—ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான, அரங்கனார்—கோயிலிலே வந்து, அரவினணைமிசை—திருவநந்தாழ்வானாகிற திருப்பள்ளியிலே, மேய—கண்வளர்ந்தருளுகிற, மாயனார்—ஆச்சர்யச்செய்கைகளை உடையரான அழகிய மணவாளனுடைய, செய்யவாய்—சிவந்த திருப்பவள வாயானது, ஐயோ !, என்னை—பெண்களுடைய சிவந்த அதரத்தில் ஈடுபட்டிருந்த என்னுடைய, சிந்தை—மனஸ்ஸை, கவர்ந்தது—தன் பக்கலிலே இழுத்துக்கொண்டது.*

*விளக்கவுரை :*

*(கையினார் சுரிசங்கனலாழியர்) "சுரி முளிந்த கைத்தலமும்" என்றும், "பரிகோபமா :" என்றும் வெறும் வடிவிலேயே விரோதிகளை அழிக்கவல்லதாயிருக்கச் செய்தே எண்ணமுடியாத சக்தியை உடைய திவ்யாயுதங்களை தரித்துக்கொண்டு. எப்போதும் கைகழலா நேமியனாயிருப்பது நம்மேல் வினைகடிகைக்கன்றோ, என்கிறார்.*

*ஸ்ரீபாஞ்சஜந்யத்துக்குச் சுரிஸ்வபாவமானாப் போலே, திருவாழிக்கு சத்ருக்கள்மேலே நெருப்பைக் கக்குகையும் ஸ்வபாவமிறே. வெறும் புறத்திலே, அறவே பகைவர்களை அழிக்கத்தக்க கையிலே அழகு நிறைந்து சுரியை உடைத்தான பாஞ்சஜந்யம், சத்ருக்களின் மேலே நெருப்பை உமிழுகின்ற திருவாழி வெற்றை உடையராயிருக்கை. "ஸகோஷோ தார்த்த ராஷ்ட்ராணாம் ஹ்ருதயானி வ்யதாரயத்" என்றும், தீய அசுரர் நடலைப்பட முழங்கும்" என்றும்*

சொல்லுகிறபடியே விரோதி வர்க்கத்தை தன் த்வநியாலே தானே நிரஸிக்கவல்ல ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் "கருதுமிடம் பொருது" என்கிறபடியே விரோதி வர்க்கத்தை, "கூறாய் நீறாய் நிலனாகி" என்கிறபடியே அழியச் செய்யும் திருவாழியையும் தரித்துக் கொண்டிருக்கிறது என்னுடைய அறுக்கலறாப் (போக்க முடியாத) பாபங்களைப் போக்குகைக்கன்றோ. பட்டர் திருக்கோட்டியூரிலே எழுந்தருளியிருக்கிற காலத்திலே ஒரு விசேஷ திவசத்தின்று ஆசாரம் தானியும் இல்லாதவராயிருந்த கோளரியாழ்வானைப் பார்த்துத் தெற்காழ்வான் "இன்று அயநமாயிற்றே ஸ்நானம் பண்ண வில்லையா" என்ன, "ஒரு முழுக்கிலே என் பாபம் போகுமா ? எம் பெருமான் கையிலுள்ள திருவாழியாழ்வானால் போக்கினால்தான் போக்க முடியும்" என்றார். இது கேட்ட பட்டர் அதிசயித்தார். இச் செய்தி இங்கே நினைக்கற்பாலது. திருக்கோட்டியூரிலே எழுந்தருளி யிருந்த அநந்தாழ்வான் பட்டரை, ஸ்ரீவைகுண்டநாதன் இருகையனோ, நான்கு கையனோ என்று கேட்க, இரண்டுவிதமாவும் இருக்கலாம் என்ன ; இரண்டிலும் அழகியதேது என்ன ; இருகையனாகில் பெரிய பெருமாளைப் போலே இருக்கிறது, சதுர்ப்புஜனாகில் நம்பெரு மாளைப் போலே இருக்கிறதென்றார். (கையினார் சுரிசங்கனலாழியர்) நம்மைப்போலன்றிக்கே தெளியக் கண்டவர்கள் பெரிய பெரு மாளையும் சதுர்புஜராயன்றோ அநுபவிப்பது.

(நீள்வரைபோல் மெய்யனார்) திவ்யாயுதங்கள் தானும் மிகை (அதிகம்) என்னும்படி மேருமந்தரமலைகளின் அளவுள்ள என்னுடைய பாபராசிகளை, மலையை இட்டு மலையை நெரித்தாப் போலே நெரிக் கவற்றான பெரிய மலைபோலே திண்ணிதான வடிவை உடையவர். மலையைக் கடலை ஒப்பாகச் சொல்லுமித்தனை. நீட்சி—அநுபவிக்க வேண்டியான் மிகுதி. "பச்சை மாமலைபோல் மேனி" இந்த வடிவை அநுபவிப்பார்க்கு ப்ரகாச ரூபமாயாய்த்து இவர்கள் இருப்பது. அதுக்குமேலே ஒப்பனை (ஆபரணங்களின்) அழகு.

(தாளபவிரையார் கமழ்நீண்முடி) பெரியவர்கள் காரியஞ் செய்கவன் உம்முடைய கார்யம் செய்யப்புகுகிறானோ என்ன ; வெறும் ப்ரம்ம ருத்ராதிகளுக்கே தலைவன் என்றன்றோ அவன் முடிகவித் திருக்கிறது ! "பிதாமஹஸ்யாபி பிதாமஹ :" "பதிம்விச்வஸ்ய" என்றும் சொல்லுகிறபடியே மண்ணுலக விண்ணுலகங்கட்டுத் தலைவன் அல்லவா. (தாளப விரையார்கமழ்) ஸர்வகந்த வஸ்துவுக்குத் தன் வாசனையாலே மணம் கொடுக்கவற்றாய் மேன்மைக்குக் காரண மாயிருக்கிறபடி (நீண்முடி) என்னளவும் வந்து என்னை அடிமைகொண்ட முடி. (எம்மையனார்) ரக்ஷிக்க போனாயிருப்பதொரு உறவுமுறை யுண்டே, உமக்கு அதில்லையே என்று வினவியதற்கு பதில் சொல்லு கிறார். அவனுக்குப் பேரன் என்கிற உறவுமுறைதானுண்டு ; எனக்

ரோவென்றால் "மாதாபிதா ப்ராதா வாஸஸ்ஸுஹ்ருத் கதிர் நாராயண :" என்று எல்லாவித உறவு முறையுமுள்ளது. (எம்மையனார்) என்னைப் பெற்றதமப்பனார். "பிதேவபுத்ரஸ்ய" என்று கீதையில் சொன்னபடி என்னுடைய குற்றங்களையெல்லாம் பொறுக்கவேண்டும்படியான பந்தம் உடையவனன்றோ.

(அணியரங்கனார்) அந்த ருத்ரன் திருப்பாற்கடல் அளவும் சென்றன்றோ காரியங்கொண்டது ; நீர் அவ்வளவும் போனீரல்லவே என்ன ; அவன் மூவுலகும் பலிதிரிவோனாகையாலே போய்க் காரியங் கொள்ள சக்தனானான். அழுங்குழவியாயிருக்கிற என்போல்வாரை ரக்ஷிக்கைக்கன்றோ, ப்ரஜை கிணற்றில் விழுந்தால் கூடக்குதிக்கும் தாயைப்போல இங்கு வந்து சாய்ந்தருளிற்று. (அணியரங்கனார்) அலங்காரமான கோயிலிலே வந்து சாய்ந்தவர். அபரணமானது பூண்டவளுக்கு நிறங்கொடுக்கிறதாகையாலே சொல்லுகிறது. (அணி யரங்கனார்) நமக்கு அடையவேண்டிய விஷயமாக இருந்தாலும் எட்டியிராதே ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான கோயிலிலே வந்து அண்ணியராயும் (சமீபத்தில் உள்ளவராயும்) இருக்கிறபடி.

(அரவினணைமிசை மேய மாயனார்) இவ்வளவேயோ உள்ளது. "யத்ர ராமஸ்ஸலக்ஷ்மண :" என்றும், நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு" என்றும் சொல்லுகிறபடியே புருஷகாரபலமும் உண்டென்கிறார். (அரவினணைமிசை மேய) ரத்நங்களையெல்லாம் பதித்துக் காட்டுமாபோலே தன்னழகு தெரியாதார்க்குத் திருவநந்தாழ்வான் மேலே சாய்ந்து காட்டினபடி. (அரவினணைமிசை மேய) தான் புருஷகாரமாகச் சிலரைக் காட்டிக்கொடுத்தால் அவர்களை அவன் ரக்ஷியாதே விடில் தானும் அவனையெடுத்து உதறிப்போக்கும். (அரவினணைமிசை மேயமாயனார்) "ஸமயா போதித : ஸ்ரீமாந் ஸுகஸுப்த : பரந்தப :" என்கிறபடியேதான் எழுந்திருந்து ஒரு கார்யம் செய்யவேண்டுமோ ; புலி கிடந்த தூறென்றால் ம்ருகங்களெல் லாம் காடுபாய்ந்து போமாப்போலே அடியார்களுடைய விரோதி வர்க்கம் முழுதும் தான் கிடக்கிறபடியைக் கண்ட போதே "கானோ ஒருங்கிற்றும் கண்டிலமால் என்னும்படி கிடக்கிற அச்சர்ய புதன். (மாயனார்) மின்மினி பறக்கிறபடி. எல்லார்க்கும் ஒன்றிலே சாய்ந்த போதே பொல்லாங்குகள் தெரியும் ; இங்குப் பழைய அழகும் நிறம் பெறும்.

(மாயனார்) அங்ஙனன்றிக்கே "கிடந்ததோர் கிடக்கை கண்டும்" என்கிறபடியே இன்று நாமும் சென்றணைவிக்கப் பார்த்தாலும் ஒருக் கடிக்கென்னவொண்ணாதே மல்லாந்தென்னவொண்ணாதேயிருக்கிற ஆச்சரியத்தைச் சொல்லிற்றாகவுமாம். (மாயனார் செய்யவாய் ஐயோ என்னைச் சிந்தை கவர்ந்ததுவே) தன் தாழ்ச்சியை எண்ணிப்

பார்த்துப் பிற்காலிக்கிற என்னை இயற்கையான அழகையும் பேரத்தையும் உடைய திருப்பவளமான தன்னுடைய புன்முறுவலைக் காட்டி, அருகே சேர்த்துக்கொண்டு என்னுடைய மநஸ்ஸை அபகரித்தது. (என்னைச் சிந்தை கவர்ந்தது) உழக்கைக் கொண்டு கடலின் நீரை அளக்கப்புக்கு அது தன்னையும் பறிகொடுத்தேன். (என்னைச் சிந்தை கவர்ந்தது) துவர்த்த செவ்வாயினார்க்கே துவக்கறத் துரிசனான என்னையன்றோ இப்படி அகப்படுத்திற்று என்கிறார். (செய்ய வாய்) ஸ்த்ரீகளுடைய பொய்ச் சிரிப்பிலே துவக்குண்டார்க்கு இச் சிரிப்புக் கண்டால் பொறுக்கவொண்ணுமோ? (ஐயோ) திரு அதரமும் சிவப்பும் அனுபவிக்க அரிதாய் "ஐயோ" என்கிறார்.

(ஐயோ) அவரும் தம்மை முழுக்க அனுபவிப்பிக்கப் பார்த்தார். நானும் முழுக்க அனுபவிப்பேனாகப் பாரித்தேன். இத்தைத் திரு அதரம் ஒட்டாதே இடையிலே இறாஞ்சிக் (பறிக்க) கொள்வதே! ஐயோ என்கிறார். (என்னை) கல்லை நீராக்கி நீரையும் தானே கொண்டது. சித்தாபஹாரத்தைப் பண்ணி ஆத்மாபஹாரத்தை அழிக்கது. ப்ரதானசேஷி (முக்ய தெய்வம்)யைக் கண்டவாறே த்வாரசேஷி (த்வார பாலகர்) அளவில் நில்லாதிறே. இப் பாட்டில் ஸ்ரீவைகுண்ட நாதன் படியும் இங்கே காணலாம் என்கிறார்.

அவதாரிகை :

எட்டாம் பாட்டில் திருக்கண்கள் என்னை அறிவுகெடுத்ததென்கிறார். கீழிற் பாட்டில்—"செய்ய வாய் ஐயோ என்னைச் சிந்தை கவர்ந்தது" என்று திருப்பவளத்திலே இவர் ஈர்க்கப்பட்ட நெஞ்சினராகிறபடியைக் கடைக்கணித்துக் கொண்டு கிடக்கிற திருக்கண்களானவை "செய்யவாய் ஐயோ" என்று இவர் தானே சொன்னார்; அப்படியே சிவப்பால் வந்த அழகொன்றுமேயன்றோ அந்தத் திருவதரத்துக்குள்ளது; சிவப்பும், கருப்பம், வெளுப்புமான பல வண்ணங்களாலுண்டான அழகுடையோமாயிருப்போம் நாமல்லவா என்று திருக்கண்கள் தன்னை அறிவுகெடுத்தபடியைச் சொல்லுகிறார்.

**8 பரியனாகிவந்த அவுணன் உடல் கீண்ட அமரர்க்கு**
**அரிய ஆதிப்பிரான் அரங்கத்து அமலன் முகத்துக்**
**கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப்**
**பெரியவாய கண்கள் என்னைப் பேதைமை செய்தனவே.**

பதவுரை :

பரியன்ஆகி—வரபலங்களாலே பருத்த சரீரத்தை உடையனாய், வந்த—"பரதத்வமுண்டு" என்கிற ப்ரஹ்லாதனை) துன்புறுத்த வந்த, அவுணன்—அசுரனான ஹிரண்யகசிபுவினுடைய, உடல்—சரீரத்தை,

கீண்ட—கிழித்துப்பொகட்டவனாய், அமரர்க்கு—ப்ரம்மாதி தேவர் களுக்கு, அரிய—நெருங்க அரியனாய், ஆதி—முதற் காரணனாய், பிரான்—தான் முற்கோலிவந்து உபகரிக்குமவனாய், (எல்லார்க்கும் உதவுகைக்காக) அரங்கத்து அமலன்—கோயிலிலே வந்து கண்வளர்ந் தருளுகையால் வந்த சுத்தியை உடையவனான அழகிய மணவாள னுடைய, முகத்து—திருமுக மண்டலத்திலே, கரிய ஆகி—கறுத்து, புடைபரந்து—விசாலமாய், மிளிர்ந்து—(சலித்து) ஒளி வீசித் திகழ்ந்து, செவ்வரி ஓடி—செவ்வரி படர்ந்து, நீண்ட—காதளவும் நீண்ட, அ—அப்படிப்பட்ட, பெரிய ஆய—பெரியன ஆகிய, கண்கள்—திருக்கண்களானவை, என்னை—கல்நெஞ்சனான என்னை, பேதைமை செய்தன—தன் பக்கலிலே பக்ஷபதிக்கும்படி பண்ணிற்று.

விளக்கவுரை :

(பரியனாகி) பகவத் குணங்களை எண்ணிநைந்திராமே சேஷத் வத்தை (பரம்பொருளுக்கு அடிமைப்பட்டிருத்தலை) அறிந்து மெலிந் திராமே ஸர்வேச்வரனை ஆசைப்பட்டுத் தளர்ந்த உடம்பாய் ஒசிந்தி ராமே, நரசிம்மத்துக்கும் பிற்காலிக்க வேண்டும்படியிருக்கை. ஆத்ம வஸ்து என்று ஒன்று உள்ளது; அதுக்கு அவனே சேஷி (தலைவன்) யாக இருக்கையாலே அந்த சேஷியானவனை நம்முடைய சேஷத்வம் (அடிமைத் தன்மை) ஆகிற ஸ்வரூபத்தின் ஸித்திக்காகப் பெற வேணும் என்று நினைந்துநைந்து உள்கரைந்துருகி உடம்பை இளைக் கப்பண்ணுகிறானன்றே. அங்ஙனன்றிக்கே பரமாத்மாவை அனுப விக்க ஆசைப்பட்டுப் பெறாமையாலே பக்தி தலைமண்டையிட்டு, "நின் பாலன்பாயே—அடியேனுடலம் நீராயலைந்து!" என்கிறபடியே சரீ ரத்தை இளைப்பித்து மெலிந்திருக்கிறானன்றே. ராஜாக்களுக்குச் சிலர் ஊட்டியிட்டுச் சில காவற் பன்றி வளர்த்துவைக்குமாப்போலே, நர சிம்மத்தின் உகிருக்கு (நகத்துக்கு) இரையாகும்படி தேவர்கள் வரங் களாலே ஊட்டிவிட்டு வளர்த்துவைத்தார்கள். மேல் இத்தால் வரும் அநர்த்தம் அறியாமலே வரங்கொடுத்துப் பருக்க வைத்தார்கள். இது தானே தாம்களிக்கைக்கு உறுப்பாய்த்து. (வந்த) இப்போது தாம் வயிறு பிடிக்கிறார். இன்றும் வருகிறானாகக் காணும் இவர்க்குத் தோற்றுகிறது. அநுகூலனாய் வருகையன்றிக்கே "பகவத் தத்துவம்" இல்லையென்றும், உண்டு என்கிறவனைத் துன்புறுத்துகைக்கு என்றும் வந்த கொடுமையை நினைத்து பயப்படுகிறார்.

(அவுணன்) பகவத் பாகவத விஷயம் என்றால் அவன் ஆத்திரப் படுவதற்குக் காரணம் என்னவென்றால் அசுரஜாதியிலே பிறந்த மூட னாகையாலே என்கிறார். (உடல் கீண்ட) திருவாழியாழ்வானுக்கும் பிற்காலிக்க (தயங்க) வேண்டும்படியன்றோ ஊன்மல்கிமோடு பருத் திருக்கிறபடி. அப்படியிருக்கிற ஹிரண்ய சரீரமானது நரசிம்மத்தி னுடைய மொறாந்த முகமும், நாமடிக்கொண்ட உதடும், இறுத்து

நோக்கின நோக்கும், குத்தமுறுக்கினகையும், கண்டபோதே பொசுக்கின பன்றிபோலே உலர்ந்த தாழைநாரைக் கிழித்தாப்போலே கிழித்த படி. (உடல் கீண்ட) பகவான் தனக்குரியதான ஆத்ம வஸ்துவுக்கு அழிவுவாராமல் "கிள்ளிக்களைந்தான்" என்னுமாப்போலே அஹங்காரத்துக்குக் காரணமான தேஹத்தைக் கிழித்துப்பொகட்டான்.

(அமரர்க்கரிய) இப்படி ப்ரஹ்லாதனுக்கு எளியனாய் நிற்கிற அவ்வளவு தன்னிலே ப்ரம்ம ருத்ராதிகளுக்குக் கிட்ட அரியனாயிருக்கும். "க்வாஹம் ரஜ: ப்ரக்ருதீச தமோதிகேஸ்மிந், ஜாதஸ் ஸுரேதரகுலே க்வ தவாநுகம்பா. நப்ரம்மணோ நச பவஸ்ய நவை ரமாயா யோமேர்பித : சிரஸி பத்மகரப்ரஸாத :" தன்னுடைய சாமர்த்தியத்திலே பகவானைக்கிட்ட நினைப்பார்க்கு அவன் சுமுகமாக இருக்குங்காலத்திலும் நெருங்க அரிதாயிருக்கும். பயன் ஏதும் கருதாமல் செல்லும் பக்தர்களுக்கு சீற்றத்திலும் கிட்ட எளியனாயிருக்கும். மேலும் தேவர்களுக்கு அரியனாயிருக்கிறவன் தமக்கு எளியனாயிருக்கிறபடியைச் சொல்லுகிறார். அதாவது தம்முடைய தாழ்வை நோக்காதே தம்மையே கடாக்ஷித்துத் தம்முடைய தீவினைகள் அனைத்தையும் அடியோடு ஒழித்து, தம்மை முழுக்க அனுபவிப்பித்துக் கொண்டிருக்கிறபடியைச் சொல்லுகிறார்.

இப்படி தேவர்களுக்கும் அரியனாயிருக்கிறவன் உமக்கு எளியனாயிருப்பதற்குக் காரணம் என்னென்னில் (ஆதி) காரணபூதன் (முதற்காரணமாயிருப்பவன்) பல பிள்ளைகளை உடைய ஒருவன் அங்கஹீநமான பிள்ளையினிடத்து அன்புமிக்கவனாயிருக்குமாப் போலே, இவனும் உலகுக்கெல்லாம் காரணபூதனாயிருக்கச் செய்தேயும் என்னுடைய அறியாமை, ஆற்றலின்மை இவற்றை மனதில் கொண்டு என்னளவில் மிகுந்த வாத்ஸல்யமுடையவனாயிருக்கும். (ஆதி) தான் முன்னே நினைந்து உதவுமவன்.

(அமரர்க்கரிய ஆதிப்பிரான்) தனக்கு உதவியதை நினைத்து "பிரான்" என்கிறாரல்லர். தேவர்களுக்குக் கிட்ட அரியனாயிருக்கச் செய்தே ப்ரஹ்லாதனுடைய விரோதியை முற்பாடனாய்ச் சென்று போக்கின உபகாரத்தை நினைத்துச் சொல்லுகிறார். (ஆதிப் பிரான்) ப்ரஹ்லாதன் "அனைத்துக்கும் காரணம் பகவான்" என்று சொல்ல இரணியன் அதற்குப் பொறாமல் "இந்தத் தூணில் உண்டோ அந்தக் காரணபூதன்" என்று தூணைத் தட்டிக் கேட்க, "உயிருள்ளவை உயிரற்றவை—அனைத்திலுள்ளும் இருப்பவன் அவன், ஆகையாலே இதிலும் உளன்" என்ன, "அங்கு அப்பொழுதே" என்கிறபடியே அவன் தட்டின தூணிலே வந்து நரசிம்ம ரூபமாய்த் தோன்றி, அவன் தட்டின கையைப் பிடித்து, "பொன் பெயரோன் வாய்தகர்த்து மார் பிடந்தான்" என்கிறபடியே அவனைக் கதுப்பிலே (கன்னத்திலே)

அடித்து அவன் மார்பைக் கிழித்து பிரகலாதனுடைய ப்ரதிஜ்ஞா வாக்யத்தை விலைச்செலுத்தி தன்னுடைய காரணமாந் தன்மை யையும் ஈச்வரனாந் தன்மையையும் நிலைநிறுத்தின உபகாரத்தைப் பற்றச் சொல்லுகிறாராகவுமாம்.

(அரங்கத்தமலன்) நரசிம்மனைத் தவிர்த்துப் பேசுகிறார். அதாவது, ஒரு காலவிசேஷத்திலே ஒரு தூணின் நடுவே வந்து தோன்றி பிரகலாதன் ஒருவனுக்கு வந்த விரோதியைப் போக்கின அள வன்றோ அங்குள்ளது ; இங்குக் கிடக்கிற கிடையோவெனில்—எல்லாக் காலத்திலும் எல்லாருடைய விரோதிகளையும் போக்குகைக்கு நெருங்கி வந்து இரண்டு தூணுக்கும் (திருமணத் தூண்கள்) நடுவே கிடக்கிற கிடை ஆகையாலே அதனிலும் இது சிறப்புடையதன்றோ. (அரங்கத் தமலன்) பிரகலாதன் பகவத் பக்தியை ப்ரார்த்தித்து, மலைகளாலே கடலிலே அமுக்குண்டபோது தோத்திரங்களைப் பண்ணி, பகவா னிடத்தில் ஞான பக்திகள் மிகுந்தவனாய் விளங்கின காலத்தில் பண்ணிய உபகாரம் ஆனபடியாலே அதற்கொரு மாலிந்யம் (குறை) உண்டு அங்கு. இங்கு "ஏழையே தலன்கீழ்மகன் என்னாதிரங்கி" என் கிறபடியே தன் தாழ்வை நினைந்து பின்நோக்கிச் சென்ற அளவிலும், அத்தாழ்வைக் கருதாது மேல்விழுந்து அனுக்ரஹித்து விரோதி களையும் போக்கிப் பரம புருஷார்த்தத்தைக் கொடுக்கையாலே கீழ்ச் சொன்ன மாலிந்யம் பெரிய பெருமாளுக்கு இல்லையென்றிட்டு "அரங் கத்தமலன்" என்றார்.

நம்போல் வாரும் அவன் திருமுகத்திலே விழித்து அறியாமை யாகிய அழுக்குப்போய் சுத்தராம்படியான அமலத்வம். (அழுக் கற்ற தன்மை) என்னையும் ஆளாம்படி லோக ஸாரங்க மகாமுனிகளோடே காட்டின அமலத்வம் எல்லார்க்கும் உதவும்படி கோயிலிலே கண்வளர்ந்தருளுகையால் வந்த சுத்தி. ஒரு காலத்தில் தோன்றி மறைதல், அவதாரம் போலே சிலகாலம் தோன்றி மறைதல் செய்யாமையால் வந்த சுத்தி ஆகவுமாம். விரோதி அம்சம் கழிந்து சுத்தரானால் அனுபவ விஷயம் சொல்லுகிறது மேல் ; (அரங்கத் தமலனித்யாதி) இவை ஒவ்வொன்றுமே போதும் என்னைப் பேதைமை செய்ய என்கிறார். அண்டர்கோனும் பரமபதம் முதலான வாசஸ் தானங்களையும் விட்டுப்படுகாடு கிடக்கும்படியாய்த்து இவ்வூரின் போக்யதையிருப்பது, . அதுக்குமேலே கண் வளருகிறவருடைய அமல த்வம். "மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் நத்யஜேயம் கதஞ்சன" (சுக்ரீவா ! நட்புச் செய்துகொள்ளவேணும் என்ற எண்ணத்தில் நம்மை அணுகி வந்துள்ள இவ்விபீஷணனை எவ்வாற்றானும் விட மாட்டேன்) என்று விபீஷணன் விஷயமாக அருளிய வார்த்தையை மெய்ப்பிப்பதற்காக, செல்வ விபீடணற்கு வேறாக நல்லானாய், தென் திசை இலங்கை நோக்கிக் கண்வளர்ந்தருளுகிறானத்தனை. எல்லா

விதத்திலும் தாழ்ந்தவனான என்போல்வாரையும் சுத்தராக்குகைக்காக ஆகையால் கிடக்கிற ஸௌலப்யம். அதுக்குமேல் ஒன்றன்றோ முகம்.

(முகத்து) "உன் முகம் மாயமந்திரந்தான்கொலோ" என்றும் சொல்லுகிறபடியே வெறும் முகந்தானே ஈர்ப்பதாயிருப்பது. கீழே தாமனுபவித்த திருப்பவளத்தின் வைலக்ஷண்யம் (சிறப்பு) பின்னாட்டுகையாலே (நினைவுறுத்துவதனாலே) அந்தத்திரு அதரத்தை உடையதான திருமுகத்தைப் பார்த்துச் சொல்லுகிறார். அதுக்குமேலே இரண்டு ஆழங்காலாய்த்து சந்திர மண்டலத்திலே இரண்டு தாமரை பூத்தாப்போலேயும், ஒரு தாமரையிலே இரண்டு தாமரை பூத்தாப்போலேயும் இருக்கிற திருக்கண்கள்.

(கரியவாகி) தாமரைபோலே வெளுத்திருக்கிற திருக்கண்களுக்குப் பரபாகமாம் (பகைத்தொடை) படி இரண்டு கருவிழியை உடைத்தாய். அங்ஙனன்றிக்கே அஞ்ஜனத்தாலே (மையாலே) கறுத்திருத்தல் கண்களைக் கண்டபோதே மூவகைத் தாபங்களாலும் தவித்தவருடைய ஸகல தாபங்களும் போம்படி குளிர்ந்திருக்கும் என்னுதல். தாகத்தோடு வந்தவர்கள் முகத்திலே நீர் வெள்ளத்தை வெட்டி விட்டாப் போலே இருக்கை.

(புடை பரந்து) கடலைத் தடாக மாக்கினாப்போலே இடமுடைத்தாயிருக்கை. தானே காண்கிற அளவுக்கு மேலே இரண்டு பக்கமும் இடுங்கியிராதே, (பரந்து) இடமுடையதாய் அவித்யை கர்ம ப்ரக்ருதி முதலானவற்றைப் போக்கி அனுபவிப்பிக்கும் காரியங்களைப் பற்றவருகிற பரப்பு.

(மிளிர்ந்து) க்ருபை நிறைந்திருப்பதாலே கரை அருகிலேயும் வழி போக முடியாதபடி அலையெறிந்து திரை வீசுகை. காண வேணும் என்கிற இவருடையத்வரை (ஆர்வமிகுதி) யிற்காட்டிலும் இவரை அனுக்ரஹிப்பதற்குண்டான கண்களின்த்வரையைச் சொல்லுகிறது. (செவ்வரியோடி) ச்ரிய: பதித்வத்தாலும் (திருமகள்கேள்வன் என்கிற தன்மையாலும்) வாத்ஸல்யத்தாலும் சிவந்திருக்கை. ஐச்வர்யத்தாலும் வாத்ஸல்யத்தாலும் சிவந்திருக்கும் என்னவுமாம். (நீண்ட) ஒழுங்காக நீண்டிருக்கையும் தம்மளவும் கடாக்ஷம் வந்து அருள் பிறந்தபடியும். "க்ருபயா பரயா கரிஷ்யமாணே ஸகலாங்கம் கில ஸர்வதோக்ஷி நேத்ரே—ப்ரதமம் ச்ரவஸீ ஸமாஸ்த்ருணாதே இதி தைர்க்யேண விதந்திரங்கநேதுி:" (பராசர பட்டர்) பெரிய பெருமாளுடைய திருக்கண்களானவை திருச்செவியளவும் செல்ல நீண்டிருக்கிறபடிக்கு ஒரு காரணமுண்டு என்கிறார் பட்டர். அதாவது பெரிய

பெருமாளுடைய திருக்கண்களானவை மீனுக்குத் தண்ணீர் வார்ப்பாரைப் போலே நித்யஸூரிகளுக்கு முகங்கொடுத்துக்கொண்டிருக்கிற ஸ்ரீவைகுண்டநாதனுக்கும் கண்களிரண்டாய், ராமக்ருஷ்ணாத்யவதாரம் பண்ணி, குகன், விதுரன் முதலானோர் சிலர்க்கு அவ்வக்காலம் முகம் கொடுத்து அருள்புரிந்து வந்தாப்போலே வெறுங்கையோடே போனவர்களுக்கும் கண்ணிரண்டாய், ஸம்ஸாரம் கிழங்கெடுத்தாலல்லது எழுந்திரேன் என்று கோயிலிலே அர்ச்சாரூபியாய் அவரவர் தாழ்வுகளைப் பாராதே முகங்கொடுத்துக்கொண்டு கிடக்கிற பெரிய பெருமாளுக்கும் கண்ணிரண்டாயிருக்கவோ ; இவருடைய க்ருபையைப் பார்த்தால் உடம்பெல்லாம் கண்ணாக வேண்டாவோ என்று பார்த்து எல்லா மண்டலங்களும் தங்களுக்கே ஆகவேணும் என்றிருக்கும் ராஜாக்கள், முற்படத் தங்கள் ராஜ்யத்துக்கருகிலுள்ள பகுதி பகை அரசர்களை அழித்து ஆக்ரமிக்குமாப்போலே பெரியபெருமாளுடைய எல்லா அவயவங்களும் தாமே ஆகவேணும் என்று எண்ணி அருகிலுள்ளவை திருச் செவிகளாகையாலே அவற்றை வென்று அப்பால் போவதாக முற்பட அவற்றுடனே அலையெறிகிறாப்போலேயாய்த்து திருக்கண்கள் செவிகளளவும் நீண்டிருக்கிறபடி.

(அப்பெரியவாய கண்கள்) அநுபவிப்பவர்கள் அநுபவித்து மாளாத வகையில் மிகவும் அளவிறந்து நிற்பதனால் "அப் பெரியவாய கண்கள்" என்றார் : "அப்பாஞ்சசன்னியமும் பல்லாண்டே" என்றுமாப்போலே முகத்தைத் திரிய வைத்துச் சொல்லுகிறார். (என்னை) மிகப் பெரிய மாரீசன் (ஒன்றுக்கும் கலங்காத கல்நெஞ்சன்) அன்றோ நான். என் அறிவையெல்லாம் பறித்துப் போகட்டு பேதைமையைத் தந்தன. ஒருவன் எய்ய அவனையே மற்றவனும் எய்யுமாப் போலே. (இரு கண்கள் ஆனபடியால் இருவராய்ச் செய்தார் என்கிறார்).

(பேதைமை செய்தனவே) ராமபாணம் பட்டு விழுந்து பிழைக்கவொட்டுகிறன இல்லை. (என்னைப் பேதைமை செய்தனவே) இப்பாட்டிலே—"என்னைச் சிந்தை கவர்ந்ததுவே" என்று ஜ்ஞாநப்ரஸார த்வாரத்தை (இந்திரியங்களை) அபஹரித்தபடியைச் சொல்லுகிறது. ஜ்ஞாநாபஹாரமாவது—அழகிலே அகப்பட்டதாக. மாதரார் கயற்கணென்னும் வலையுள்பட்டழுந்துவேனை, தன் பக்கல் ஆதரத்தைப் பிறப்பித்து, மதியெல்லாம் உள்கலங்கும்படி பண்ணிற்று. (என்னைப் பேதைமை செய்தனவே) அவன் அக்கண்களாலே "அமலங்களாக விழிக்கும்" என்றிருந்த கடாக்ஷங்களுக்கு இலக்கானார்க்குத் தெளிவைப் பிறப்பிக்க வேண்டியிருக்க, எனக்குள்ள அறிவு தன்னையும் அழித்தது.

இப்பாட்டில்—நரசிம்மாவதாரத்தின்படியும் இங்கே உண்டு என்கிறார்.

*அவதாரிகை :*

*ஒன்பதாம் பாட்டில் ஊர் முழுதையும் அழிக்கக் கூடிய சண்டையைப்போலே நிறமானது எல்லாரையும் கூட்டிக்கொண்டு வந்து என் நெஞ்சைக் கொள்ளை கொண்டது என்கிறார். கீழ்ப்பாட்டில்—"கண்கள் என்னைப் பேதைமை செய்தனவே" என்று "ப்ரம்ம தண்ட ப்ரகாசாநாம் வித்யுத் ஸத்ருச வர்ச்சஸாம்—ஸ்மரந் ராகவ பாணாநாம் விவ்யதே ராக்ஷஸேச்வர :" என்கிறபடியே ராமபாணம் போலே இருக்கிற அந்தக் கடாக்ஷங்களாலே, "கடைக்கணென்னும் சிறைக் கோலால் நெஞ்சு ஊடுருவவேவுண்டு, நிலையும் தளர்ந்து நைவேனை" என்றாப்போலே அவர் படுகிற பாட்டைக் கண்ட திருமேனியானது, தனிப் பூச்சூடுவாரைப்போலே நம்முடைய அவயவ ஸௌந்தர்யத்தை தனித்தனியே அனுபவித்தாரன்றோ ; இவர் கலம்பகன் மாலை (பல வகைப் பூக்களால் தொடுக்கப்பெற்ற கதம்ப மாலை) சூடுவாரைப் போலே இந்த அவயவங்களுக்கு இருப்பிடமான நம்மை அவற்றோடே கூட அனுபவிக்கப்பெற்றிலரே; இனி மற்றை ஆழ்வார்கள் போலே பரக்கப் பேசி நின்று அனுபவிக்கவும் வல்லர் அல்லர். ஆனபின்பு இந்த அவயவங்களோடும் ஆபரணங்களோடுமாகச் சேர்ந்த சேர்த்தியால் வந்த அழகுமான நம்முடைய சமுதாய சோபையை இவரை அனுபவிப்பிக்க வேணும் என்று பார்த்து, ராஜாக்கள் போருக்குச் செல்லும்போது சதுரங்க சேனைகளையும் சேர்த்துக் கொண்டு அணி அணியாகச் சிலர் மேலே ஏறுமாப்போலே, இந்தத் திருமேனியானது அவயவங்களையும் ஆபரணங்களையும் சேர்த்துக்கொண்டு தன்னுடைய சமுதாய சோபையைக் காட்டி மேல்விழுந்து தம்முடைய திருவுள்ளத்தைத் தன் பக்கலிலே இழுத்துக்கொள்ள, தாம் அதிலே அகப்பட்டு நெஞ்சழிந்தபடியைச் சொல்லுகிறார்.*

**9. ஆலமா மரத்தி னிலைமேல் ஒரு பாலகனாய்**
**ஞாலமேழு முண்டான் அரங்கத் தரவினணையான்**
**கோலமாமணியாரமும் முத்துத்தாமமும் முடிவில்ல தோரெழில்**
**நீலமேனி ஐயோ ! நிறைகொண்டதென் நெஞ்சினையே.**

*பதவுரை :*

*மா—பெரிய, ஆலமரத்தின் இலைமேல்—ஆலமரத்தின் சிற்றிலையிலே, ஒரு—ஒப்பற்ற, பாலகன் ஆய்—பாலகனாகி, ஞாலம் ஏழும்—பூமிப் பரப்பு முழுதும், உண்டான்—தன் திருவயிற்றிலே வைத்தவனாய், அரங்கத்து—கோயிலிலே, அரவின் அணையான்—திருவநந்தாழ்வான் மேலே கண்வளர்ந்தருளுகிற அழகிய மணவாளனுடைய, கோலம்—அழகிதாய், மா—பெருவிலையனான, மணி—ரத்நங்களால் செய்யப்பட்ட, ஆரமும்—ஹாரமும், முத்துத்தாமமும்—முக்தா*

ஹாரமும் விளங்குமதாய், முடிவு இல்லது—எல்லை காண முடியாத, ஓர்—ஒப்பற்ற, எழில்—அழகையுடைய, நீலம்—கருநெய்தல் மலரை யொத்த, மேனி—திருமேனியானது, என் நெஞ்சினை—என் மனத் திலுண்டான, நிறைகொண்டது—அடக்கத்தை அழித்தது, ஐயோ !, என்கிறார்.

விளக்கவுரை :

(ஆலமாமரத்தினித்யாதி) கீழ் ஐந்தாம் பாட்டாலே—தம் முடைய தீவினைகளை அறவே போக்கினபடியைச் சொல்லி, எட்டாம் பாட்டாலே—"பரியனாகி வந்த அவுணன் உடல் கீண்ட" என்று பிறந்த கர்மங்களுக்குக் காரணமான அவித்யையை, தமோரூபமான ஹிரண்யனைக் கிழித்துப் பொகட்டாப்போலே, ஞானக்கையாலே அழித்தான் என்றன்றோ இவர் சொல்லி நின்றது. இதனைக் கேட்ட வர்கள், இத்தேசம், இருள் தருமாஞாலம் ஆகையாலே தெளிவிசும்பி லின்றிம் ஸர்வேச்வரன்தானே அவதரித்தாலும் அவனுக்கும் சோக மோகங்களை உண்டாக்குவதாயிருக்கும். காலத்தைப் பார்த்தவாறே உள்ள அறிவையும் அழித்து விபரீதாநுஷ்டானத்துக்குக் காரணமான அடையாளங்களை உடையதாயிருக்கும். தேஹத்தைப் பார்த்தால் "பகவத் ஸ்வரூப திரோதானகரீம்" என்று பகவத் ஸ்வரூபத்தை மறைத்து விபரீத ஞானத்தைப் பிறப்பிக்குமதாயிருக்கும். வேதாந்த ஞானத்தால் அல்லது அஜ்ஞானம் போகாது ; உமக்கு அந்த வேதாந்தம் கேட்பதற்கு அதிகாரமே கிடையாது ; "வேதாந்த விஜ் ஞான ஸுநிஸ்சிதார்த்தா :" என்றாப்போலே வேதாந்த ஞான முடைய பெரியவர்கள் பக்கலிலே சென்று பணிவிடை செய்து, அவர் களுக்கு சிஷ்யனாய் இருந்து இவ்வர்த்தங்களைக் கேட்டறியவொண் ணாதபடி தாழ்ந்த ஜாதியிலே பிறந்தவராயிருந்தீர் ; ஆக தேசமிது, காலமிது, தேகமிது, உம்முடைய ஜன்மமிது. இப்படியிருக்க பகவா னான கீதோபநிஷதாசார்யன் கீதை பதினெட்டத்யாயத்திலும் நெறி யெல்லாம் எடுத்துரைக்க, அர்ஜுநன் இதைக் கேட்டு, "நஷ்டோ மோஹ : ஸ்ம்ருதி : லப்தா" (மயக்கம் ஒளிந்தது ; ஞானம் வரப் பெற்றேன்) என்று சொன்னாப்போலே நீர் உம்முடைய அஜ்ஞா னாதிகள் முழுதும் போய் ஞானம் பிறந்ததாகச் சொல்லுகின்றீர். இது பொருந்தாததாக உள்ளதே ! என்ன, ப்ரளய காலத்திலே இவ்வுலகம் முழுதும் நோவுபட்டிருக்க, இவையனைத்தையும் தான் சிறு குழந்தை யாகித் தன் சிறிய வயிற்றிலே வைத்து, "ஆலன்று வேலைநீருள்ளதோ விண்ணதோ மண்ணதோ—சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்லு" என்னும்படி ஓராலந்தளிரிலே கண்வளர்ந்து இவ்வுலக முழுவதையும் ரக்ஷித்தருளின அகடிதகடநா ஸாமர்த்யம் (செயற்கரிய செயல்கள்

செய்யுந்திறன்) உடையவனுக்கு, என்னுடைய விரோதியைப் போக்கி எனக்கு ஞானத்தைப் பிறப்பித்த இது பொருந்தாததாயிருந்ததோ என்கிறார்.

(ஆலமாமரத்தினிலைமேல்) ஆலமாமரத்திலே நெரித்தால் பால் பாயும்படி இருக்கிற இளந்தளிரிலே. "மாமரம்" என்று விபரீத லக்ஷணையாய்ச் சிறிய மரம் என்றபடி. "இலைமேல்" என்கையாலே— இந்த இலைக்குள்ளே அடங்கும்படியாய்த்து வடிவின் சிறுமை இருப்பது. "யசோதை பாலகன் முற்றினவன்" (மிகப் பெரியவன்) என்னும்படி ஒப்பற்ற இளம் பாலனாய். யசோதா ஸ்தநந்தயனான க்ருஷ்ணனும் முரணித்திருக்கும்படி இவனுடைய பால்யம் செம்பால் பாயா நிற்கும்.

இந்த பால்யத்தை விளக்குகிறார்மேல்; (ஞாலமேழுமுண்டான்) சிறுபிள்ளைகளாயிருப்பார், முன்னாலே உள்ள பொருள்களை எல்லாம் எடுத்து வாயில் வைத்துக்கொள்ளுமாப்போலே, ஏழுலகங்களையும், அவற்றைச் சூழ்ந்த கடல்கள் ஏழையும், குலபர்வதங்கள் ஏழையும், மற்ற எல்லாவற்றையும் எடுத்து அமுது செய்தான். தேவ மனுஷ்ய பட்சி தாவரங்கள் மயமான உலக பூமுழுதையும் அமுது செய்யா நிற்க, ஒரு மரத்தில் அதன் தளிரில் இடம் வலங்கொண்டு கண் வளர்ந்தருளுகையாகிற இந்த செயற்கரிய செயல்களைச் செய்த வனுக்கு, அந்த தேச கால தேஹ ஐந்மங்களாலுண்டான இழிவைப் பாராதே எனக்கு ஞானத்தைப் பிறப்பித்து, இதுக்கு விரோதிகளான அஞ்ஞானம் முதலியவற்றைப் போக்குகை மிகவும் அரிதாயிருந்ததோ! என்னால் போக்கிக் கொள்வதன்றோ அரிது. அவனுக்கு அரிய துண்டோ. பிரளய காலத்தில் செயற்கரிய செயல்கள் செய்தாப் போலே அன்றோ என்னை அகப்படுத்தினபடியும். (அரங்கத்தா னினையான்) ஸம்ஸாரமாகிய பிரளயத்தினின்றும் எடுப்பதற்காகக் கிடக்கிறபடி. அவ் ஆலினின்றும் இங்கே வரச் சாய்க்கின இத்தனை. இக்கரைய, (சற்று புரண்டு படுத்தாலும் கடலிலே விழுந்துவிடு வனோ என்று அச்சந்தாக்கக்க) செயலைச் செய்தானென்று பயப்படு மவர்கள் அச்சம் கெடும்படி கிடக்கிற இடம்.

(ஆலினணையான்) அந்த ப்ரளய சமுத்ரத்திலே இந்த உலக முழுவதையும் தன் திருவயிற்றுக்குள்ளே வைத்து, தான் மிகச் சிறு குழந்தையாய், ஆலிலையென்று பேர்பெற்ற ஒரிளந்தளிரிலே இடம் வல மாகக் கண்வளரா நின்றான். இப்படிப் பெரிய ஜகத்தையெல்லாம் அமுது செய்தால் அவை ஜீரணியாமலிருந்தாலோ, அமுது செய்த அண்டத்தின் பெருமையாலும் வயிற்றின் சிறுமையாலும் வயிறு கிழிந்து போயோ, ஆலந்தளிரில் இடம் வலமாகப் புரண்டு படுத்தால்

கடலிலே அமிழ்ந்தோ ஆகிவிட்டதானால் என்செய்வது என்று வயிறு பிடிக்க வேண்டியிருக்கும் அங்கு. இங்கோ அவ்வாறின்றி திருவரங்கப் பெரு நகராகிற பெரிய கோயிலிலே, அநந்தனாகிய பெரிய படுக்கையிலே மொசுமொசென்று வளர்ந்த பெரிய வடிவும் தாமுமாய் பெரிய பெருமாள் கண்வளர்ந்தருளினபடி. ப்ரளய காலத்திலே பரிவாரில்லை என்கிற குறையுண்டு; இங்கு அதுவுமில்லை. படுக்கையான ஆதிசேஷன் தான் ஜகத்காரணமாயிருப்பதொரு சிந்தாமணியை உமிழ்ந்து, இத்தை யாரேனுமொருவர் இறாய்ஞ்சிக் கொள்ளில் (அபகரித்துக் கொண்டால்) செய்வதென்னென்று தன் மடியிலே வைத்துக் கரண்டகமிட்டுக் கொண்டு கிடக்கிறாப்போலே (பெட்டியிலே வைத்துப் பாதுகாக்குமாபோலே) இருக்க, இவ்வஸ்துவுக்கு என்வருகிறதோ என்று அஞ்சி தன்னுடைய பணாமண்டலங்களாலே விஷ்ச்சீலய உமிழ்ந்துகொண்டு பாதுகாத்துப் போருகிறான். அவாந்தர ப்ரளயத்திலே அகப்பட்டவர்களைத் தன் திருவயிற்றில் வைத்து ரக்ஷித்தான். ஸம்ஸாரமாகிற மகா ப்ரளயத்திலே பக்கவர்களைத்தான் பள்ளிகொண்ட அழகைக் காட்டி ரக்ஷித்தான். இப்படிக் கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாள் வடிவிருக்கிறபடியைச் சொல்லுகிறார் மேல்; (கோலமாமணியாரமும்) ஸ்ரீகௌஸ்துபம் போலே விலையுயர்ந்ததாய், பெருவிலையனான மாணிக்கங்களாலே அமைத்துப்பட்டுத் திருமேனிக்கு அலங்காரமான ஹாரத்தையும், (முத்துத் தாமமும்) மூன்று வடம், அஞ்சு வடம், ஏழு வடம் என்றாப் போலே சொல்லுகிற திருமேனியின் மார்தவத்துக்கு (மென்மைக்கு) ஏற்ற குளிர்த்தியை உடைய முத்து வடங்களையும்.

(முடிவில்லதோரெழில் நீலமேனி) எல்லைகாண முடியாத அழகையுடைய நெய்த்த திருமேனி. அளவிட்டுச் சொல்ல முடியாததாய், தன்னிகரற்றதுமான ஸமுதாய சோபையை (கூட்டுப் பொலிவு) உடையதுமாய். (நீலமேனி) இந்த ஆபரணங்களாலும் ஸமுதாய சோபையாலும் ஒழுக வேண்டாதபடி இவை தனக்கு நிறம் கொடுக்கும்படி. அந்தத் திருமேனி தன்னைப் பார்த்தாலும் அறப்பளபளத்து, அத்தை நீக்கி உள் வாயிலே கண்ணை விட்டுப் பார்த்தால் காண்கிறவன் கண்களிலே குளிர அஞ்ஜனத்தை எழுதினாப்போலேயிரே இருப்பது. அவனுக்கு அநந்தத்வாக்கெல்லையின்றிக்கேயிருப்பதும் வடிவின் வைலக்ஷண்யத்தாலே (சிறப்பினாலே) யன்றோ.

(நிறைகொண்ட என் நெஞ்சினையே) என்னுடைய தையக்குண்டான பர்த்தியை அபஹரித்தது; என்னுள்ளே உள்ள சாம்பர்யத்தையும் (நெஞ்சமைத்தத்தையும்) போகடித்தது. ப்ரளய காலத்தில் இவ்வுலகுக்கும் உயிர்களுக்கும் நோவுவாராமல் தம் திருவயிற்றிலே

வைத்துக் காத்தவனாயிருக்க அவனுக்கு விருப்பமான அவன் " வடிவழகு என்னுடைய நெஞ்சை அழித்தது.

(ஐயோ ! ) பச்சைச் சட்டையிட்டுத் தனக்குள்ளதைக் காட்டி எனக்குள்ளதையடையக் கொண்டான். நான் எல்லாவற்றையும் அனுபவிக்க வேணுமென்றிருக்க எனக்கு அனுபவத்துக்கு ஸாதனமான என் நெஞ்சைத் தன் பக்கலிலே இழுத்துக்கொள்வதே. ஐயோ ! என்கிறார்.

அவதாரிகை :

நிகமத்தில் (முடிவில்) இவ்வாழ்வார் இவ்வூருக்கு வெளியே உள்ள தேசங்கள் அடைய உள்ளார் ரஜோ குணமும் தமோ குணமும் மிக்கவராய் ஐம்புல இன்பங்களிலே ஈடுபட்டவராய், அது தானும் நேருக்கு நேர் கிட்டாமையினாலே பொருள் ஈட்டுதல் முதலியவற்றிலே இறங்கி, பெரியகோர் இடும்பை (துன்பம்) படுகிறபடியைக் கண்டார். திருவரங்கத்திலுள்ளார் பரம ஸாத்விகராய் ஒப்பற்ற பேரின்ப வெள்ளப் பெருக்காயிருக்கிற பெரிய பெருமாளை அனுபவித்துக் கொண்டு கொண்டு பண்டமுற்றும் களித்திருக்கிறபடியையும் கண்டார். "வரம் ஹுதவஹ ஜ்வாலாபஞ்ஜராந்தர் வ்யவஸ்திதி : நசௌரி சிந்தாவிமுக ஜநஸம்வாஸ வைசஸம்" என்று மற்ற இடங்களில் உள்ளாரோடு பொருத்தமின்றி "ஸர்வ புண்யதமோ தேச : என்று இருப்பதால் பரம பாவநரான பெரியபெருமாள் சாமத்திட்டமே செழுநீர்த் திருவரங்கத்தாய்" என்று இவ்வூரின் ஸம்பந்தத்தாலே மிகவும் புனிதமானவர் என்னும் சிறப்பை உடையவராக இருக்கிறார். ஆகையால் இவ்வூரிலே புகுதை இவ்வூருக்கு இழுக்கு என்று பார்த்து, "அங்குற்றேனல்லேன் இங்குற்றேனல்லேன்" என்கிறபடியே பிறருடைய நைச்யத்தாலே (தன் உறவினரது தாழ்ச்சியாலே) அங்குப்போகமாட்டாதே, தம்முடைய நைச்யத்தாலே இங்குப் புகவும் மாட்டாதே இடைப்பட்டவராய் "உத்தரம் தீரமாஸாத்ய கஸ்த ஏவ வ்யதிஷ்டத" என்று ஸ்ரீவிபீஷணாழ்வான் ராம கோஷ்டிக்கும் ராவண கோஷ்டிக்கும் நடுவிலே வானத்திலேயே நின்றாற்போலே, அகமகிழும் தொண்டர் வாழும்படி அன்பொடு தென் திசை நோக்கிக் கொண்டு கண்வளருகிற பெரியபெருமாளுடைய கண்ணுக்கிலக்கான தென்னாற்றங்கரையைப் பற்றி நின்றார்.

பெரிய பெருமாளும், "ஈச்வரோஹம் ; அஹம் போகீ ; நாந் யோஸ்தி ஸத்ருசோமயா" என்று நாடடங்கலும் அஹங்காரம் மண்டியவராய் ஐம்புல இன்பங்களிலேயே ஈடுபட்டவராய் நோவுபட்டு நிற்க, "இவர் இப்படியாவதே" என்று மனத்திலே பெரிதும் மகிழ்ச்சி கொண்டார். இவ்வாழ்வார் விஷயத்தில் திருவுள்ளம்

பேராறு மண்டி, தாழ்ந்தவர்கள் முக்யமாகப் பெற வேண்டியதான திருவடிகளைக் கொண்டு வந்து இவருடைய திருவுள்ளத்திலே "என் கண்ணினுள்ளன ஒக்கின்றவே" என்று நேரே பார்த்தாற்போலவே இருக்கும்படி, நன்கு விளங்கும்படி வைக்க, அந்தத் திருவடிகளை அநுஸந்தித்தார். தம்முடைய மநஸானது ஞானத்திற்கு இருப்பிடம் ஆனதாகையாலே அந்தத் திருவடிகளுக்கு மேலான திருப்பீதாம்பரமும் திருவரையுமான சேர்த்தியை மடிபிடித்தநுபவித்தார். இப்படி மநஸ்ஸும் நாமும் அனுபவிக்கும்படி நம்மை உண்டாக்கியது திரு நாபீகமலமன்றோ என்று அத்தை அனுபவித்தார். மேன்மைக்கும் ஸௌலப்யத்துக்கும் (எளிமைக்கும்) பட்டம் கட்டியிருக்கிறோம் நாமல்லவா என்று திரு உதரபந்தநம் தன் பக்கலிலே இழுக்க அதை அனுபவித்தார்.

அதுக்குமேலே இருக்கிற திருமார்பானது தன்னுடைய ஹாரம் முதலிய ஆபரணங்களையும் பெரியபிராட்டியாருக்குக் கோயில் கட்டணமான (இருப்பிடமான) மேன்மையையும் காட்டி இழுத்துக் கொள்ள அந்தத் திருமார்பை அனுபவித்தார். அந்தப் பிராட்டிக்கும் ஹாரம் முதலிய ஆபரணங்களுக்கும் பற்றுக் கோடான திருக்கழுத்தை அனுபவித்தார். அதுக்குமேல் "ஸர்வ பூதேப்ய: அபயம் ததாமி" என்று அருளிய வாயைச் சொல்லாநிற்கச் செய்தே, அனுபவிக்கிற நாய்ச்சிமார்களுட்பட "வாயழகர் தம்மை அஞ்சுதும்" என்று கண் களைச் செம்பிளித்து (மூடி) அனுபவிக்கும்படி இயற்கையான அழ கையுடைய திருஅதரத்தை (உதடுகளை) அனுபவித்தார். இப்படி அவயவங்களை அனுபவிக்குமிடத்து இடையில் திவ்ய ஆயுதங்களும் இறாய்ஞ்சிக்கொள்ள (பறித்துக்கொள்ள) அவற்றை அனுபவித்து, "அபயம் ததாமி" என்றாப்போலே சொல்லுகிற வார்த்தைகளை மேலெழுத்திட்டுக் கொடுக்கிற குளிர்ந்த கடாக்ஷங்களை உடையதான திருக்கண்களை அனுபவித்தார். முடிவில் பாலும் பழமும் கண்ட சர்க்கரையுமான ரஸவஸ்துக்களைச் சேர்த்துச் சாப்பிடுவாரைப் போலே இந்த அவயவங்களோடுண்டான சேர்த்தியால் வந்த அழ கையும், இயற்கையான அழகையுடையதான திருமேனியின் பகுங் கூட்டான ஸமுதாய சோபையையும் அனுபவித்தாராகக் கீழே சொல்லியது.

இவருடைய இப்படிப்பட்ட மாநஸாநுபவத்தையும், மனத்துடன் கூடிய வாய்ச்சொல்லநுபவத்தையும் கண்ட பெரிய பெருமாள் இப்படி நற்குணங்கள் நிறைந்தவராய் அனுபவிக்கிறபடியைக் கண்டு, "த்ரஷ்டவ்ய: ஸர்வதேஹிபி:" (உடம்பெடுத்தவர் அனைவராலும் காணத்தக்கவர்) அவரை அழைத்துக்கொண்டு தன்னருகில் இருத்திக் கொள்ளவேண்டும்படி அவரிடத்தில் பெரிதும் ஈடுபாடுடையவர்

ஆஜ்ஞையாலும், "க்ஷணேபிதே யத்விரஹோஸ்திதுஸ்ஸஹ:" என்கிற படியே தம்மை ஒருகால். காணவேணும் என்னும் ஆசையுடையாரை க்ஷணகாலமும் பிரிந்திருக்கமாட்டாமையாலும் அவரை அழைப்பித்துக்கொள்ளவேணும் என்று பார்த்தார். இனி நாம் போய்க் கொண்டுவருவோம் என்றால் "அஸங்கேதம் அநாலாபம்" என்றாப் போலே சொல்லுகிற ஸங்கல்பத்தைக் குலைக்க வேண்டுகையாலே அது செய்யவொண்ணாதாயிருந்தது. இனி இவர் தாமே வரவென்றால் அதுவும் தமக்கு ஸ்வரூப ஹாநியாயிருந்தது. "அவாக்யநாதர:" என்ற வாக்யத்துக்கு விரோதம என்றெண்ணினான். அர்ச்சாவதார ஸமாதிக்கு விரோதம் என்னுமாம். ஆனபின்பு விபீஷணாழ்வானை மகாராஜரை (சுக்ரீவனை) இட்டு "அழைத்து வா" என்றாப்போலே இவரையும் ஒருவரையிட்டு அழைப்பிக்கவேணும் என்று பார்த்தார்.

அந்த விபீஷணன் ராஜ்யத்தை விரும்புமவனாயிருக்கையாலே அருகு நிற்கிற இளையபெருமாள் நிற்க ராஜ்யத்தை விரும்புமவரான குரங்குகளிலே சிறந்தவரான மகாராஜரை இட்டழைத்துக் கொண் டாப்போலே இவரையும அழைத்துக்கொண்டார். இவர் "சென்ற தாம் என சிந்தனையே" "அடியேன் உள்ளத்தின்னுயிரே" "என்னுள்ளத்துள் நின்றுலாகின்றதே" "நிறைகொண்டதென் நெஞ் சினையே" என்று மநநபரராய் (மானசிக அநுபவம் பண்ணுவதில் ஈடுபாடுடையவர்) இருக்கையாலே (முநி: மநந சீல:) மநநபரராய் சிறந்தவராய் இருப்பார் ஒருவரை இட்டழைப்பித்துக்கொள்ள வேணும் என்று பார்த்து, அருகே ஸேவித்து நிற்கிற லோகஸாரங்க மஹாமுனிகளைப் பார்த்து "அழைத்துவாரும்" என்று திருவுள்ள மானார்.

அவரும் எப்போதும் பெரிய பெருமாளை ஸேவித்திருக்கையாலே பெரிய பெருமாள், உயர்குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம இவைகளாலே பூர்ணராயிருப்பாரைப் பார்த்தருளி, ஏகாந்தங்களிலே "இழிகுலத் தவர்களேனும் எம் அடியார்களாகில் தொழுமின்நீர் கொடுமின் கொள்மின்" என்று உபதேசிக்கக் கேட்டிருக்கையாலும், "நின்திரு வெட்டெழுத்தும் கற்று நான்—உற்றதும் உன்னடியார்க்கு அடிமை" என்றும், "ஆரெண்ணும் நெஞ்சுடையார் அவர்எம்மை ஆள்வரே" என்றும், "பங்கயக் கண்ணனை—பயிலும திருவுடையார்யவரேனும் அவர்கண்டீர், பயிலும் பிறப்பிடைதோறெம்மையாளும் பரமரே" என்றாப்போலே ஆழ்வார்கள் அருளிச் செய்யக் கேட்டிருக்குமவராகை யாலே கடுகப்போய் அவரை அருள்பாடிட்டுத் தாம் தலைமேல் தாங்கி வந்தார்.

இவரும் பெரியபெருமாளுடைய ஸௌரவத்தைக் குலைக்கவொண்ணாதென்று, முநிவாஹநராய் வந்து புகுந்து பெரியபெருமாளைத் திருவடி தொழுதார். "ஆவிர்பபூவ பகவான் பீதாம்பர தரோ ஹரி:" என்று தோத்திரம்பண்ணிய பிரகலாதனுக்கு வந்து தோன்றி அவன் விரும்பியவற்றைக் கொடுத்து அவன் ராஜ்யம முதலியவற்றில் போது போக்க வல்லனாகையாலே அவன் பார்த்துக் கொண்டிருக்கச் செய்தே உடன் மறைந்துவிட்டார். பின்பு அந்த ராஜ்யாதிகளிலே பிரகலாதனும் போது போக்கியிருந்தான். இவ்வாழ்வார் பிரகலாதனைப் போலல்லாது வேறு உபாயம் எதையும் பற்றாதவராய், அவனிடத்து வேறு பயனேதும் கருதாதவராய், இருக்கையாலே நம் பிரிவு பொறுக்கவல்லரல்லர் என்று பார்த்தருளி தம்முடைய ஸ்வரூபாதிகளைக் காட்டித்தந்தார். இவரும் அது கண்டு மகிழ்ந்து மானஸிகமாக அநுஸந்தானம் பண்ணுகிற நிலையிலே "ஆதி" "விண்ணவர் கோன்" "நீதிவானவன்" "அரங்கத்தம்மான்" என்றும், "உலகமளந்து அண்டமுற நிவந்த நீண்டமுடியன் அன்று நேர்ந்த நிசாசரரைக் கவர்ந்த வெங்கணைக்காகுத்தன்" என்றும், "விரையார்பொழில் வேங்கடவன்" என்றும் தம்முடைய பரவ்யூஹ விபவ அர்ச்சாவதாரங்களையும் தம பக்கலிலேயே அநுஸந்திக்கையாலே இவற்றைத் தனித் தனியே அனுபவிக்கவேணும் என்கிற விருப்பம் இவர்க்கில்லை என்கிற விஷயத்தை நெஞ்சில் கொண்டார்.

உள்ளுவாருள்ளிற்றெல்லாம் உடனிருந்து அறிந்திருக்கச் செய்தேயும், இவரைச் சோதிப்பதற்காக அவற்றையும் இவர்க்குத் தனியே காட்டி இவர் அனுபவிக்கும்படி பண்ணுவோம் என்று பார்த்தருளினார். அது செய்யுமிடத்து புருஷார்த்தமாக (மனிதனாலே ஆசைப்படத்தக்க பயன்) வேண்டுகையாலே இவருடைய விருப்பத்தை அறிந்து செய்யவேணும்; இல்லையாகில் இவர், நாம் அதனை வெளிக் காட்டின அளவிலே "ஏரார் முயல் விட்டுக் காக்கைப் பின் போவதே" என்று திருமங்கையாழ்வாரைப்போலே நிந்திக்கிறாரா; "அச்சுவை பெறினும் வேண்டேன்" என்று *காற்கடைக்கொள்ளுகிறாரா (*அலட்சியப்படுத்துகிறாரா) அறியவேணும் என்று எண்ணினார். தம் திருவுள்ளத்திலே முன்னே நினைத்ததை அறிந்த இவர் கடலிலே குளப்படி உண்டாமாபோலே "பூர்ணம்" என்றிறபடியே பெரியபெருமாளிடத்திலேயே எல்லாம் இல்லையோ; இனிப்பின்பு எனக்குப் பெரிய பெருமாளையொழிய வேறொருவரை அனுபவிக்க விருப்பமில்லை; எனக்கு இருந்தாலும் அவரை அனுபவித்த என் கண்கள் மற்றொன்றினைக் காணாவே என்கிறார்.

10. கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெய்
உண்டவாயன் என்னுள்ளம் கவர்ந்தானை
அண்டர்கோன் அணியரங்கன் என்னமுதினைக்
கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே.

பதவுரை :

கொண்டல் வண்ணனை—நீருண்ட மேகம்போலே இருக்கிற நிறத்தை உடையவனாய், கோவலனாய்—இடைக் குலத்திலே வந்து அவதரித்து, வெண்ணெயுண்ட—வெண்ணெயை அமுதுசெய்த, வாயன்—திருப்பவளத்தை உடையவனாய், என்உள்ளம் கவர்ந்தானை—சதிராமடவாரை மதித்துப்போந்த என் மநஸ்ஸை அபஹரித்தவனாய், அண்டர்கோன்—அண்டத்தினுள்ளிருக்கும் ஆத்மவர்க்கத்துக்கு நிர்வாஹகனாய், அணி—ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான, அரங்கன்—கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுமவனாய், என் அமுதினை—எனக்கு அம்ருதம்போலே பரம போக்யனானவனை, கண்ட கண்கள்—காணப்பெற்ற கண்கள், மற்று ஒன்றினைக்காணா—வேறொன்றைக் காணா என்கிறார். ஏ—ஆச்சரியம்.

விளக்கவுரை :

(கொண்டல் வண்ணனை) "நபாமஸசக்ஷுஷாபஶ்யதி கஶ்சநைநம்" (ரிக்வேதம்) "நசக்ஷுஷாபஶ்யதி கஶ்சநைநம்" (யஜுர் வேதம்) என்று கண்ணாலே காண முடியாது என்கிற இலச்சினையை அழித்துத்தன் கண்களுக்கு விஷயமாகும்படி தன் வடிவழகைக் காட்டிக் கொடுத்த உபகாரத்தைச் சொல்லுகிறார். மேலும் தம்முடைய பர வ்யூஹ விபவங்களை அனுபவிப்பிப்பதாகத் தம் திருவுள்ளத்திலே அந்த ஔதார்ய குணத்தை நினைத்து "கொண்டல் வண்ணன்" என் கிறார். அல்லது வாழ்க்கையில் ஏற்படக் கூடிய மூவகைத் தாபங் களால் உண்டாகக் கூடிய தாகம் தீரும்படி "அத்ரௌசயாலுரிவ சீதல காளமேக:" என்கிறபடியே மழைக்குரிய குளிர்ந்த காளமேகம் போலே இருக்கிற நிறத்தை உடையவன் என்றோ, கண்டவரது சிரமங் களையெல்லாம் தீர்க்கக் கூடிய வடிவை நினைத்து "கொண்டல் வண்ணன்" என்கிறார் என்றோ கொள்ளலாம். பன்னீர்க்குப்பி போலே உள்ளுள்ளவையெல்லாம் வெளியே நிழலிட்டபடி. "வண்ணம்" என்று ஸ்வபாவமும் ஆதல், நிறம் ஆதல், நம்மாழ்வாரும் "முகில்வண்ணன் அடியை அடைந்து அருள்சூடி உய்ந்தவன்" என்று அருளினார்.

(கோவலனாய் வெண்ணெயுண்ட வாயன்). அந்த மேகமோ வென்றால் ஆகாயத்தில் எட்டி நின்று மழையைப் பொழிந்துவிட்டுப் போய்விடும். அவ்வாறின்றி இடையரோடு இடைச்சியரோடு வித்தியாசமின்றி ஒரே தன்மையாகக் கலந்து தன் வடிவழகை அவர்களுக்கு

[illegible] (எல்லாவற்றையும் ஒழித்து விடுதல்) பண்ணின படி. (கோவலனாய் வெண்ணெயுண்ட வாயன்) பரமபதத்தில் உள்ள நிலையிலேயே இங்கு வந்து வெண்ணெய் அமுது செய்யில் மாலிகைச் சாந்து (நித்யசூரிகள் பூசுவித்த உயர்ந்த சந்தனம்) நாறுமே; சக்ர வர்த்தித் திருமகனாய் வந்தவதரித்த நிலையில் மேன்மையாலே ராஜா வாக்கிச் சிலர் சீராட்டுகையாலே வந்து வெண்ணெய் களவு காணமுடி யாதே அதுக்காக, (கோவலனாய் வெண்ணெயுண்ட வாயன்) சக்ர வர்த்தி தன்னுடைய ராஜ்ய ஐச்வர்யத்தை ஆளுகைக்காக "எனக்கொரு பிள்ளை வேணும்" என்று "மஹதா தபஸா" என்கிறபடியே நோன்பு நோற்று பெருமாளைப் பெற்றாற்போலே ஸ்ரீ நந்தகோபரும் "கானாயன் கடிமனையில் தயிருண்டு நெய் பருக நந்தன் பெற்ற ஆனாயன்" என்கிறபடியே திரு ஆய்ப்பாடியில் பால் தயிர் வெண் ணெய்ப் பெருக்கு எல்லாம் பாழ்போகலாகாது என்று இதனை உண் கைக்காக நோன்பு நோற்றுப் பெற்ற பிள்ளையன்றோ க்ருஷ்ணன்.

(வெண்ணெயுண்டவாயன்) பெரிய பெருமாள் கொறுட்டை (வாய்ப்புறத்தை) மோந்து பார்த்தால் இப்போதும் வெண்ணெய் நாறா நிற்கும். (வெண்ணெயுண்டவாயன்) தன்னை அண்டியவர் களான ஆய்ச்சியரின் உடைமை (சொத்து) ஆகையாலே அவர் தம்கை ஸ்பர்சம்பட்டதன்றோ என்று இன்றைக்கும் அந்தக் குணுங்கு நாற்றம் (வெண்ணெய் மணம்) வாயிலே தோன்றும்படியன்றோ பெரிய பெரு மாள் கண்வளர்ந்தருளுவது. "கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ" என்று ஸந்தேஹிக்க வேண்டாதபடியன்றோ இன்று மகப் பட வாய் குணுங்கு நாறும்படி.

(வெண்ணெயுண்டவாயன் என்னுள்ளம் கவர்ந்தானை) கோவல னாய் வெண்ணெயுண்டாப்போலே கொண்டல் வண்ணனாய் என் னுள்ளம் கவர்ந்தவனை. யசோதைப் பிராட்டியுடைய நெஞ்சிலே பண்ணின சிரத்தையை என்னுடைய நெஞ்சிலே பண்ணி புஜித்தவனை. அந்தத் திருவாய்ப் பாடியில் பெண்கள் உறிகளிலே வெண்ணெய் வைத்துக் கள்ளக்கயிறு (உறிபிரிந்திராமல் நெருங்கியிருக்கும்படி செய்யும் சுருக்குக் கயிறு. அது இருக்குமிடம் எளிதில் அறியமாட் டாமையாலே கள்ளக்கயிறாகிறது) உருவியிட்டு வைத்துப்போவர்கள். அந்த உறிகளின் குறி அழியாதிருக்க அந்த வெண்ணெய்களை வெறுந் தரை ஆக்கினாப்போலே ஆய்த்து அரங்கம் நன்னுள் கள்வனார் நான் குறியழியாதிருக்க என்னுடைய சிந்தையை அபஹரித்தபடி. (என் உள்ளம் கவர்ந்தானை) வைத்த குறி அழியாதிருக்க வெண்ணெய் விழுங்கி வெறுங் கலமாக்கினாப்போலே என்னுடைய மநஸ்ஸை அப ஹரித்தான். கலமிருக்க வெண்ணெய் குடிபோனாப் போலே ஆய்த்து இவர் உடம்பிருக்க உள்ளம் குடிபோனபடி. தெய்வீக ஸம்பத்தைப்

பெற்றவர்களான அர்ஜுநன் முதலான பெரியவர்களைக் கூப்பிட்டுத் தங்கள் தங்களுடைய மநஸ்ஸை இவன் பக்கலிலே வைக்க வேணும் என்று பார்த்து, அது செய்யப் போகாமல் "சஞ்சலம்ஹி மந: க்ருஷ்ண" என்றாப்போலே பெருங்காற்றைத் தாம்பிட்டுப் பிடிக்கலாம்; என் மநஸ்ஸை ஒரு அளவாக்கப் போகிறதில்லை என்னும்படியன்றோ மநஸ்ஸினுடைய சஞ்சலத்வமும், திமிரும்படியான மிடுக்கும். அப்படி நின்றவா நில்லாத நெஞ்சை என் பக்கல் விருப்பமின்றிக்கே இருக்க நானும் அறியாதபடி அபஹரித்துத் தன்பக்கலிலே சேர்த்துக் கொண்டான்.

(அண்டர்கோன்) இப்படி இடையரோடும் இடைச்சிகளோடும் கன்னியரான உம்மோடும் வாசியறவந்து வெண்ணெயையும் மனஸ்ஸையும் அவன் களவு கண்டது—புறம்பு ஆளில்லாமையாலும் தன் குறைபாலேயோ என்ன; சூட்டு நன்மாலைகள் தூயன ஏந்தி விண்ணோர்கள் நன்னீராட்டி அந்தூபந்தரா நிற்கச் செய்தே அன்றோ களவு வெண்ணெய் தொடுவுண்ணப்போந்து அவதரிக்கவேண்டுகிறார். அல்லது "அண்டர்" என்பதற்கு இடையர் என்றோ அண்டத்திலுள்ள உயிர்கள் என்றோ பொருள் கொள்ளலாம். (அணியரங்கன்) என் நெஞ்சை அபகரித்து சேணுயர் வானத்திலே போயிருக்கையன்றிக்கே, கண்ணாலே காணலாம்படி ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான கோயிலிலே கண்வளர்ந்தருளுகிறவன் ஸம்ஸாரிகள் *அறவைத்தனப்படாதபடியிலேயிறே (*அறவைத்தனம்—திக்கு இல்லாதவன்—காப்பாரில்லாதவனாயிருத்தல்) இக்கிடை கிடக்கிறது. இக்கற்றவர்களை ரக்ஷிப்பதற்காகத்தான் இக்கிடை கிடக்கிறது. (அணியரங்கன் என்னமுதினை) தேவர்கள் அம்ருதம் போலே உப்புச் சாறாய் எட்டா நிலத்திலே இருக்குமதன்றிறே இவருடைய அம்ருதம்.

(என்னமுதினை) ப்ரம்மா முதலான தலைவர்களுக்கு முதலி (காரணம்—தலைவன்) யாயிருக்கும்; எனக்குச் சாகாமல் காக்கும் அம்ருதமாயிருக்கும். "அளப்பரிய ஆரமுதை அரங்கமேய அந்தணனை" என்கிற (அமுதினைக் கண்ட கண்கள்) இந்தக் கண்கள் எம்பெருமானைக் காணாமல் இருக்குமாகில் வெளியே போகலாயிருக்கும்; காட்சிதான் அனைவமிராயிருந்ததேயானாலும் புறம்பே போகும். அங்ஙனன்றிக்கே பூர்ணாநுபவம் பண்ணின கண்கள்.

(கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே) அம்ருத பானம் பண்ணினார்க்குப் பாலையும் சோற்றையும் *தீற்றப்போமோ. (*தின்றுதல்—தன்வினை; தீற்றுதல்—பிறவினை—உண்பிக்கப்போமோ) (மற்றொன்றினைக் காணாவே) "பாவோ நாந்யத்ர கச்சதி" (என் நெஞ்சம் எங்கும் செல்வதில்லை) என்று திருவடிசொன்னாப்போலே,

இந்தப் பெரிய பெருமாள், தம்மை கேசாதி பாதாந்தமாக அநுபவிக்க வேணும் என்று பார்த்தாலும் சக்தியுடையவனல்லேன்

"என்னுள்ளம் கவர்ந்தான்" என்கையாலே நெஞ்சை அபகரித்த படியைச் சொன்னார்; "கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்கையாலே பார்வையைப் பறித்தபடியைச் சொன்னார்; அல்லாதார் *திருநாமப் பாட்டுப் போலே (*மற்ற ஆழ்வார்கள் கடைசிப் பாட்டில் தத்தம் பெயரைப் பொறிக்கிறார்கள், அதை வைத்துத் திருநாமப் பாட்டு என்றபடி) தம்மைச் சொல்லிற்றிலர். "விஸஸ்மார ந நாத்மானம்" (அப்போது தன்னையே மறந்தார்) என்கிறபடியே தாம் *போகப்ரவணரானாய் (*அநுபவிக்கப்படும் பொருளிலே ஈடுபட்டவராய்) தம்மை மாக்கை யாலே சொல்லிற்றிலர். பலம் "ஸதாபச்யந்தி" (மோக்ஷ லோகத்திற் போலே எப்போதும் தரிசித்துக் கொண்டேயிருக்கல்) அனையால் அது இங்கேயே ஸித்திக்கவிட்டபடியால் பலத்துக்குப் பலம் வேண்டுமோ என்று சொல்லிற்றிலர். இந்தக் கண்கள் வெளியே சில வற்றைக் காண வேண்டுவது இங்கே சில குறையுண்டாகிலன்றோ.

தம்மைச் சொல்லுதல், பாட்டுக் கணக்குச் சொல்லுதல் செய்யில் கரைமேலே நின்ற மற்ற ஆழ்வார்களைப்போலாவர். அஸ்பரிகார்ய பாவமாம்படி (கருத்து வேறெங்கும் செல்லாதபடி) அழகிலே ஈடு பட்டுத் தம்மை மறந்தார். "நோப ஜநம் ஸ்மரன் நிதம் சரீரம்" (மோட்சத்துக்குப்போமவன் பந்து ஜனங்களின் சமீபத்திலே சாய்ந்து கிடக்கிற இந்த தன்னுடைய உயிரற்ற ப்ரேத சரீரத்தை நினைக்காமல் இருத்தல்) என்கிறபடியே முக்தர்கள் அடையும் பயனான மோக்ஷத்தை அநுபவித்தார் என்கையாலே எல்லாம் அவனைப் பற்றிய சொல்லே யாய் விட்டது.

எம்பெருமான் பக்கல் ஔதார்யம் இல்லை என்று போகவோ? வடிவில் பசையில்லை என்று போகவோ? ஸௌசீல்யமில்லை என்று போகவோ? நெஞ்சுக்குப் பிடித்திருந்ததில்லை என்று போகவோ? மேன்மையில்லை என்று போகவோ? ஸௌலப்யமில்லை என்று போகவோ? போக்யதையில்லை என்று போகவோ? அநுபவத்தில் குறை உண்டென்று போகவோ?

இப்பாட்டில்—க்ருஷ்ணனுடையபடியும் இங்கேயுண்டு என்கிறார்.
அமலனாதி பிரானுக்குப் பெரியவாச்சான் பிள்ளையும், அழகியமண வாளப் பெருமாள் நாயனாரும் அருளிச் செய்த விளக்கவுரை முற்றிற்று.

(ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர்திருவடிகளே சரணம்)

ஸ்ரீ :
ஸ்ரீ யதே ராமாநுஜாய நம :
ஸ்ரீ மந்நிகமாந்த மஹாதேசிகாய நம :

# முனிவாஹந போகம்

ஸ்ரீ நிகமாந்த மகாதேசிகன் அருளிச் செய்த ரகசியங்களில் இருபத்தெட்டாவதான முனிவாஹநபோகம்.

"வ்யாசிக்யாஸ்தி பக்த்யா விரக்த தோஷாய வேங்கடேச கவி :
முதித முகுந்த விலோகந முனிவாஹந ஸூக்தி ஸூக்திமிமாம்."

"பாவளரும் தமிழ்மறையின் பயனேகொண்ட பாண் பெருமாள் பாடியதோர் பாடல் பத்தில்—காவலனும் கணவனுமாய்க் கலந்து நின்ற காரணனைக் கருத்துற நாம் கண்டபின்பு—கோவலனும் கோமானுமான அந்நாள் குரவைபுணர் கோவியர்தம் குறிப்பே கொண்டு—சேவலுடன் பிரியாத பெடையைச் சேர்ந்து தீவினையோர் தனிமையெல்லாம் தீர்ந்தோம் நாமே".

காரண விசேஷம் இன்னதென்று அறுதியிட அரிதாயிருப்பதொரு பகவத் கடாக்ஷத்தாலே அயத்ந லப்தமான பரதத்வ பரமஹித பரம புருஷார்த்த விவேகத்தை உடையராய், அநாதிகால ப்ரவ்ருத்தங்களான க்ஷுத்ர புருஷார்த்த ராகாதிகளையும், க்ஷுத்ர புருஷ ஸ்தோத்ராதிகளையும், க்ஷுத்ர புருஷார்த்த ப்ரவ்ருத்திகளையும் துடைத்து தம்முடைய கரணத்ரயமும், இப்போது ப்ராப்தமான ஏக விஷயத்திலே அநந்ய ப்ரயோஜநாநுகூல வ்ருத்தியை உடைத்தானபடியைக் கண்டு, ஸந்தோஷயுக்தரான திருப்பாணாழ்வார், பின்பு பரமபதத்திலே பெறும் பேற்றை இங்கே பெரியபெருமாள் திருவ (டிகளாலே) ருளாலே பெற்று இப்பேற்றை அடிதொடங்கி, அமலனாதி பிரான் முதலான பத்துப் பாட்டாலே அநுபவ பரீவாஹமாக அருளிச் செய்கிறார்

இப்ப்ரபந்தம் அதிவிஸ்தரம், அதிஸங்க்ஷேபம், அதிக்ருதாதிகாரத்வம் துர்க்ரஹத்வம், துரவபோதார்த்தத்வம், ஸம்சயாதி ஜநகத்வம், விரஹக்லேசம், தூதப்ரேஷணம், பரோபதேசம், பரமத நிரஸநம், என்றாற்போலே மற்றுள்ள அத்யாத்ம ப்ரபந்தங்களில் உள்ளவை ஒன்றுமின்றிக்கே பகவதநுபவ ரஸகனமாயிருக்கிறது.

1. அமலனாதிபிரான் அடியார்க்கென்னை ஆட்படுத்த
விமலன் விண்ணவர்கோன் விரையார்பொழில் வேங்கடவன்
நிமலன் நின்மலன் நீதிவானவன் நீள்மதிளரங்கத்தம்மான் திருக்
கமல பாதம் வந்து என் கண்ணினுள்ளன ஒக்கின்றதே.



ஸ்ரீமந் நிகமாந்த மகா தேசிகன்
(திருவயிந்திரபுரம்)

வ்யாக்யானம் :

இந்த ரஹஸ்யத்துக்கு மூலப்ரபந்தம், முதற்பாட்டான 'அமல னாதிபிரான்" தொடங்கி கண்டகண் வண்ணனை என்கிற தலைக் கட்டும் பாட்டளவும். இதில் முதற்பட்ட மூன்று பாட்டுக்கு முதலான அக்ஷரங்கள் மூலமாகிய ஒற்றையெழுத்தின் முதல் நடு இறுதியானவை. இதில் முதற் பாட்டு திருமந்த்ரத்திலும், த்வயத்திலும் முமுக்ஷுவுக்கு அவச்யானுஸந்தேயங்களான அர்த்தங்களை ஸூசிப்பிக்கிறது.

அமலன்—என்கிறது மலப்ரதிபடன் என்றபடி. இத்தால மோக்ஷ ப்ரதத்வம் சொல்லிற்றாயிற்று. இது பரதான ரக்ஷகத்வமாகையாலே பிரியப் பேசப்படுகிறது. (ஆதி) "ஏஷகர்த்தா நக்ரியதே" இத்யாதி களிற்படியே ஸர்வ ஜகதேக காரணபூதன். இத்தால் காரணமே சரண்யம் என்கிறபடியே முமுக்ஷுவுக்கு சரணமாகப் பற்றப்படுமவன் என்று பலிதம். இக்காரணத்வமும், மோக்ஷப்ரததவமும், சத்ர சாமரங்கள்போலே ஸர்வலோக சரண்யனுக்கு விசேஷ சின்னங்கள். (பிரான்) "கருணாக்வாபி புருஷே" இத்யாதிகளிற்படியே ஸர்வோப காரகன். இங்கு ஆத்மாக்களுடைய ஸத்தாதி லக்ஷ்யபநம் முதலாக பரி பூர்ண கைங்கர்ய ப்ரதான பர்யந்தமாக ப்ரத்யுபகாராதி நிரபேக்ஷ னானவனுடைய அநுகம்பாக்ருத்யங்களெல்லாம ஸாமாந்யேந சொல்லப்படுகிறது. இதெல்லாம் ப்ரதமாக்ஷரார்த்தமான ரக்ஷண பேதம். இவை தம்மளவில் பர்யவஸித்தபடியாலே இம் மூன்று பதத்துக்கும் தாத்பர்யம். இதுமேல் பாசுரங்களிலும காணலாம்.

(அடியார்க்கென்னை ஆட்படுத்த) என்கிறவிடத்தில், அடியார் என்கிற இத்தாலே த்ருதியாக்ஷரத்திலே சொன்ன ஜீவ வர்க்கமும், ஜீவர்களுக்கு ஈச்வரனைக் காட்டில் வேறுபாடும், அந்யோந்யம் பிரிவும் காட்டப்படுகிறது. அடியார் என்றால் ஸர்வ ஸாதாரணமாக சதுர்த்தியில் சொன்னதாதர்த்யவான்களையெல்லாம் காட்டிற்றே யாகிலும், இங்கு அடியார் என்கிறது "யோஹ்யேநம் புருஷம்வேத தேவா அபிநதம் விது: "என்னும்படி அபரிச்சேத்ய மாஹாத்ம்யரான சேஷத்வ ஜ்ஞாந ரஸிகரை. இப்படி அடியார்க்கென்று விசேஷா பாதாநம் பண்ணுகையாலே மத்யமாக்ஷரத்தின்படியே நிருபாதிக சேஷிகள் வேறில்லாதபடியும், காமோபாதிக சேஷிகளோடு தமக்குத் துவக்கற்றபடியும், சொல்லிற்றாயிற்று. ஸர்வசேஷி ஆகையாலே ஸர்வத்தையும் யுதேஷ்டமாக விநியோகிக்க ப்ராப்தனாய், நிரங்குச ஸ்வாதந்த்ர்யனாகையாலே ஸர்வத்தையும் யதேஷ்டமாக விநியோகிக்க சக்தனுமாய் ஸர்வேச்வரன் அநந்ய ப்ரயோஜனரான ஆச்ரிதருக்கு ஸர்வமும் சேஷமாகக் கடவதென்கிற விநியோக விசேஷத்தாலே ஸர்வருக்கும், பாகவத சேஷத்வம் நித்யஸித்தமானால் அநந்ய

ப்ரயோஜநரான ஆச்ரிதருக்கும் பாகவத சேஷத்வம், ஈச்வரன் தன்னையும், பாகவதரையும ஒழிந்த அந்யரைப்பற்ற, சேஷத்வமில்லாத படி வருகிறதாய், இதில் பலமான கைங்கர்யமும், இப்படி வருகிற தாகையாலே என்னை அடியார்க்கே ஆட்படுத்தினான், என்கிற அவதாரணம் இங்கே விவக்ஷிதம். "மற்றுமோர் தெய்வமுளதென்றிருப் பாரோடுற்றிலேன்" என்றிறே இவர்களுடைய பாசுரம். (என்னையாட் படுத்த) "யூயம இந்த்ரியகிங்கரா." எனனும்படி இந்த்ரிய கிங்கரனாய் வைத்து, அதுகளுக்குமேலே "ஈச்வரோஹம" என்றிருக்கக் கடவ என்னை, "அஹம்தாஸோஸ்மீதி தாஸ:" என்னப்பண்ணின உபகாரத்திற் காட்டிலும் "உற்றதும் உன்னடியார்க்கடிமை" என்னப் பண்ணின இதுக்கு மேல் ஒரு உபகாரமுண்டோ என்று இப்பரமோபகாரத்தையும் பிரியப் பேசுகிறார். இது நமலனின தாதபாயார்த்தம்.

கீழ்ச்சொன்ன கர்த்ருத்வாதிகளிலே எருத்துக் கொடியுடையான் முதலான ஆத்மாந்தரஙகளுக்குப்போலே அஜ்ஞானாதி தோஷங்கள் அவனுக்குண்டாகில், இவன முன்பு சொன்ன ஸாக்ஷாந் மோக்ஷ ப்ரதானம் பண்ணவல்லனோ என்ன, (விமலன்) நிதய நிர்ததோஷன். இத்தால் பத்தமுக்த விலக்ஷணன் என்றாயிற்று. இவ்வளவு, ஸூரி களுக்குமில்லையோ என்ன (விண்ணவர்கோன்) பராதின சுத்தி யோகத்தை உடையரான ஸூரிகளைக் காட்டில் வேறுபட்டவன். இத்தாலே ஸூரிஸேவ்யமான பரரூபமும் தோன்றுகிறது. இப்படி எட்டா நிலத்திலே இருக்குமிருப்பு ஸம்ஸாரிகளுக்கு நிலமன்றோ என்ன (விரையார் பொழில வேஙகடவன) பரிமளம் வடிவு கொண் டாப்போலே இருக்கிற திருச்சோலைகளை உடைய திருமலையிலே "கண்ணாவானென்றும மண்ணோர் விண்ணோர்க்கு" என்கிறபடியே எல்லாருக்கும் ஆச்ரயிக்கவும், அனுபவிக்கவுமாம்படி இருள தருமா ஞாலதது குனறத்திட்ட விளக்காய் நிற்கிறவன். அந்தமிலபேரின்பத் துள்ளாரிலும் ஆமோததத்தைக்காட்டில "எம்பெருமான் பொன்மலை மேல் ஏதேனும ஆவேனே' எனனுமபடி பிறந்த ஸதாவரஙகளுடைய ஆமோதம அதிசயிதமாயிருக்கும். இப்படி ஸர்வஸுலபனானாலும், "அவ்வண்ணத்தவர் நிலைமை கண்டும் தோழீ! அவரை நாம் தேவ ரென்றஞ்சினோமே" என்னும்படி நிற்குமோ என்ன (நிமலன்) ப்ரம்ம ருத்ராதிகளும் அஞ்சி அருளப்பாடுமுன்னாக அணுகவேண்டும்படி யான ஐச்வர்யத்திலே குறும்பறுத்த நம்பிக்குக் கூசாதே நிரந்தர ஸம்ச்லேஷம் பண்ணலாம்படி தன் ஈச்வரச்சுணையாகிற ஆச்ரயண விரோதி தோஷத்தை மறைத்து, "அர்ச்சகபராதீந ஸ்ர்வேச்சா" என்கிறபடியே ஆச்ரித பாரதந்த்ர்யத்தை வெளியிட்டு நிற்குமவன்.

இப்படி ஸௌலப்ய ஸௌசீல்யங்கள் உண்டானாலும், ஆச்ரித தோஷத்தைக் காணுமாகில் அணுகக் கூசார்களோ என்னில் (நின்மலன்) "அவிஜ்ஞாதா" என்றும், "என்னடியார் அது செய்யார்" என்றும் சொல்லுகிறபடியே ஆச்ரிதருடைய தோஷ தர்சனமாகிற சரண்யதோஷமில்லாதவன், ஸர்வஜ்ஞனாயிருக்கச் செய்தே ஆச்ரித தோஷத்தைக் காணான் என்றது, காணுமதுவும் இவர்களுடைய தோஷத்தைக் கழிக்கைக்கு உறுப்பாமென்றபடி. விமலன் என்று தொடங்கி இவ்வஞ்சு பதங்களாலே நாராயண சப்தத்தில உபாயத்வ ப்ராப்யத்வங்களுக்கு உபயுக்தமான உபயலிங்கத்வமும், உபய விபூதி நிர்வாஹகத்வமும் சொல்லிற்றாயிற்று. மேல் இவன் ஸ்வரூப ப்ராப்த கைங்கர்ய ரூபமான நிதியிலே நிரதரான நித்ய ஸூரிகளுக்கு ஸேவ்யனானாப்போலே நமக்கும் ஸேவ்யனாமென்று சதுர்த்தியில் கருத்தாலே கைங்கர்ய ப்ரதிஸம்பந்தித்வத்தை அநுஸந்திக்கிறார். (நிதிவானவன) இங்கு "வான்" என்கிற சப்தம் ஸூரிஸேவிதமான பரமபதத்தைச் சொல்லுகிறது. நீதியை நடத்துவிக்கும் வானிலே வர்த்திக்குமவன் என்னவுமாம். "தேந வஞ்சயதே லோகாந மாயா யோகேந கேசவ:" என்கிறபடியே கலக்குவாரும், "அவஜாநந்தி மாம மூடா:" என்கிற படியே கலங்குவாரும் இல்லாத தேசம் ஆகையாலே 'தாஸ்யம் ஐச்வர்ய யோகேந ஜ்ஞாதிநாம்ச கரோம்யஹம்" என்றும "பரமேச்வர ஸம்ஜ்ஞோஜ்ஞ கிமந்யோ மய்யவஸ்திதே" என்றும் இங்குப பிறக்கும் ஈசேசிதவ்யத்தின் மாறாட்டமில்லாத பரமபதத்திலே நித்ய வாஸம் பண்ணுகிறவன் என்றதாயிற்று.

இப்படி ஸர்வஸேவ்யனான ஸர்வசேஷி "விண்ணோர்கு வேறாக நல்லான்" என்கிறபடியே தமக்கு இப்போது விசேஷித்து அனுபவிக்க லானபடியைப் பேசுகிறார். (நீண்மதிளரங்கத்தம்மான்) அயோத்யை என்றும் அபராஜிதை என்றும் சொல்லுகிற கலங்காப்பெருநகரத்தின் படியைக் கொடியணி நெடுமதிள்களாலே ஸுரக்ஷிதமான ஸ்தல விசேஷத்தில் காட்டி, அயர்வறுமமரர்களுக்கும் அதிபதியான தன் படியை செஙகோலுடைய திருவரங்கச் செல்வனாரான ஆகார விசேஷத்தாலே அறிவித்துக்கொண்டு சேஷித்வத்தின் எல்லையிலே தான் நின்றாற்போலே சேஷத்வத்தின் எல்லையிலே என்னை நிறுத்தின ஸ்வதந்த்ர ஸ்வாமி (அரங்கத்தம்மான்) நீர்மைக்கும் மேன்மைக்கும் எல்லையானவன். இவனுடைய உபாயத்வ ப்ராப்யத்வங்களில் உறைப் புண்டான திருவடிகளை அனுபவிக்கிறார். (திருக்கமலபாதம்) ப்ராவணத்வ ப்ராப்யத்வங்களிலே ஆச்ரயங்களான திருவடிகள்.

குறிப்பு: இதன் மேல்தொடர்ச்சியை 81-எ, 81-பி பக்கங்களில் காண்க

திருவடிசேவைக்குக்கூடும்... அவனோடொக்க வரக்கைக்கிடாரு மதிமா உண்டு. கர்மவச்யதை தோற்றும்படி பிறவி தொடக்கமாக சடையும் குண்டிகையும் சுமந்து நிற்கிற பரிச்சின்னேச்வரர் பார்த்து நிற்க, இப்படி முடிசூடி நிற்கையாலே உபயவிபூதி நிர்வாஹகத்வமும் அபிவ்யக்தமாகிறது. இத்தால் விக்ரமா பதானம் சொன்னவித்தாலே ஈச்வரத்வ சங்காவிஷயரான இந்திராதிகளில் இப்பாடரானபடியும், "குறைகொண்டு நான்முகன்" இத்யாதிகளிற்படியே ப்ரம்மா திருவடி விளக்கி ஆராதகனானபடியும், ருத்ரன் தீர்த்த ப்ரஸாதம் பெற்று பூதனான படியும் சொல்லிற்றாயிற்று.

இத்தால் முன்பாட்டில் சொன்ன இஷ்ட ப்ராபகத்வத்தையும் உதா ஹரித்ததாய், இனி அநிஷ்ட நிவாத்தகத்வத்தையும் உதாகரிக்கிறார். (அன்று நேர்ந்த நிசாசரரைக் கவாந்த வெங்கணைக் காகுத்தன்) தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் கூடக் குடியிருக்கவொண்ணாதபடி த்ரைலோக்ய க்ஷோபம் பிறந்து தேவர்கள் சரணாகதரான அன்று சக்ரவர்த்தித் திருமகனாய் அவதரித்து தாடகா தாடகேய விராத கபந்த கர தூஷணாதிகளை நிராகரித்து லங்கைக்குப் பரிகை (அகழ்) யான லவணார்ணவத்தைப் பர்வதங்களாலே பண்பு செய்து, கொம்பிலே தத்தித்திரியும் குரங்குப்படையைக் கொண்டு லங்கையை அடைமதில் படுத்தின அன்றும், பெருமாளுடைய ப்ரபாவம் அறியாதே விளக்கு விட்டில்போலே வந்தெதிர்ந்த பகற் போரறியாத கூடயோதிகளை யெல்லாம் எனக்கெனக்கென்று இரையாகக் கைக்கொண்ட தீப்த பாவக ஸங்காசங்களான திருச்சரங்களை உடையனாய், வெங்கதி ரோன் குலத்துக்கோர் விளக்காய் நின்றவன் (காகுத்தன்) மாயாவி களான ராக்ஷஸரும்கூட மோஹிக்கும்படி மனுஷ்ய பாவத்தை முன்னிட்டு நின்றவன்.

(கடியார்பொழில் அரங்கத்தம்மான்) சூரிகள் முதலாக ஸ்தாவர ருபங்களைக் கொண்டு நித்யாமோதமாய் நிற்கிற ஆராமங்களாலே சூழப்பட்ட கோயிலாழ்வாருக்குள்ளே ப்ரஹ்மாதிகள் ஆராதிக்க ஸர்வ ஸ்வாமித்வம் தோற்றக்கண்வளர்ந்தருளுகிற பெரியபெரு மாளுடைய. (அரைச் சிவந்த ஆடையின்மேல்) "படிச்சோதி ஆடை யொடும் பல்கலனாய் நின்பைம்பொற்கடிச் சோதி கலந்ததுவோ" என்னும்படி திகழா நின்ற திருவரையிலே மதுகைடப ருதிர படலத் தாலேபோல பாடலமாய் மரதக கிரிமேகலையிலே பாலாதபம் பரந் தாப் போலே இருக்கிற திருப்பீதாம்பர விஷயமாக. (சென்றதாம் என சிந்தனையே) அநாதிகாலம் அந்நிய விஷயங்களிலே ஓடி அவர்கள் அடையிலே அட்டுண்ட என சிந்தை இவன் திருவடிகளைப் பற்றின; என்னாலும் மீட்கவொண்ணாதபடி திருப்பீதாம்பரத்திலே சென்று துவக்குண்டது. "என சிந்தனை சென்றதாம்" என்கையாலே

திருவுக்கு லீலாகமலம்போலே இருக்கிற பாதம் என்னவுமாம். (வந்து) வந்து என்கிற இத்தாலே ஓடின தம்மைத் தொடர்ந்தபடியும், அயத்நலப்தங்களானபடியும் தோன்றுகிறது. இத்திருவடிகளில் வைத்த கண்வாங்கவொண்ணாதபடியான போக்யதாதிசயத்தை ஒரு உத்ப்ரேக்ஷையாலே அருளிச் செய்கிறார். (என் கண்ணினுள்ளன ஒக்கின்றதே) தேவாதிகளில் தலைவரான ப்ரம்மாதிகளுடையவும், ஸனகாதிகளான யோகிகளுடையவும் திவ்யசக்ஷுஸ்ஸுக்களுக்கும் கூட தூரமாயிருக்கக்கடவவை மனுஷ்ய மாத்ரனான என்னுடைய மாம்ஸ சக்ஷுஸ்ஸுக்களுக்கும் அத்யாஸந்நமாயிரா நின்றன என்று ஆச்சர்யப் படுகிறார். (நீண்மதிளரங்கத்தம்மான் திருக்கமலபாதம்) என்று த்வயத்தின் பூர்வோத்தர நாராயண சப்தார்த்தத்தையும், சரணசப்தார்த்தத்தையும் அனுஸந்தித்தபடி.

இப்பாட்டால், மோக்ஷப்ரதத்வமும், ஜகத் காரணத்வமும், சரண்யத்வமும், மற்றும் ஸர்வ ப்ரகாரோபகாரகத்வமும், க்ருபாவிசேஷவத்வமும், ஸ்வாதந்த்ர்யமும், அவற்றில் ஸாரதமமான உபகார விசேஷமும், நித்யநிர்த்தோஷத்வமும், நித்யஸூரி நிர்வாஹகத்வமும், நித்ய விக்ரஹவத்வமும், ஸர்வஸுலபத்வமும், ஸௌசீல்யமும், வாத்ஸல்யமும், கைங்கர்யோத்தேச்யத்வமும், கைங்கர்ய ஸ்தாநவிசேஷவத்வமும், ஸர்வ ஸ்வாமித்வமும், திருவடிகளுடைய பாவநத்வமும், போக்யத்வமும், அவற்றைத்தாம் அநாயாஸமாக அநந்யத்ருஷ்டிகளாகக் கொண்டு அனுபவிக்கப்பெற்றபடியையும் முன்னிட்டுக் கொண்டு ச்ரிய: பதியினுடைய பரகாஷ்டா ப்ராப்தங்களான குண ப்ரகர்ஷங்களை அநுஸந்தித்தார்.

அவற்றின் ஸம்ஸார நிவர்த்தகத்வ காஷ்டையாவது கலையற்ற கைங்கர்யத்தைக் கொடுக்கை. காரணத்வகாஷ்டையாவது காரணாந்தரங்களெல்லாம் தான் இட்ட வழக்காய் தனக்காதல, தன்னுடைய ஜ்ஞான சக்த்யாதிகளுக்காதல், ஒரு காரண ஸம்பாவனையின்றிக்கே யிருக்கை. சரண்யத்வகாஷ்டையாவது தன்னை ரக்ஷகனாகப் பற்றினார்க்குத் தன்னையொழிய மற்றொருவரை ரக்ஷகராகப்பற்ற வேண்டாதபடியிருக்கை. உபகாரகத்வகாஷ்டையாவது ஒரு க்ஷுத்ர வ்யாஜத்தை அவலம்பித்து உபயவிபூதி விசிஷ்டனான தன்னை அநுபாவ்யனாகக் கொடுத்தும், அதுக்கு மேல் கொடுக்கலாவதில்லாமையாலே நித்யருணியாயிருக்கை. க்ருபா காஷ்டையாவது சத்ருவினுடைய ஸம்பந்திகளும் கூட த்யாஜ்யரென்றும், பரிவர் முன்னே சத்ருதானும் இசையில் ஸ்வீகரிப்பேன் என்று எதிரி பேசும்படியான இரக்கத்தை உடையனாய், அவர்கள் தாங்களும் இவனைக் கைக்கொள்ளும்படி பண்ணுகை. ஸ்வாதந்த்ர்ய காஷ்டையாவது தன்னையும், பிறரையும், தான் நினைத்த நிலைகளிலே நிறுத்தும்போது விலக்க வல்லாரின்றிக்கேயிருக்கை. நிர்த்தோஷத்வ காஷ்டையாவது தோஷயுக்தங்களான பதார்த்தங்களோடுண்டான ஸம்ஸர்கத்தாலும், பிறர்க்கு அஜ்ஞான துக்கஹேதுக்களானவற்றைத்தான் அனுஷ்டித்தாலும் தனக்கு அஜ்ஞான துக்கங்கள் வாராதிருக்கை. ஸ்வாமித்வ

(அந்திபோல் நிறத்து ஆடையும்) ஆச்ரிதருடைய அஜ்ஞாநாந்த காரத்தைக் கழிக்கவல்ல ஸம்யக்ஜ்ஞான ஸூர்யோதயத்துக்கு பூர்வஸந்த் யைபோலவும், அவர்களுடைய தாபத்ரயங்களைக் கழிக்கைக்கு பஸ்சிம ஸந்த்யை போலவும், புகர்ந்த நிறத்தையுடைத்தான செவ்வரத்த உடையாடையும். இதுமேலின் அனுபாவ்யத்தை அவலம்பிக்கைக்கு அனுபூதாம்சத்தை அநுவதித்தபடி. மேல் அனுபாவ்யம் ஏதென்ன, அதன்மேல் அயனைப் படைத்ததோரெழில் உந்தி) அனுபூதமான திருப்பீதாம்பரத்துக்கு மேலாய் இதின் நிறத்துக்கு நிகரான சிவந்த தாமரைப் பூவை உடைத்தாய், அதின்மேலே வ்யஷ்டி ஸ்ருஷ்டி ஸம யத்திலே முற்பட அயோநிஜனான ப்ரம்மாவை ஸ்ருஷ்டித்த அத்விதீய மான அழகையுடைத்தான திருவுந்தி, ப்ரம்மாவினுடைய ஸ்ருஜ்யத்வம் சொல்ல கைமுதிகந்யாயத்தாலே (கிமுத என்கிற ந்யாயம்) ருத்ரேந்த் ராதிகளுடைய ஸ்ருஜ்யத்வம் சொல்லிற்றாம். இத்தாலே ப்ரதி புத்தருக்கு ச்ரிய: பதியையொழிய சரண்யாந்தரமும் ப்ராப்யாந்தரமும் இல்லையென்றதாயிற்று. இங்கு ப்ரம்மாவைச் சொன்னது முமுக்ஷுக் களை ஸ்ருஷ்டித்த உபகாரத்துக்கு உதாஹரணமுமாகிறது. (மேல தன்றோ) என்றது இத்திரு உந்தியையே அனுபாவ்யமாகக் கொண் டன்றோ இருக்கிறதென்னவுமாம்.

(அடியேனுள்ளத்தின்னுயிரே) "ஆத்ம தாஸ்யம் ஹரே: ஸ்வா ம்யம் ஸ்வபாவம்ச ஸதாஸ்மர" என்கிறபடியே பரம காருணிக கடாக்ஷத்தாலே ஸ்வாபாவதாஸ்ய ப்ரதிபோத முடையேனான என்னுடைய ஸத்வோத்தரமான மநஸ்ஸிலே ப்ரகாசிக்கிற ஸ்வாது தமமான என் ஆத்மஸ்வரூபம். உள்ளமென்று ஹ்ருதய ப்ரதேசத்தைச் சொல்லவுமாம். இன்னுயிரென்று பகவதனுபவத்துக்கு அனுரூபமாகை யாலே இனிதான ப்ராணாதிகளைச் சொல்லவுமாம். "ஜ்ஞாநீது பரமை காந்தீ பராயத்தாத்ம ஜீவந:" "மச்சித்தா மத்கத ப்ராணா:" இத் யாதிகளை இங்கே அனுஸந்திப்பது.

4 சதுரமாமதிள்சூழ் இலங்கைக்கிறைவன் தலைபத்து
உதிரவோட்டி ஓர்வெங்கணை உய்த்தவன் ஓதவண்ணன்
மதுரமாவண்டுபாட மாமயிலா டரங்கத்தம்மான் திருவயிற்று
உதரபந்தம் என்னுள்ளத்துள்நின்று உலாகின்றதே.

வ்யாக்யானம் :

இரண்டாம் பாட்டாலும் மூன்றாம் பாட்டாலும் ப்ரம்ம ருத்ராதிகளுடைய கர்மாதிகாரித்வமும், கர்மபல ஜன்மாதிகளும் சொல்லிற்றாயிற்று. நாலாம் பாட்டாலே ப்ரம்ம ருத்ராதிகள் வரம் கொடுத்து வாழ்வித்த ராவணனை நிராகரித்த வ்ருத்தாந்தத்தாலும்,

தேவதாந்தரங்களுடைய க்ஷுத்ரத்வத்தையும், "ப்ரஹ்மா ஸ்வயம் பூஸ் சதுராநநோவா ருத்ரஸ்த்ரிநேத்ர :" இத்யாதிகளிற்படியே அவர்களுடைய அல்ப சக்தித்வத்தையும் அநுஸந்தித்துக் கொண்டு, பிரம்மாதிகளையெல்லாம் அகம்படியிலே, ஏக தேசத்திலே வைத்து உய்யக்கொண்ட ச்ரீமத்தையை உடைத்தான திருவயிற்றினுடைய சிறுமை பெருமைகளால் உண்டான அகடித கடநா சக்திக்கு அடைய வளைந்தாப்போலே இருக்கிற திருஉதரபந்தனம் தம்முடைய சிறிய திருவுள்ளத்துக்குள்ளே வெளியிற்போலே இடங்கொண்டு உலாவா நின்றது. இது ஒரு ஆச்சர்யம் எங்கிறார்.

கீழ் மூன்று பாட்டாலும் ப்ரதம பதார்த்தம் ப்ராதிஷ்டிகமாய், நாலாம் பாட்டாலே "நநமேயம்து கஸ்யசித்" என்ற வணங்கலில் அரக்கனைத் தலைசாய்த்த "தசேந்த்ரியாநநம் கோரம்" என்கிற படியே முமுக்ஷுக்களுடைய மாநஸ்ஸை அஹங்கார மமகார தூஷித மாகாதபடி பண்ணிக்கொடுக்கிற சக்ரவர்த்தித் திருமகனுடைய சரித் ரத்தை முன்னிட்டு நானும் என்னுடையகன்று; மற்றும் என்னு டையதாவன ஒன்றுமில்லை என்கிற நமஸ்ஸின் அர்த்தத்தை மறை பொருளாக அநுஸந்திக்கிறார் ஆகவுமாம்.

(சதுரமாமதிள்சூழ் இலங்கைக்கிறைவன் தலைபத்துதிர) குல பர்வதங்களைச் சேர்த்து இசைத்தாப்போலே செறிவும், திண்மையும், உயர்த்தியும் உடைத்தாய், எட்டுத் திக்குகளில் உள்ள திக்பாலகர் களுக்கும் எட்டிப்பார்க்கவொண்ணாதிருக்கிற மதிள்களாலே இற்ற விடம் முறிந்தவிடம் இல்லாதபடி எங்கும் ஒக்கச் சூழப்பட்டு ஜல துர்க்க கிரி துர்க்க வன துர்க்கங்களாலே, துர்க்கங்களுக்கெல்லாம் உபமானமாம்படி ப்ரஸித்தமான லங்கைக்கு ஈச்வரனாய்.

துர்க்கபல வரபல புஜபல ஸைந்ய பலங்களாலே செருக்கனாய், மால்யவான், அகம்பநன், மாரீசன் முதலான ராக்ஷசர்களோடு, ஹநுமான், விபீஷணன் முதலான ஸத்வ ப்ரக்ருதிகளோடு வாசியற அவிசேஷமாகப் (ஏக கண்டமாக) பேசப்பட்ட பெருமாள் பெருமையை அறிந்து வைக்கவும், கண்டும், மதிகெட்டான்படியே, "தேநமைத்ரீபவது தே யதி ஜீவிதுமிச்சஸி" என்ற தாய்வாய்ச் சொல்லவும் கேளாதே, அராக்ஷஸமிமம் லோகம் கர்த்தாஸ்மி நிசிதை : சரை:! நசேத் சரண மப்யேஷி மாமுபாதாய மைதிலீம்" என்று பெருமாள் அருளிச் செய்து விட்ட பரமஹிதமான பாசுரத்தையும் அநாதரித்து அடை- கோட்டைப் பட்ட அளவிலும், பூசலுக்குப் புறப்படவிட்ட மகா பலரான முதலிகள் எல்லாரையும்படக் கொடுத்து தானேறிப் பொருத அன்று ரிபுணாமபி வத்ஸலரான பெருமாள் சரச் செருக்கு வாட்டி, நம்முடனே பொரும்படி இளைப்பாறி "நாளை வா" என்று விட, நாணாதே போய் மந்தோதரீ முதலான பெண்கள் முகத்திலே

விழித்து, தன்னிற் பெரிய தம்பியையும், மகனையும் படுக்கொடுத்துத் தரன் சாவேறாக வந்து ப்ரதிஹத ஸர்வாஸ்த்ரனான பின்பும் இனந் திராதே சேவகப்பிச்சேறி நின்ற ராவணனை, இனி தலையறுக்கும தொழிய வேறொரு பரிஹாரமில்லை என்று திருவுள்ளம் பற்றி ஒரு தலைவிழ, வேறோர்தலை கிளைக்க முன்பு பண்ணின சித்ரவத ப்ரகாரமன்றிக்கே ஒரு காலே பத்துத் தலையும் உதிரும்படியாக.

(ஒட்டி ஓர்வெங்கணை உய்த்தவன்) தானே போய் ராவணன் தலை பத்தும் கைக்கொள்ளவேணும் என்று சிறைப்படுத்தாய் அத் விகியமாயிருப்பதொரு திருச்சரத்தை தகையாதே ஓடவிட்டு இரை போந்த இலக்குப்பெறுகையாலே அத்திருச் சரத்தை உய்யப் பண்ணினவன். சரத்தினுடைய அசுகாரித்வத்தாலும் ராவணனுடைய தைர்யத்தாலும் தலைபத்தும்கிர்ந்த பின்னும், அவனுடல், கட்டைப் பனைபோலே சிறிது போதிருந்து நிற்கும்படியாயிருந்தது. (தலை பத்தறுத்துகிரவோட்டி) என்றது முன்னில் பகலிலே ராவணனைத் தலை சாய்த்து "கச்சானுஜாநாமி" என்று துரத்திவிட்டபடியாய், ஓர்வெங் கணை உய்த்தவன் என்றது பின்பு அவனுடைய வதார்த்தமாக அத் விகியமான அஸ்த்ரத்தை விட்டவன் என்னவுமாம். (ஓத வண்ணன்) கண்டவர்களுடைய பாபத்தையும், தாபத்தையும், கழிக்கவற்றாம் சமுத்ரம்போலே ச்யாமளமான திருமேனியை உடையவன்.

(மதுரமாவண்டுபாட மாமயிலாடரங்கத்தம்மான்) ராவண வதம் பண்ணின வீரலக்ஷ்மியுடனே நின்ற அழகைக் கண்டு ப்ரம் மாதிகள் ஸ்தோத்திரம் பண்ண அப்ஸரஸ்ஸுக்கள் மங்கள ந்ருத்தம் பண்ணினாப் போலே "ஆத்மாநம் மாநுஷம் மந்யே" என்கிற பெரு மானுடைய பூமிகைக்கு அநுரூபமாக முக்தரும் நித்யரும் கூடி ரூபாந் தரம் கொண்டு வந்தார்களென்னலாம்படி அதி மதுரங்களாய் ஜ்ஞா னாதி குண மஹத்தையுமுடையவையான வண்டுகள், காலப்பண்கள் பாட பாட்டுக்கநுரூபமாக குணாதிகங்களான நீலகண்டங்கள் ந்ருத்தம் பண்ண இக்கீத ந்ருத்தங்களாலே மங்களோத்தரமான கோயிலாழ் வார்களுக்குள்ளே ஸர்வாதிபதி ஆனபடி தோற்றக் கண்வளருகிற பெரிய பெருமாளுடைய.

(திருவயிற்றுதரபந்தம் என்னுள்ளத்துள் நின்றுலாகின்றதே) "தாமோதரம் பந்தகதம்" என்கிறபடியே பந்தகர்களுக்கு மோக்ஷ ஹேதுவான தாமோதரத்வத்தை வெளியிடாநின்ற திருவயிற்றில் திரு உதரபந்தமென்று திருநாமத்தை உடைத்தான திரு ஆபரணம், அதி க்ஷுத்ரனான என்னுடைய அதிராக தூஷிதமான ஹ்ருதயத்தினுள்ளே, இதுவே நிவாஸ பூமி என்னும்படி நின்று அளவற்ற போக்யதா ப்ரகாசக வ்யாபாரங்களைப் பண்ணா நின்றது. இது திருமந்திரத் திலும் திருமேனியிலும் மத்யத்திலே வரும் அநுபவம்.

5\. பாரமாய பழவினை பற்றறுத்து என்னைத்தன்
வாரமாக்கி வைத்தான் வைத்த தன்றி என்னுள் புகுந்தான்
கோர மாதவம் செய்தனன்கொல் அறியேன் அரங்
கத்தம்மான் திரு
வார மார்பதன்றோ அடியேனை ஆட்கொண்டதே.

வ்யாக்யானம் :

மேலிரண்டு பாட்டால் நாராயண சப்தார்த்தம் உள்ளிடாக பெரியபிராட்டியாருடைய நிவாஸத்தாலும் நிகரில்லாத திருமார் பையும், திருக்கழுத்தையும் அனுபவிக்கிறார். (பாரமாய பழவினை பற்றறுத்து) காலதத்வமுள்ளதனையும், ப்ராயஸ்சித்தம் பண்ணி னாலும் கழிக்கவொண்ணாதபடி உபசிதமாய்க்கொண்டு அநாதி காலம் நடக்கிற ஸாம்ஸாரிக கர்ம கலாபத்தை ஸவாஸநமாக என் னுடன் துவக்கறுத்து. (என்னைத்தன் வாரமாக்கி வைத்தான்) இப்படி கர்ம பரவசனாய் இந்திரியகிங்கரனாய் தாத்ருசனான இந்த்ராதிகளை எடுத்துச் சுமந்து தண்சுதிராதே பொலிசை இறுத்துத் திரிகிற என்னை அபஹத பாப்மாவாய் ஸ்வாமி பாவத்துக்கெல்லை நிலமாய் ஸௌரிபோக்யனான தன்னுடைய அந்த: புரஸ்த்ரீகளைப்போலே அந்யருக்குக் கூறுஇல்லாதபடி பண்ணி, அஸாதாரண கைங்கர்ய ரஸத்தைத் தந்து, மேல் ஒரு காலத்திலும் மாறாதபடி வைத்தான். (வைத்ததன்றி என்னுள் புகுந்தான்) அநந்யனாக்கி, வைத்த அளவன் றிக்கே முன்பு ப்ரயோஜநாந்தர ப்ரவணனான என்னுடைய ஹ்ருத யத்திலே அநந்ய ப்ரயோஜநானுபவ விஷயமாய்க்கொண்டு தஸ்யு பரிக்ருஹீதமான தன்படை வீட்டிலே தஸ்யுக்களை ஓட்டிப் புகுரு மாப்போலே புகுந்தான்.

(கோரமாதவம் செய்தனன்கொல் அறியேன்) அநாதிகாலம் இழந்த வஸ்துவைப் பெறுகைக்கு அகர்ம வச்யனான ஈச்வரன் தானே அவதார க்ஷேத்ரமான திருவயோத்யையையும் விட்டு, ஆச்ரிதனிருப்பிட மான லங்கையிலும் போகாதே கங்கையிற் புனிதமான காவிரி நடுவு பாட்டிலே அதிகோரமாய் அதிமஹத்தாயிருப்பதொரு தபஸ்ஸைப் பண்ணினானோ அறிகிலேன். இது அநிவாத கர்ப்பமாக உத்ப்ரே க்ஷித்தபடி. ஸர்வ ஸம்ஸார நிவர்த்தகமாய் அமோகமாயிருப்ப தொரு "மோக்ஷயிஷ்யாமி" என்கிற ஸங்கல்ப ரூபமான தபஸ்ஸைப் பண்ணினான் என்று தாத்பர்யம். அங்ஙனன்றிக்கே இப்பெரிய பேறு பெறுகைக்கு அயோக்யனான நான் இதுக்கு அநுரூபமாய் அமோக மாயிருப்பதொரு [illegible] தபஸ்ஸைப் பண்ணிப்பெற்றேனோ [illegible]. இதுக்கு "த்வயி நிஹித பரோஸ்மி ஸோஹம் [illegible]" என்றும், "[illegible] பரோஹம் [illegible]" என்றும் சொல்லுகிறபடியே

இப்போது நானும் பிறரும் அறியலாவது எனக்கொரு தடங்கல் காண்கிறிலேன் என்று ஈச்வரனுடைய இரக்கத்தின் ப்ராதாந்யத்திலே தாத்பர்யமாகவுமாம்.

இப்படி க்ஷூத்ரனான என் இறத்திலிறங்கியவன் தான் தேற வொண்ணாத திருவில்லாத் தேவரில் ஒருவனல்லன். "அகலகில்லேன் இறையுமென்று அலர்மேல்மங்கையுறைமார்பன்" என்னுமிடத்தையும் சேஷபூதனான தமக்கு ஸ்ரீமானே கைங்கர்ய ப்ரதி ஸம்பந்தி என்னுமிடத்தையும் திறம்பாத சிந்தைக்குச் சிக்கெனக் காட்டிக் கொடுக்கிறார். (அரங்கத்தம்மான் திருவார மார்பதன்றோ அடியேனை ஆட்கொண்டதே) ஸர்வருக்கும் அனுபவிக்கலாம்படி ஸர்வஸஹிஷ்ணு வாய்க் கொண்டு கோயிலாழ்வாருக்குள்ளே கண்வளர்ந்தருளுகிற ஸௌலப்யகாஷ்டையோடு விரோதியாத ஸ்வாமித்வகாஷ்டையை உடையரான பெரியபெருமாளுடைய சேஷித்வ பூர்த்திக்கு லக்ஷண மான திருவையும், அழகு வெள்ளத்துக்கு அணைகோலினாப்போலே இருக்கிற ஹாரத்தையுமுடைத்தான திருமார்பன்றோ, ஸ்வாபாவிக சேஷித்வானுபவ ரஸிகராய், அதுக்குமேலே குணைர்தாஸ்யமுபா கதனுமான என்னை ஸ்வரூபானுரூபமான ஸ்தோத்ராதி சேஷ வ்ருத்தி யிலே மூட்டி அதுக்கிலக்காய் நின்றது.

இப்பாட்டில் பதங்களின் அடைவே நாராயண சப்தத்தில் வ்ய க்ஷிதமான அநிஷ்ட நிவர்த்தகத்வமும், இஷ்ட ப்ராபகத்வமும், உள்ளும்புறமும் வ்யாபித்து நிற்கும்படியும, நித்ய க்ருபையும், உபாயத்திற்கு ப்ரதாநமான ஸௌலப்யமும, ப்ராப்யதைக்கு ப்ரதானமான ஸ்வாமித்வமும், ஸர்வாநு குணமான ச்ரிய: பதித்வமும் பூஷணாஸ்த்ர ரூபங்களான புவநங்களை தரிக்கிற போக்யதமமான விக்ரஹ யோகமும், நாரசப்தார்த்தமான தாஸபூதன் ஸ்வரூபமும், தாஸ்ய பலமாக ப்ரார்த்திக்கப்படும் கைங்கர்யமும் அநுஸந்தேயம்.

6. துண்டவெண்பிறையன் துயர்தீர்த்தவன் அஞ்சிறைய
வண்டுவாழ் பொழில்சூழ் அரங்கநகர்மேய அப்பன்
அண்டரண்ட பகிரண்டத்து ஒருமாநிலம் எழு மால்வரை முற்றும்
உண்ட கண்டம் கண்டீர் அடியேனைஉய்யக் கொண்டதே.

வ்யாக்யானம் :

(துண்ட வெண்பிறையன் இத்யாதி) இப்பாட்டில் ஐச்வர்யார்த்திகளான தம்முடைய கைங்கர்ய விரோதிகளாவ நிருபாதிக ஸ்வாமித்வ அபிமான மூலங்களெல்லாம் நிராகரித்தபடியை அருளிச் செய்தார். இப்பாட்டில் ஐச்வர்யார்த்திகளானாருடைய

ஐச்வர்ய விரோதியான ப்ரஹ்மஹத்யையைக் கழிக்கும்படியை உதாஹரிக்கிறார்.

(துண்டவெண்பிறையன் துயர்தீர்த்தவன்) ஈச்வரன் என்று பேரைச் சுமந்த நனக்கும பூர்ணத்வம் இல்லை என்கைக்கு ஜ்ஞாபகம் போலே சகலமாத்ரமாய்க் கொண்டு ப்ரகாசிக்கிற சந்த்ரகலையை தரிக்கிற ருத்ரன் ப்ரம்மாவினுடைய புத்ரனாய் வைத்து பிதாவின் திறத்திலே அபராதம் பண்ணி, அத்தாலே மஹாபாதகாக்ராந்தனாய், இப்பாதகத்தைத் தீர்க்கவல்லார் ஆர் என்று கரகலித கபாலனாய்க் கொண்டு திரிந்து, ஓரளவிலே கெடுமரக்கலம் கரைசேர்ந்தாப்போலே காருணிகனான ஸர்வேச்வரனை வந்து கிட்டி, "என் எந்தாய்! சாபந்தீர்" என்ன, இவனுடைய சாபத்தைத் தீர்க்க வல்லவன். இத்தால் ஈச்வரன் என்று பேருடைய ருத்ரன் கர்மவச்யன் என்னுமிடமும், தன்னைத்தான் ரக்ஷித்துக்கொள்ளமாட்டாத இவன் வேறொருத்தருக்கு நிரபேக்ஷ ரக்ஷகன் ஆகமாட்டான் என்னுமிடமும், ஸர்வேச்வரனே ஸர்வாநிஷ்ட நிவர்த்தகன் என்னுமிடமும் சொல்லிற்றாயிற்று.

(அஞ்சிறைய வண்டுவாழ்பொழில்சூழ் அரங்கநகர்மேய அப்பன்) ஆர்த்தியுடையார் அபேக்ஷித்தால் அவர்களுக்கு தூத கருத்யம் பண்ணுகைக்கும், மாசில்மலரடிக்கீழ் அவர்களைச் சேர்க்கைக்கும் ஹேதுவான கதிக்கு ஸாதநங்களாய், அபிஹத (அடிக்கப்பட்ட) ங்களான சிறகுகளை உடைத்தான வண்டுகள் அபிமத போகத்தோடே வாழ்கிற திவ்யோத்யானங்களாலே சூழப்பட்ட ஸ்ரீரங்க நகரத்திலே நித்யவாஸம் பண்ணுகிற ஸர்வலோக பிதாவானவன். இத்தால் காரணபூதனாய், கரணகளேபரங்களைக் கொடுத்து உபகரித்தவன் கண்ணுக்கிலக்காய் வந்து கண்வளர்ந்து, கரணங்கள் பட்டிபுகுராதபடி காக்கிற உபகாராதிசயத்தை உதாஹரிக்கிறது ஆகிறது. "நராஞ் ஜாதாநி தத்வாநி" இத்யாதிகளில் அர்த்தமும் இங்கே அநுஸந்தேயம்.

காரணாவஸ்தையில் எல்லாக் கார்யங்களையும் தன் பக்கலிலே உபஸம்ஹரித்துப் பின்பு ஸ்ருஷ்டிக்கும்படிக்கு உதாஹரணமாக "வெற்றிப் போர்க்கடலரையன் விழுங்காமல் தான் விழுங்கி உய்யக் கொண்ட" உபகாரத்தைக் காட்டி, "நெற்றிமேல் கண்ணானும் நான்முகனும்" முதலாக "எம்பெருமான் உண்டுமிழ்ந்த எச்சில் தேவர் அல்லாதார் தாமுண்டே" என்னுமர்த்தத்தைப் பேசிக்கொண்டு தம்மை இப்போதும் ஸம்ஸாரார்ணவம் விழுங்காதபடி உய்யக்கொண்டபடியை உபகாரிக்கிறார்.

(அண்டரண்ட பகிரண்டத்து ஒருமாநிலம் எழுமால்வரை முற்றும் முண்ட கண்டம் கண்டார் அடியேனை உய்யக்கொண்டதே) அண்டாந்

தர்வார்த்திகளான பீதவாதி வர்க்கங்களையும் அண்டங்கள் தன்னையும், அண்டாவரணங்களையும், அண்டங்களுக்குள்ளே பஞ்சாசத்கோடி விஸ்தீர்ணமான மகா பிருதிவியாலும, குலபர்வதங்களாலும. உப லக்ஷிதங்களான ஸர்வ கார்யங்களையும எல்லாம் திருவயிற்றில் வைத்து ரக்ஷிக்கைக்காக, விழுங்கின திருக்கழுத்து கண்டர் ஸ்வரூ பத்தை உணர்ந்த என்னை ஸ்வானுபவததாலே உஜ்ஜீவிப்பித்தது. அண்டாதிகளைப் பற்ற சிறியவான குலபர்வதாதிகளைப் பெரியப் பேசு கையாலே அவ்வளவு விழுங்குகையும், ஆசசர்யமன்றென்று தோன்று கிறது.

7. கையினார் சுரிசங்கனலாழியர் நீள்வரைபோல்
மெய்யனார் துளபவிரையார் கமழ்நீள்முடி எம்
ஐயனார் அணியரங்கனார் அரவிணைணை மிசை மேய மாயனார்
செய்ய வாய் ஐயோ ! என்னைச் சிந்தை கவர்ந்ததுவே

வயாக்யானம் :

மேல் நாலு பாட்டாலே சதுர்த்தியில் ப்ரார்த்தநீயமான கைங்கர் யத்துக்கு ப்ரஸ்தாவகமான அனுபவம், தம்மை இப்போது பரவச மாக்கினபடியைப் பேசுகிறார். அதில் "கையினார்" என்கிற பாட்டில் ஆழ்வார்களோடு பொருந்தின திருக்கையை அவலம்பனமாகக் கொண்டு திருமுடியளவும் சென்று மீண்ட சிந்தையை "தூமுறுவல் தொண்டை வாய்ப்பிரானுடைய கோலந்திரள் பவளக்கொழுந்துண் டங்கொல்" என்னும்படியான திருப்பவளத்தின் அழகு, தன்வசமாக்கிற் றென்கிறார்.

(கையினார் சுரிசங்கனலாழியர்) திருக்கைக்கு ஆயுதமாகைக்கும் ஆபரணமாகைக்கும் போரும் என்னும்படி ஆர்ந்த ஸந்நிவேசத்தை உடைத்தாய், அவ்வலம்புரியான வடிவாலே ப்ரணவ ஸந்நிவேசமாய் சப்த ப்ரம்மமயமாய், நிரதிசயாநந்த ஹேதுவான ஸ்ரீபாஞ்சஜந்யத் தையும், தானவ வநதவாக்நியாய் மனஸ்தத்வாபிமாநியான திருவாழி யாழ்வானை உடையராய். இத்தால் மந்த்ரத்தையும் மநஸ்ஸையும் அனுகூலசிந்தைக்கு அநுகுணமாக்கவல்ல உபகரணங்களை உடையவர் என்றதாய்த்து.

திவ்யாயுதாழ்வார்கள், பெரியபெருமாளுடைய திருக்கைகளில் ரேகையில் ஒதுங்கிக்கிடந்து பெருமாள் திருமேனியிலே தோன்றி நிற் பார்கள். (நீள்வரைபோல் மெய்யனார்) ஸ்வரூபம்போலே ஸூக்ஷ்ம த்ருஷ்டிகள் காணுமளவன்றிக்கே மாம்ஸ சக்ஷுஸ்ஸுக்களும் காண லாம்படி மலையிலக்கான திருமேனியை உடையவர். (துளபவிரையார் கமழ் நீண்முடி எம்மையனார்) ஸர்வாதிகத்வஸூசகமான திருத்

துழாயின் பரிமளத்தைப் பரிபூரணமாக்கும்படி சமழ்ந்து, விபூதித்வய ஸாம்ராஜ்ய வ்யஞ்ஜகமான திவ்ய கிரீடத்தை உடைய ஸர்வலோக பிதாவானவர்.

(அணியரங்கனார்) பரம வ்யோமக்ஷீரார்ணவாதிகளிற் காட்டில் குணாதிசயத்தாலே ஆச்ரிதருக்கு ஹ்ருத்யதமமானபடியாலே விபூதி இரண்டுக்கும் ஏகாபரணம் என்னலாய், ஸௌலப்யாதிசயம் உண்டாம் படியான ஸ்ரீரங்க விமானத்தை சயநஸ்தாநமாக உடையவர். அண்ணிமையாலே அணியரங்கனார் என்கிறதாகவுமாம். (அரவினணை மிசை மேயமாயனார்) தம்முடைய ஞாநாத பலங்கள் வடிவுகொண்டாப்போலே இருக்கிற திருவனந்தாழ்வானாகிற அனுகூல திவ்ய பர்யங்கத்தின் மேலே அளவறக்கேங்கின அம்ருத தடாகம் போலே ஆச்ரிதருக்கு அனுபவிக்கலாய் "சிந்தாமணிமிவோத்வாந்தம் உத்ஸங்கே நந்த போகிந:" என்னும்படி ஆச்சர்யபூதரானவருடைய.

(செய்யவாய் ஐயோ என்னைச் சிந்தை கவர்ந்ததுவே) "வாசிய தோர்கனிகொல்" என்னலாம்படியான வர்ணமாதுர்யாதிகளை உடைத்தாய், வையமேழும் உள்ளே காணலாம்படியான செய்யவாய் என் சிந்தையைப் பறிக்கக் கொண்டது. ஐயோ! என்றது ஆச்சர்யத்தை யாதல், அனுபவித்து ஆற்றவரிதானபடியையாதல், அனுபவ ரஸத்தை யார்தல் காட்டுகிறது.

8. பரியனாகி வந்த அவுணன் உடல்கீண்ட அமரர்க்கு
அரிய ஆதிப்பிரான் அரங்கத்தமலன் முகத்து
கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப்
பெரியவாய கண்கள் என்னைப் பேதைமை செய்தனவே.

வ்யாக்யானம் :

தம்மை "ஜிதந்தே புண்டரீகாக்ஷ" இத்யாதிகளிற்படியே தோற்பித்துத் திருவடிகளிலே விழப்பண்ணி மேலேமேலே அனுபவத்தை உண்டாக்கின தாமரைக் கண்களுக்குத் தாம் அற்றுத் தீர்ந்தபடியை ஆச்ரித விரோதி நிராகரண வ்ருத்தாந்த பூர்வகமாக அனுபவிக்கிறார்.

(பரியனாகி வந்த அவுணன் உடல்கீண்ட) ஸர்வ லோகத்திலுமுள்ள தமஸ்ஸெல்லாம் திரண்டு ஒரு வடிவு கொண்டாப்போலே அதிஸ்தூலனாய், மஹாமேரு நடந்தாப் போலே எதிர்த்து வந்த "திரண்ட தோளிரணியன் சினங்கொளாகமொன்றையும்" ஒரு வாழை மடலைக் கிழிக்குமாபோலே இரண்டு கூறு செய்தவனாய். (அமரர்க்கரிய ஆதிப்பிரான்) தன்னாலே ஸ்ருஷ்டருமாய் உபக்ருதருமான தேவர்கள், தாம் காரண பூதனாய், உபகாரகனாய், நிற்கிற நிலை அறியமாட்டாமையாலே அவர்களுக்கு ப்ரஹ்லாதன் அணுகி அனுபவித்தாப்போலே அணுகவும், அனுபவிக்கவும் அரியனாயிருக்கிற.

(அரங்கத்தமலன் முகத்து) ஹேயாகரமான ஸம்ஸாரத்துக் குள்ளே கோயிலாழ்வாருடனே எழுந்தருளி வந்து "அணியார் பொழில் சூழ் அரங்கநகரப்பா ! துணியேனினி நின்னருளல்லதெனக்கு" என்றிருப்பார் தம்முடைய திருவடிகளை அடைந்து, அடிசூடி உய்யும்படி அவர் களுடைய ஜயப்பாடு முதலான ஹேயங்களை, அறுத்துத் தோன்றும் அழகையுடையரான பெரியபெருமாளுடைய "கோளிழைத்தாமரை" தித்யாதிகளாலே பேசப்பட்ட பேரழகை உடைத்தாய், சந்திரனும் தாமரையும் ஒன்றினாப் போலே இருக்கிற திருமுகத்தில்.

(கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப் பெரியவாய கண்கள்) நிகரில்லாத நீலரத்நம் போலே இருக்கிற தார கையின் நிறத்தாலே நீலோத்பல வர்ணங்களாய், அச்ரிக கர்சன ரீதி யாலே அன்றலர்ந்த தாமரைப் பூப்போலே அகிலிகஸிகங்களாய், அனைந்நானார் எல்லார் பக்கலிலும் ஆகாம் தோன்றும்படியான உல்லாஸத்தை உடையவையாய், அநந்யர் பக்கல் அனுராகத்தைக் கீற்று எடுக்கலாம்படியான சிவந்த வரிகளாலே வ்யாப்தங்களாய், ஸ்வாரவ ஸித்தங்களான ஆயாம விஸ்தாரங்களை உடையவையான திருக்கண்கள். அப்பெரிய என்றதற்க இப்போது காண்கிற அளவன் றிக்கே சாஸ்த்ர வேத்யமாய் அநவச்சின்னமான போக்யதா ப்ரகர்ஷத் தையும், மாஹாத்ம்யத்தையும் உடைய என்று தாத்பர்யமாகவுமாம். (என்னைப் பேதைமை செய்தனவே) இவ்வனுபவ ரஸத்திலே அமிழ்ந்த என்னை அல்லாததொரு ஞானாநுஷ்டாநங்களுக்கு அநர் ஹனாம்படி பண்ணிற்றென.

9. ஆலமாமரத்தினிலைமேல் ஒரு பாலகனாய்
ஞாலமேழுமுண்டான் அரங்கத்தரவினணையான்
கோலமா மணியாரமும் முத்துத் தாமமும் முடிவில்லது
ஓர்எழில்
நீலமேனி ஐயோ ! நிறைகொண்டதென் நெஞ்சினையே.

வ்யாக்யானம் :

அவயவசோபைகளிலே அழுங்கார்ப்பட்ட தம்முடைய நெஞ்சு வருந்தி, எங்கும் வ்யாபித்து, ஸர்வாவயவ சோபைகளோடும் கூடின ஸமுதாய சோபையாலே பூர்ணமாய், நித்யானுபவத்தையாலே முன்பெற்றதாய் நினைத்திருந்த பூர்த்தியை இழந்ததென்கிறார்.

(ஆலமாமரத்தினிலைமேல் ஒரு பாலகனாய்) ஸம்ஹார ப்ரள யத்தில் "ஆலன்று வேலை நீருள்ளதோ விண்ணதோ மண்ணதோ" என்று அறிய அரிதாய், அநந்தசாகமாயிருப்பதொரு வட வ்ருக்ஷத்தில் ஒரு இலையிலே தாயும் தந்தையுமில்லாததொரு தனிக்குழவியாய்,

(ஞாலமேழுமுண்டான்) அடுக்குத் தலையாமல் மார்க்கண்டேயன் காணும்படி ஸர்வலோகங்களையும் திருவயிற்றிலே வைத்தவன் (அரங்கத்தரவினணையான்) ப்ரளய காலத்திலே பாலகனாய்க்கொண்டு ஆலிலைமேலே கண்வளர்ந்தருளுகிறபோதொடு ஸர்வ காலத்திலும் கோயிலாழ்வாருக்குள்ளே ஸூரிகளுக்கெல்லாம் தலைவரான திருவநந்தாழ்வான் மேலே "உலகுக்கோர் தனியப்பன்" என்னும்படி தன் ப்ரஜைகளான ப்ரம்மாதிகள் ஆராதிக்க கண்வளர்ந்தருளுகிறபோதொடுவாசியற, காரணத்வ ரக்ஷகத்வாதிகள் காணலாம்படியாயிருக்கிற பெரியபெருமாளுடைய.

(கோலமாமணியாரமும்) நாய்ச்சியாருக்குக் கோயில் கட்டணமாயிருக்கிற திருமார்புக்கு ஒரு ரத்ன ப்ராகாரம் போலே அபிரூபமாய், அதிமஹத்தாய், மஹார்க்கரத்நமான திருவாரமும், முத்துத்தாமமும், ஸந்நவீரமாயும், ஏகாவளியாயும், த்ரிஸரமாயும், பஞ்சஸரமாயுமுள்ள திருமுத்து வடங்களும். (முடிவில்லதோரெழில் நீலமேனி) இவை தனக்கும் அதிசயகரமாய், அநந்தமாய், அத்விதீயமான அபிரூப்யத்தை உடைத்தாய், காளமேகம் போலே ச்ரமஹரமான திருமேனியும். ஆபரணங்களுக்கு முடிவில்லதோரெழிலை உண்டாக்கும்படியான நீலமேனி என்னவுமாம்.

(ஐயோ! நிறைகொண்டதென் நெஞ்சினையே) தனித் தனியே திவ்யாவயவங்களை அநுபவித்த என் நெஞ்சை ஸமுதாயாநுபவத்தாலே முன்புற்ற பூர்ணத்வாபிமான கர்ப்பமான காம்பீர்யத்தைக் கழித்து, இப்பூர்ணாநுபவத்துக்கு விச்சேதம்வரில் செய்வதென் என்கிற அதிசங்கையாலே "பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு" என்று நித்யஸாபேக்ஷமாம்படி பண்ணிற்று.

10. கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெ
யுண்ட வாயன் என்னுள்ளம் கவர்ந்தானை
அண்டர்கோன் அணியரங்கன் என்னமுதினைக்
கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே.

வ்யாக்யானம் :

இவ்வாழ்வார் அடியேன் என்னைகொண்டிய இப்ப்ரபந்தம் தலைக் கட்டுகிற அளவிலும் தம்முடைய போகம் ஊனம் போஜகைக்குபடி தாம் பெற்ற அநுபவத்துக்குப் பெரிய பெருமாள் இனி ஒரு விச்சேதம் வராதபடி பண்ணினபடியைக் கண்டு தம்முடைய அத்யாவசியமான அநந்யாநுபவ ரஸத்தை முக்தருடைய ஸாமகானத்தின் படியிலே பாடி அநாதிகாலம் பாஹ்யாநுபவம் பண்ணின க்லேசம் தீர்ந்து க்ருதார்த்தராகிறார். (கொண்டல் வண்ணனை) கடலிலுள்ள நீரெல்லாம்வாங்கி

காவேரி மத்யத்திலே படிந்ததொரு காளமேகம்போலே கண்டார்க்கு ச்ரமஹரமான திருமேனியை உடையவனை. அங்ஙனன்றிக்கே ஜங்கம ஸ்தாவரங்கள் எல்லாம் உஜ்ஜீவிக்கும்படி ஜலஸ்தலவிபாகமற காருண்ய ரஸத்தை வர்ஷிப்பதொரு காளமேகத்தின் ஸ்வபாவத்தை உடையவனை என்னவுமாம். (கோவலனாய் வெண்ணெயுண்டவாயன்) எட்டுமிரண்டுமறியாத இடையரையும் இடைச்சிகளையும் ரக்ஷிக்கை யாலே தன்னுடைய ஸர்வலோக ரக்ஷகத்வம் வெளிப்படும்படி இடையரில் ஒரு ரூபத்தைக் கொண்டு ஆச்ரிதர் உகந்த த்ரவ்யமெல்லாம் தனக்கு தகப்பு என்னும்படி தோற்ற அவர்கள் கூட்டிய வெண்ணெய் "கூட்டுரன்மாலை யிற்படியே அப்ராக்ருத போகம் போலே அனுபவித்து, அத்தாலே இப்போதும் குளுங்குநாறும்படியான திருமுகத்தை உடையவன் (என்னுள்ளம் கவர்ந்தானை) இடைச்சிகள் வைத்த வெண்ணெய்போலே இவருடைய திருவுள்ளம் பெரியபெருமாளுக்கு நவநீதம் ஆயிற்று. ஞானம் பிறந்தபின்பும் என்னது என்னும்படி அஹங்காரமமகாரங்கள் வடிம்பிடுகிற என்னுடைய மனஸ்ஸை வடிவமகாலும் ஸௌலப்ய ஸௌசீல்ய வாத்ஸல்யாதிகளாலும் வசீகரித்து; இனி என்னது என்னவொண்ணாதபடிகைக் கொண்டவனை.

(அண்டர்கோன்) இடையர்க்கும் நியாம்யனாய் நின்ற எளிமை குணமாம்படி அண்டாதிபதியான ப்ரம்மா முதலாக மற்றும் அண்டாந்தர்வர்த்திகளான தேவாதிகளையெல்லாம் ஸ்வாதீனராக்கி வைத்திருக்கிற ஸ்வாமித்வ ஸ்வாதந்த்ர்யாதிகளை உடையவன். "கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டானாகிலும் எண்ணற்கரியான் இமையோர்க்கும்" என்கிறாராகவுமாம் (அணியரங்கன்) ஸூரிகளும் ஸ்வதேசத்தை விட்டு இங்கே வந்து ஸேவிக்கும்படி ஆகர்ஷகமான அழகையுடைத்தான ஸ்தான விசேஷத்திலே அடியேனை அனுபவபரவசனாக்கினவனை. (என்னமுதினை) பரமபதத்திலும் க்ஷீரார்ணவத்திலும், ஆதித்ய மண்டலாதிகளிலும் அவ்வோநிலங்களுக்கு நிலவரானார் அனுபவிக்கும்படியான அம்ருதமாய் நின்றாப்போல் அன்றிக்கே "நீசனேன் நிறை ஒன்றுமிலேன்" என்கிற நானும் அனுபவிக்கும்படி எனக்கு அஸாதாரணமாய் ஜராமரணாதி ப்ரவாகத்தை நிச்சேஷமாகக் கழிக்கவல்ல நிரதிசய போக்யமானவனை ப்ராக்ருத போக ப்ராவணரான தேவர்கள் அநேக ப்ரயாஸத்தோடே பெற்றனுபவிக்கும் அம்ருதம் போலன்றிக்கே அநந்ய ப்ரயோஜனனான நான் அயத்நமாகப் பெற்றனுபவிக்கும்படியான அம்ருதமானவனை என்னவுமாம்.

(கண்டகண்கள்) என்கிற விதியிலே என் கண்கள் என்னாமையாலே நிர்மமத்வம் தோற்றுகிறது. இப்படி பாரதந்த்ரானு வ்ருத்தி இல்லாதபடியான தத்வஜ்ஞாநம் பிறந்து ஸர்வத்திலும் நிர்மமராயிருக்கிற இவர், முன்பு என் கண் என்றும், என சிந்தனை என்றும் அடியேன்

உள்ளமென்றும், என் உள்ளமென்றும மமகாரம் பின்தொடர்ந்து தோன்றப் பேசுவான் என்னென்னில் ஸ்வதந்த்ர ஸ்வாமியாய ஈச்வரன் ஸ்வசேஷபூதமான சேதநா சேதநங்களிலே ஸ்வார்த்தமாக ஒன்றை ஒன்றுக்கு சேஷமாக அடைத்துவைத்தால் அவன் அடைத்தபடி அறிந்து பேசுவார்க்கு நிர்மமத்வத்தோடு சேர்ந்த இம் மமகாரம் அந பிக்ஞர் மமகாரம் போலே தோஷமாகாது.

(மற்றொன்றினைக்காணாவே) இதுக்கு முன்பெல்லாம் ப்ராக்ருத விஷயங்களிலே ப்ரவணங்களாய் அவற்றைக் கண்டபோது ப்ரீதியும், காணாத போது விஷாதமுமாய்ச் சென்று இப்போது நித்ய தரித்ர னானவன் நிதியைக் கண்டாப்போலே அநந்த குணவிபூதி விசிஷ்டமாக இம்மஹாநிதியை அனுபவிக்கப்பெற்ற கண்கள். (மற்றொன்றினைக் காணாவே) ப்ராப்த விஷயத்திலே ப்ரதிஷ்டிதமான ஸங்கத்தை உடைத்தான படியாலே பரிசர்யார்த்தமாக வந்து பார்ச்வ வர்த்தி களாய் நிற்கும் பத்மயோநி முதலானாரையும் பாராது. "புருஷா ணாம் ஸஹஸ்ரேஷு யேஷு வைசுத்த யோநிஷு; அஸ்மாந் நகஸ் சிந்மநஸா சக்ஷுஷாவாப்ய பூஜயத்" என்கிறபடியே ப்ரம்ம புத்ரர் களாய் "யூயம் ஜிஜ்ஞாஸவோ பக்தா:" என்னுமளவரான ஏகதர் த்விதர் த்ரிதர் திறத்தில் ஞாநிகளான ச்வேதத்வீப வாசிகளுடைய அநாதரத்தை இங்கே அநுஸந்திப்பது. "ப்ராப்ய ச்வேதம் மஹாத் வீபம் நாரதோ பகவாந் ரிஷி:—ததர்ச தானேவநரான் சவேதாம்ஸ் சந்த்ர ப்ரபான் சுபான்—பூஜயாமாஸ சிரஸா மநஸாதைஸ் ஸுபூ ஜித:" என்று நாரத பகவான் அளவிலும் அர்கள் பரிமாற்றம் சொல் லப்பட்டது. "உவாச மதுரம் பூயோ கச்ச நாரத மாசிரம்—இமேஹ்ய நிந்த்ரியா ஹாரா: மத்பக்தாஸ் சந்த்ரவர்சஸ—ஏகாக்ராஸ் சிந்தயே யுர்மாம் நைஷாம்விக்னோ பவேதிதி" என்று பகவான் அருளிச் செய்த வார்த்தையையும் இங்கே அநுஸந்திப்பது. "கண்டு கேட்டுற்று மோந்துண்டுழலும் ஐங்கருவி கண்ட இன்பம்" என்கிற ஐசவர்யானு ண்டுழலும் ஐங்கருவி கண்ட இன்பம்" என்கிற ஐச்வர்யானு பவத்திலும், "தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம்" என்கிற ஆத்ம மாத்ரானுபவரஸத்திலும் நடக்கு நிஸ்ப்ருஹதை பிறந்தபடியிலே இங்கு தாத்பர்யம்.

அங்ஙனன்றிக்கே ப்ரதானமான அனுபவத்திலே இழிந்தபடியினாலே சரிய: பதிக்கு ப்ரகாரமாகவல்லது மற்றொன்றையும் தாம் அனுபவி யாதபடியிலே தாத்பர்யமாகவுமாம். பெரிய பெருமாள் திருமேனியிலே திருமலை முதலாகக் கோயில்கொண்ட அர்ச்சாவதாரங்களிலும், ராம கிருஷ்ண வாமந வடபத்ர சயனாதிகளிலும் உள்ள போக்யதை யெல்லாம் சேர அனுபவித்து, இவ்வாபிருப்யத்தில் ஈடுபட்ட என் கண்கள் மற்றும் பரவ்யூஹ விபவாதிகளான திருமேனிகளெல்லாம்

சேரக் காட்டினாலும் ஸ்தநந்தயத்துக்கு போக்யாந்தரங்கள் ருசியாதாப்பாலே "பாலோ நாந்யத்ர கசசதி" என்கிறபடியே அவையொன்றும் ருசியாதென்கிறார் ஆகவுமாம். இது இவருடைய அநந்ய ப்ரயோஜநத்வகாஷ்டை இருக்கும்படி.

1. ஆதிமறையென ஓங்குமரங்கத்துள்ளே
அருளாருமகடலைக் கண்டவன நம்பாணன்,
ஓதியமதாரிரு நான்குமிரண்டுமான
ஒருபத்தும் பத்தாக உணர்ந்துரைத்தோம்,
நீதியறியாத நிலை அறிவார்க்கெல்லாம
நிலையிதுவேயென்று நிலைநாடி நின்றோம்,
வேதியர்தாம் விரித்துரைக்கும் விளைவுக்கெல்லாம்
விதை யாகுமிது வென்று விளம்பினோமே.

2. காண்பனவும் உரைப்பனவும மற்றொன்றின்றிக்
கண்ணனையே கண்டுரைத்த கடியகாதல்,
பாண்பெருமாள் அருள் செய்த பாடல்பத்தும்
பழமறையின் பொருளென்று பரவுகின்றோம்;
வேண்பெரிய விரிதிரைநீர் வையததுள்ளே
வேதாந்த வாரியனென்றியமப நின்றோம்
நாண் பெரியோமல்லோம் நாம் நன்றும்தீதும்
நமக்குரைப் பாருளரென்று நாடுவோமே.
இதி கவிதார்க்கிக ஸிம்ஹ: ஸம்யக் வ்யாசஷ்ட-
ஸாத்விக பரித்யை
முநி மஹித ஸூகவி காதா தசகமிதம் தேசிகோ பஜ்ஞம்.
முநிவாஹந போகோயம் முக்தைச்வர்ய ரஸோபம:
க்ருபயா ரங்கநாதஸ்ய க்ருதார்த்தயது நஸ்ஸதா.

(ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:)

ஸ்ரீ:

ஸ்ரீரங்கநாத பரப்ரம்மணே நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

# பகவத் த்யான சோபானம்

ஸ்ரீநிகமாந்த தேசிகன் திருவரங்கம் பெரிய கோயிலிலே நித்யவாஸம் பண்ண விரும்பி அங்கு எழுந்தருளியபோது அருளிய ஸ்தோத்திரங்களுள் சிறந்ததாகும் இது. ஆழ்வார்களாது அருளிச் செயல்களுக்குள் திருப்பாணாழ்வார் அருளிய அமலனாதிபிரான் ஒன்று உத்தமமானது. பெரியபெருமாளுடைய திருவடி முதல் திருமுடிவரை உள்ள அழகை அனுபவிப்பதில் இரண்டு நூல்களுக்கும் ஒற்றுமை உள்ளது. ஸ்ரீரங்க ராஜத்யான ஸோபாநம்" எனப் பெயரிடாமல் பகவத் த்யான ஸோபாநம் எனப் பெயரிட்டது, "பகவான்" என்ற சொல் ஸ்ரீரங்க நாதனைத் தான் குறிக்கும் என்பதனை உணர்த்துவதற்காக என்று பெரியோர் கூறுவர். "ஸோபாநம்" என்று படிக்கட்டுக்குப் பெயராகும். பக்தர்களின் மன நிலையானது ஸ்ரீரங்கநாதனது திருவடியிலிருந்து திருமுடியளவும் செல்வதற்கு இந்த ஸ்தோத்திரம் படிக்கட்டு போன்று விளங்குகிறது என்பது கருத்து. இதைக் கொண்டு எம்பெருமானுடைய எல்லா அவயவங்களையும் அனுபவிப்பது எளிது என்பது கருத்து.

1. அந்தர்ஜ்யோதி: கிமபி யமிநாம் அஞ்ஜநம் யோகத்ருஷ்டே:
   சிந்தாரத்நம் ஸுலபமிஹநு: ஸித்திமோக்ஷாநுரூபா.
   திநாநாத வ்யஸந சமநம் தைவதம் தேவதாநாம்
   திவ்யம் சக்ஷு: ச்ருதிபரிஷதாம் த்ருச்யதே ரங்கமத்யே.

இதன் கருத்து:

ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் ஸ்ரீரங்கநாதன் என்கிற திருநாமத்துடன் ஜோதி ஸ்வரூபத்தில் ஓர் ஆச்சர்யவஸ்து விளங்குகின்றது. யோகம் செய்யவல்ல பெரியவர்கள் அந்தச் சோதியைத் தங்கள் இதயத் தாமரையில் வைத்துக் காண்கின்றனர். அவ்வாறு காண்பதற்கு அது சாதநமாகவும் ஆகின்றது. உலகில் சித்தர்கள் கொடுக்கும் மையைக் கண்ணில் அணிந்துகொண்டால் கண்ணுக்கெட்டாத பொருள்களும் தென்படுவதுண்டு. அவ்வாறு அப்பரம் பொருள், தானே அஞ்ஜநமை யாயிருந்து எல்லாவற்றையும் தன்னையும் அறியச் செய்கின்றது. "சிந்தாமணி" என்கிற ரத்தினம் தேவலோகத்தில் இருந்து கொண்டு வேண்டுவோர்க்கு வேண்டிய பலனை எல்லாம் அளிக்கும் என்று கூறுவர். அந்த ரத்தினம் நமக்குக் கிட்டாத ஒன்றாகும்; மேலும் அந்த ரத்தினம் மோட்சத்தைக் கொடுக்கவல்லதன்று. திருவரங்கச்

செல்வன் என்னும் இரத்தினமோ நாம் இவ்வுலகில் கண்ணால் கண்டு களிக்க எளிதாய், இம்மைப் பயனையும், மோட்சத்தையும் அளிக்க வல்ல சிந்தாமணியாய் விளங்குகின்றது. உபாயம் ஏதும் செய்யச் சக்தி அற்றவர்களாயும் உள்ளவர்களுடைய (அகிஞ்சநர், அநந்ய கதிகள்) துன்பங்களையெல்லாம் போக்குகின்றது. உலகிலுள்ள அனைத்து தெய்வங்களும் தொழும்படியான ஏற்றமுடைய பெரிய தெய்வமாய விளங்குகின்றது. இந்திரியங்களுக்குள் கண் எப்படி முக்கிய மான உறுப்பாக இருந்து, எல்லாப் பொருள்களையும் காணச் செய் கின்றதோ அது போன்று, அனைத்து வேதங்களும் இவ்வரங்கனைக் கண்ணாகக் கொண்டு போற்றுகின்றன. "வேதைஸ்ச ஸர்வை: அஹ மேவ வேத்ய:" என்று வேதத்தின் பொருளாய் விளங்குமவன் இவனே அன்றோ. இத்தகைய பெருமை பெற்ற அரங்கன் என்னும் தெய்வம் திருவரங்கத்தின் நடுவில் நம கண்ணுக்குப் புலனாய்க் காட்சி தருகின்றது.

> மகிழ்கின்ற யோகியர்க்குட் சோதி ஆகி
> மலர் ஞானக் கண்ணுக்கு மையாய் ஆகி
> இகழ்வின்றி நமக்கெல்லாம் இருமைப் பேறும்
> இவ்வுலகில் தருசிந்தா மணியாய் ஆகிப்
> புகழ்கின்ற மறைகளுக்கு விழியாய் ஆகிப்
> புகலில்லார் திறனில்லார் துயரம் போக்கித்
> திகழ்கின்ற தேவர்க்குத் தேவாம் ஒன்று
> திருவரங்கத் திடைநடுவே தெரிந்த தன்றே.

2. வேலாதீத ச்ருதி பரிமலம் வேதஸாம்மௌளி ஸேவ்யம்
ப்ராதுர்பூதம் கநகஸரித: ஸைகதே ஹம்ஸஜுஷ்டே
லக்ஷ்மீபூம்யோ: கரஸரஸிஜை: லாலிதம் ரங்கபர்த்து:
பாதாம்போஜம் ப்ரதி பலதிமே பாவநா தீர்க்கிகாயாம்.

இந்த சுலோகத்தில் எம்பெருமான் திருவடிகளை வருணிக்கிறார். தாமரைப் பூவைக் காட்டிலும் இத்திருவடிகளுக்குண்டான நான்குவித ஏற்றத்தை எடுத்துரைக்கிறார்.

இதன் கருத்து .

ஸம்ஸ்க்ருத வேதம், ஆழ்வார்கள் அருளிச் செயலாகிற தமிழ் மறை ஆகிய இரண்டு வேதங்களின் எல்லையற்ற வாசனையை உடைய தாக இருக்கிறது. பல காலத்தில் பல விதமான அண்டங்களின் பிரம மாக்களின் சென்னிக்குமலர்ந்த பூவாக தலைகளால் வணங்கப்படு கிறது. உலகில் செந்தாமரைகள் சேற்றிலேதான் முளைக்கும் ; மண

வீலோ மணற் குன்றிலோ முளைக்காது. ஆனால் இத் திருவடிகளோ அன்னங்கள் விரும்பி வீற்றிருக்கும் பொன் கொழிக்கும் பொன்னி ஆற்றின் (காவிரியின்) மணல் திட்டில் தோன்றியுள்ளன. இங்கு அன்னங்கள் என்று ஆசிரியர் குறிப்பிடுவது ஆளவந்தார், ராமானுஜர் போன்ற ஸ்ரீமத்பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யர்களையே ஆகும். வாசனையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் இவர்களின் திருக்கைகளான தாமரைகளாலே திருவடிகளாகிய தாமரைகள் வாடப் பெறுகின்றன. அத்தகைய ஸ்ரீரங்கநாதனது திருவடித் தாமரை அடியேனுடைய சிந்தனை என்னும் பொய்கையில் சாயலிட்டு விளங்குகின்றது.

> முன்னுமா பிரமர்க்கும் மறைமேல் உற்று
> மொழிவாம்பு கடந்தார மணக்கை வீசி
> அன்னமகிழ்ந் துறைகின்ற பொன்னி யாற்றில்
> அழகமைமர் மணல்திட்டில் திகழவே தோன்றும்
> மன்னுமொளி திருமங்கை பூமிமங்கை
> மலர்க்கரங்கள் தொடவாடும் அரங்கச் செல்வர்
> பொன்னடிச்செந் தாமரைகள் அடியேன் நெஞ்சப்
> பொய்கையிலே உருக்காட்டிப் பொலியும் அம்மா !

3. சித்ராகாராம் கடகரசிபிஸ் சாஸ்வதோத்யாந பர்வாம்
காலே தூத்ய த்ருதகதி கலிம் காந்திலீலாகலாபீம்.
ஜாநுச்சாயா த்விகுண ஸுபகாம்ரங்கபர்த்துர் மஹாத்மா
ஜங்காம் த்ருஷ்ட்வா ஜநநஜலதிர் ஜாங்கிகத்வம் ஜஹாதி.
(இதில் அரங்கன் கணைக்காலை வருணிக்கின்றார்)

இதன் கருத்து :

பாடகம் எனப்படுகிற தண்டைகளில் உள்ள பலவகை ரத்நங்களின் ஒளிகளாலே பல நிறம் கொண்டதாயிருக்கின்றன. அமைய வேண்டிய முறையில் அழகிய வட்டமான வகையில் அமைந்திருக்கின்றது. பாண்டவர்க்காகத் தூது செல்ல நேருங் காலத்தில் தூது போவதில் பதற்றமுடைய நடையை உடையதாய், காந்திமுழுமையும் தங்கியிருப்பதற்கான பாத்திரம் போன்று விளங்குகின்றது. (அழகிற்கு வாய்விரிக்காள்ள பாத்திரத்துக்கு "கலாபீ" என்று பெயர். தெலேவ காளாஞ்சி, படிக்கம் என்றும் பெயர் பெறும்) முழங்காலும், கணைக்காலும் மிக நெருக்கமான உறுப்புக்கள் ஆனபடியாலே முழங்காலின் அழகால் அழகு இரட்டிக்கப்பெற்றதாயுள்ளது. அத்தகைய அரங்கனது கணைக்காலை ஸேவித்து எனது பிறவியாகிய பெருவாரிதியின் அலையும் தன்மை விடுபடுகிறது. நம் பிறவியாகிய பெருங்கடல் இக்கணைக்காலை நினைத்தால் கணுக்காலளவாக வற்றுவிக்கப்பட்டுவிடுகிறது என்பது கருத்து.

கழல்மணிகள் ஒளிதரப் பன்னிறமும் எய்திக்
கவின் மணிகள் பொருத்தமுறத் திரண்டு நீண்டே
எழில்முகக்கும் கலமாகி முழந்தா ளேரால்
இரட்டுற அழகுற்றுத் தாது போகும்
பொழுதினிலே மிகவிரைந்த நடைமேற் கொள்ளும்
பொன்னரங்கன் கணைக்காலைக் கண்ணாற் கண்டவ்
அழிபிறவி வழியினிலே கணைக்கால் தேய
அலைதுயரம் நீங்கியதே அடியேன் ஆவி.

4. காமாராம ஸ்த்திர கதலிகா ஸ்தம்ப ஸம்பாவநீயம்
கௌஸுமாச்லிஷ்டம் சிரபி கமலா பூமி நீலோபதாநம்
ந்யஞ்சத் காஞ்சீ கிரண நிசிதாம் நிர்விசத்பாரயுக்மம்
லாவண்யௌக த்வயமிவ மதிர் மாமிகா ரங்கபர்த்து:
(இதில் அரங்கன் திருத் தொடைகளை வருணிக்கிறார்.)

இதன் கருத்து:

அடி பருத்து, நுனி சிறுத்து, மதமதென்று மாம்ஸங்களாய் விளங்கும் அழகிய மணவாளனது திருத்தொடைகள் மன்மதனது அழகிய தோட்டத்தில் உறுதியாயுள்ள வாழை மரங்களோ என்னலாம்படி யிருக்கும். பீதாம்பரத்தாலே அலங்கரிக்கப்பட்டிருக்கும் அசேதனமான பீதாம்பரமும்கூட அழகின் மிகுதியைக் கண்டு இறுகப் பற்றிக் கொள்ளும்படியிருக்கும். திருவடிகளைப் பிடித்துவிடும் பெரிய பிராட்டியாரும் பூமிதேவியும் நீளாதேவியும் சற்று களைப்பு ஏற்பட்டவாறே திருத்தொடையிலே தலைவைத்து சயனித்துக் கொள்ளும்படி தலையணையாய் இருக்கும். கீழ் நோக்கிச் செல்கிற மேகலையின் ஒளிகளாலே அழகு பெற்றுள்ளது. திருமேனியில் தோன்றிய அழகு வெள்ளமானது திருநாபியளவும் ஒரே பெருக்காகப் பரந்தோடி வந்து அதன்கீழே இரண்டாகப் பிரிகின்றதோ என்னும்படி அற்புதமான அழகிய மணவாளனது திருத் தொடைகளை என் சிந்தையானது அனுபவித்துக்கொண்டு கிடக்கிறது.

மன்மதனார் தோட்டத்து வாழை போன்ற
வனப்புடனே பொன்னாடை போர்த்துக் கொண்டு
பொன்மகளும் புவிமகளும் பின்னை தானும்
பொருந்திமகிழ் தலையணையாய் நாலு கின்ற
மின்மணிமே கலையொளியால் வனப்பை எய்தி
வியப்பளிக்கும் இரட்டையெழில் வெள்ள மாகும்
நன்மைபுரி திருவரங்கச் செல்வக் காளை
நறுந்தொடையில் என்மதிதான் பதிந்த தன்றே.

உள்ளது, கௌஸ்துபம் என்கிற சிறந்த ரத்நத்தின் ஒளியால் அதி சயம் மிக்க சோபையை உடையதாயிருக்கிறது, இயற்கையாக நீல நிறம் படைத்த திருமேனியில் சிகப்பு நிறமான ஸ்ரீகௌஸ்துப காந் தியும் சேரப் பெற்றால் உண்டாகும் அழகைச் சொல்லி முடியுமா? தோளிணைமேலும், நன்மார்பின்மேலும், சுடர்முடிமேலும், தாளிணைமேலும் அணிந்த திருத்துழாயின் சோபையும் வைஜயந்தி என்னும் வந மாலையும் கலந்து வீசுவதால் குளிர்ந்த ஒளி மிகுந்த தாயிற்று. நிலவைப் போலே அழகிய முத்து மாலையையும் உடைய தான திருவாரங்களின் இரு தோள்களின் நடுவேயுள்ள திருமார்பு என் உள்ளத்தில் உள்ள தாபத்தையெல்லாம் போக்குகின்றது.

திருமகளின் திருவடி சார் பேற்றை எய்திச்
 சிறந்த புகழ் ஸ்ரீவத்ஸ மறுவைத் தாங்கிக்
குருமணியாம் கௌஸ்துபத்தின் செம்மை யூறக்
 குளிர்நிலவார் எழில்முத்தக் காமம் சார்த்தி
மருவாரும் துளவத்தால் பண்ணி நன்கொள்
 வைஜயந்தி தாங்கிக்குளிர்ந்த வனப்பைப் பெற்றுப்
பருத்துயரத் திருவாரங்கன் பரந்த மார்பு
 பரவடியேன் மனத்தேக்கம் போக்கிற் றன்றே.

7. ஏகம் வீலோ பலித பிதாம் பாஹும் அஜாநுலம்பம்
 ப்ராப்தா நந்தே சயித அகில ப்ரார்த்தநா பாரிஜாதம்
 த்ருஷ்டா ஸேயம் த்ருட நியமிதா ரச்மிபி: பஞ்சபாணம்
 சிந்தா ஸந்திந்த்யபவதி மே சித்ரமாலாநு யந்த்ரம்.
 (இதில் பெரியபெருமாளுடைய திருக்கைகளில் காம் அழங் கார்ப்பட்டுக் கட்டுண்டிருக்கும்படியைப் பேசுகிறார்).

இதன் கருத்து:

எல்லாருடைய எல்லாவிதமான பிரார்த்தனைகளையும் நிறை வேற்றக்கூடியதாய், வேண்டுவோர்க்கு வேண்டுவன (செல்வம் முதலியப் பயன்கள்) அனைத்தும் தரக்கூடியதாய் ஸ்ரீரங்கநாதரின் திருத்தோள் கள் விளங்குகின்றன. ஒரு வலது திருக்கையை மடித்துத் தலையணை யாக வைத்துக்கொண்டுள்ளார். மற்றொரு இடது திருக்கையை முழங்கால் அளவு நீட்டிக்கொண்டிருக்கிறார். மடித்த வலதுகை, மண் ணையும், விண்ணுலகச் செல்வங்களுக்குத் தலைவனாய் ப்ரம்மா முதலிய தேவதைகளுக்கெல்லாம் தலைவன் தானே என்பதற்காகச் சுட்டிக் காட்ட கிரீடத்தைச் சுட்டிக் காட்டுகிறது. முழந்தாளளவு நீட்டிய திருவடியைத் தொட்டுக் காட்டி, இத்திருவடிகளே தாழ்ந்

தார்க்குந்தக்க புகலிடம் என்று தெரிவிக்கின்றது. ஆக, பரத்வ ஸௌலப்ய குண ஸூசகங்களாக இருகைகளும் விளங்குகின்றன. உலகில் பெரிய கையைப் பற்றியவர்களுக்குச் செருக்கு உண்டாவது இயற்கை. தம்முடைய சிந்தனை பெரிய பெருமாளுடைய இரண்டு திருக்கை களையும் பற்றிக்கொண்டபடியால் செருக்குற்றதாம். செருக்குற்றவன் ஒருவர் கையிலும் பிடிபடாமல் துள்ளித் திரிவானல்லவா. அப்படித் துள்ளித் திரிகிற எனது சிந்தையாகிய பெண் யானை திருவாபரணங் களின் ஒளிகள் என்னும் கயிறினாலே இறுகப் பிணிக்கப்பெற்று விசித் திரமான அரங்கனது தோள்களாகிய கட்டுத் தறியில் கட்டுண்டு அனுபவிக்கிறது.

பணிவுறுவோர் தமக்கெல்லாம் பாரி ஜாதப்
பண்புடைய திருவரங்கம் பள்ளி கொண்ட
மணிவண்ணன் தலையணையாய் விளையாட் டாக
மடித்துவைத்த திருக்கரமும் முழந்தாள் மட்டும்
தணிவுடைய இடக்கரமும் பிடித்துச் சொக்கித்
தருக்கியுள என்சிந்தைப் பிடியே தானும்
அணிவிளங்கும் ஒளிவடத்தால் பிணைக்கப் பெற்றே
அற்புதமாம் அத்தறியில் மகிழ்தல் என்னே !

8\. ஸாபிப்ராய ஸ்மித விகஸிதம சாருபிம்பாதரோஷ்டம்
துக்காபாய ப்ரணயிநி ஜநே தூரதத்தா பிமுக்யம்
காந்தம் வக்த்ரம் கநகதிலகா லங்க்ருதம் ரங்கபர்த்து :
ஸ்வாந்தே காடம் மம விலஸதி ஸ்வாகதோதார நேத்ரம்,
(இதில் திருமுக மண்டலம் வருணிக்கப்படுகிறது)

இதன் கருத்து :

தனக்கு விருப்பமுள்ள அடியார்களைக் கண்ட ஆநந்தத்தாலே அர்ச்சாவதார நிலையைக் கடந்து விம்மி வெளி வந்த புன்சிரிப்பு தவழ்கின்றது. அதனால் அரங்கன் திருமுக மண்டலம் மிக மலர்ந்து விளங்குகின்றது. கீழ் மேல் உதடுகள் கோவைக் கனிபோல் செம்மை நிறமாய், அழகியனவாய் விளங்குகின்றன. துன்பத்தால் வருந்தி அதனைப் போக்கிக்கொள்ளும நோக்கில் வரக்கூடிய அடியார்களை வெகு தொலைவில் வரும்போதே அரங்கன் தன் திருமுகத்தை அவர்கள் பக்கமாய்த் திருப்பி கடாக்ஷிக்கிறான். பொன்னாலாகிய ஒரு திலகத்தைத் திருநெற்றியில் அணிந்திருப்பது திருமுகத்துக்கே ஓரழகைத் தருகிறது. திருக்கண்களின் பெருமிடுக்கை நோக்கும்போது அடியார் களை வருக வருக இங்கே என அன்புடன் அழைப்பதுபோல் விளங்கு

கின்றது. இத்தகைய அரங்கனது அழகிய திருமுக மண்டலம் அடியேனது உள்ளத்தில் ஆழப் பதிந்து விளங்குகின்றது.

பொருளுடைய புன்னகையே பூத்து நிற்கும்
 பொலிவுடைய கொவ்வைவாய் இதழ்க ளோடும்
இருளுடைய துயர்களையும் விருப்பி னோரை
 எதிர்கொள்ள நெடுந்தொலைகாண் நோக்கி னோடும்
அருளுடனே வருகவென அழையா நிற்கும்
 அமுதொழுகிக் கண்ணோடும் அரங்கத் தம்மான்
திருவுடைய பொற்றிலக வனப்போ டுற்ற
 திருமுகமென் நெஞ்சாழப் பதிந்த தன்றே.

9. மால்யைரந்த ஸ்திரபரிமலைர் வல்லபா ஸ்பர்சமாந்யை :
 குப்யச்சோலீ வசநகுடிலை: குந்தலை : ச்லிஷ்டமூலே.
ரத்நாபீட த்யுதிசபலிதே ரங்கபர்த்து : கிரீடே
 ராஜந்வத்ய: ஸ்திதிமதிகதா வ்ருத்தயஸ்சேதஸோமே.
 (இதில் கிரீடத்தை வருணிக்கிறார்).

இதன் கருத்து :

தம்முடைய மன நிலையானது பெருமாளுடைய திருவபிஷேகத்திலே (கிரீடத்திலே) ஊன்றி இதுவரையிலிருந்த நின்றவா நில்லாமையைத் தவிர்த்து நிலையான இருப்பைப் பெற்றுள்ள தன்மையைச் சொல்லுகிறார். திருமுடியின் உள்ளே நறுமணம் மிக்க மாலைகளை அணிந்துகொண்டிருப்பதனாலே திருக்குழற்கற்றையினுள்ளே திவ்ய பரிமளம் வீசிக்கொண்டிருக்கிறது. ஸ்ரீபூமி நீளாதேவிகள் அவனது கூந்தலை வாரிமுடிப்பது வழக்கமாதலால் அவர்கள் திருக்கை ஸ்பர்சம் பட்டதனால் பெருமைபெற்று விளங்கின. சோழ நாட்டுப் பெண்களுக்குக் கோபம் வந்தால் அவர்கள் வக்ரமான பேச்சுக்களைப் பேசுவார்களாம். அரங்கனின் குழற்கற்றையும் அப் பெண்களின் பேச்சுப்போல் வக்ரமாய்ச் சுருண்டிருக்கிறது. சுருண்ட கேசங்களை உடைமை உத்தம புருஷ லக்ஷணமாம். அக் கூந்தலின் மீது கிரீடம் அணிந்திருப்பதால் கிரீடத்தின் அடிப்பாகம் கூந்தலில் நன்கு பதிந்துள்ளது. கிரீடத்தின்மேலே பலவகை ரத்தினங்கள் பதித்த ஆபரணத்தை அணிந்துள்ளார். அந்த ரத்தினங்களின் ஒளி கிரீடத்தின்மீது வீசுவதால் கிரீடமும் பல நிறங்கொண்டு விளங்குகின்றது. இத்தகைய அரங்கனது கிரீடத்திலேயே என் மனநிலைகள் ஊன்றி நிற்கின்றன. ஆதலின் இது நாள்வரை அடங்காது திரிந்து கொண்டிருந்த என் மன நிலைகள் இப்பொழுது ஒரு நல்ல அரசனைப் பெற்று அவனுக்கு அடங்கிக் கிடக்கின்றன.

மணங்கொண்ட பிராட்டியர்கை நேர்த்தி பெற்று
மாலைகளால் உள்நிலைத்த மனத்தைக் கொண்டு
சினங்கொண்ட சோணாட்டு மடவார் பேச்சுத்
திறம்போலச் சுருண்டகருங் குழலின் மீதே
இனங்கொண்ட மணிவிளங்கு சென்னி மாலை
ஏரொளியால் பன்னிறங்கொள் அரங்கச் செல்வன்
கனங்கொண்ட திருமுடியைக் கண்டென் எண்ணம்
காவலனைப் பெற்றனவாய் நிலைத்த அம்மா !

10. பாதாம் போஜம் ஸ்ப்ருசதி பஜதே ரங்கநாதஸ்ய ஜங்காம்
ஊருத்வந்த்வே விசதி சனைர் ஊர்த்வமப்யேதி நாபிம்
வக்ஷஸ்யாஸ்தே வலதிபுஜயோர் மாமிகேயம் மநீஷா
வக்த்ராபிக்யாம் பிபதி வஹதே வாஸநாம் மௌலிபந்தே.

(கீழே ஒன்பது சுலோகங்களினால் ஒவ்வொரு திவ்யாவயவத்தின் சோபையையும், தனித் தனியே அனுபவித்து வந்தவர் எல்லா அவயவங்களின் அழகையும் இதில் ஒருசேர அனுபவித்து இன்பம் பெறுகிறார்).

இதன் கருத்து :

என்னுடைய புத்தி என்ற பெண்ணானவள் அழகிய மணவாளன் மீது காதல்கொண்டு அவன் திருவடியைத் தொடுகிறாள். பின்பு கணைக்காலைப் பக்தியுடன் தொழுகிறாள். அதன் மேலுள்ள தொடைகளிடம் மெல்லச் சென்று அவற்றில் அமிழ்ந்துவிடுகிறாள். அவற்றினின்றும் எழுந்து மேலுள்ள திருநாபியை நெருங்குகிறாள். பின் அகன்ற அவன் திருமார்பில் சற்று அமர்கின்றாள். எழுந்து அவன் திருத்தோள்களின் அழகில் ஈடுபட்டு அவற்றைச் சுற்றிச் சுழலுகின்றாள். பின் திருமுக மண்டலத்தை அணுகி, அதன் அழகு வெள்ளப் பெருக்கெடுத்தோடுவதைத் திருக்கையால் அள்ளிப் பருகுகின்றாள். பின்பு கிரீடத்தின் நினைவில் மெய்ம்மறந்து நிற்கின்றாள். இப்படி என் மனம் அவனது திருமேனியையே பற்றிக்கொண்டு கிடக்கின்றது.

திருவரங்கன் திருவடிச்செங் கமலத் துற்றுச்
சிறந்தகணைக் காலினிலே சேவை செய்தே
இருதொடையில் நன்றாகப் படிந்து மேலே
எழிலுந்திக் கமலத்தை நெருங்கிச் சார்ந்து
குருமணியார் திருமார்பில் வைகி நீண்டு
கொடை வழங்கு திருக்கரங்கள் மிசையே சுற்றி
அருளொளியைத் திருமுகத்தில் பருகிச் சென்று
அணிமுடியில் பதிவுற்ற(து) என்றன் நெஞ்சே.

11. காந்தோதாரை ர்ம்ய புஜை; ஸ்வைர் ஆயுதைரந்வித:
லக்ஷ்மீ தாம்ந: ப்ருதுலபரிகை: லக்ஷிதா ப்ரீதி ஹேது:
அக்ரே கிஞ்சித் புஜகசயந: ஸ்வாத்மநை வாத்மந: ஸந்
மத்யேரங்கம் மம ச ஹ்ருதயே வர்த்ததே ஸாவரோத:
(கீழ்ச் சுலோகங்களால் மூல மூர்த்தியான பெரிய பெருமாளை அனுபவித்துப் பேசினவர், இந்தச் சுலோகத்தினால் உத்ஸவ மூர்த்தியான நம்பெருமாளையும் சேர்த்து அனுபவிக்கிறார்.)

இதன் கருத்து:

திருவரங்கனது திருக்கைகள் கண்டவர்கள் மனத்தைக் கொள்ளை கொள்ளுவதாயும், வேண்டுவோர்க்கு வேண்டுவனவாக உள்ள இம்மை மறுமைப் பயன்களை வாரி வழங்குகின்றனவாய் உள்ளன. அந்தத் திருக்கைகளில் ராமகிருஷ்ணாதி விபவாவதாரங்களில் எதிரிகளை அழிக்க வில்லேந்திய நிலையில் நாண்கயிறு அழுத்திய தழும்புகளும் தெரிகின்றன. அத் திருக்கைகள் பெரிய பிராட்டியாருக்குக் கோயில் கட்டணமான திருமார்புக்குப் பாதுகாப்பான பெரிய தாழ்ப்பாள் போல் உள்ளன. அத்திருக் கைகளில் ஏந்திய திவ்யாயுதங்களைக் கண்டாலே அடியார்களின் அச்சமெல்லாம் ஒழிந்து போகும். இப்படி கம்பீரமாகத் திருவரங்கராஜன் மீது பள்ளிகொண்டுள்ள திருவரங்கன் ஸ்ரீரங்க விமானத்தில் மூலத்திருமேனிக்குச் சற்று முன்புறத்தில் தானே உத்ஸவராகத் திருவடிவங்கொண்டு பெரிய பிராட்டியார் முதலிய தேவிமார்களுடன் திருவரங்கத்தின் நடுவில் அனைவரும் உய்யும் வண்ணம் காட்சி அளிக்கிறான். அதே நிலையிலேயே அடியேன் உள்ளத்திலும் நித்யவாசம் பண்ணுகிறான்.

கரவளைநாண் தழும்புமிக அழுந்தப் பெற்றுக்
 கவின்பொருந்திக் கொடைவழங்கும் சிறப்பைக் கொண்டு
திருவளரும் கோயிற்குத் திண்தாழ்க் காப்பாம்
 திருக்கரங்கள் காப்பளிக்கும் படைகள் தாங்க
அரவணையில் கண்வளரும் அரங்கத் தம்மான்
 அருகுறமுன் நம்பெருமா ளாகத் தோன்றி
உருவளரும் நாய்ச்சியார்கள் உடனாய் என்றன்
 உள்ளத்தும் அரங்கத்தும் உறைகின் றானே.

12. ரங்காஸ்தாநே ரஸிக மஹிதே ரஞ்ஜிதா சேஷசித்தே
 வித்வத்ஸேவா விமலமநஸா வேங்கடேசேந க்லுப்தம்.
அக்லேசேந ப்ரணிஹித தியா மாருஷேஷா ரவஸ்தாம்
 பக்திம் காடாம் திசது பகவத் த்யாந ஸோபாநமேதத்.

*இதன் கருத்து :*

*ஸ்ரீரங்கமாகிய இந்த திவ்ய தேசம், பகவதநுபவத்தில் சுவை மிகுந்தவர்களான பாகவதோத்தமர்களால் வாஸத்திற்கு உரியதெனப் போற்றப்பெற்றது. எல்லோருடைய உள்ளத்தையும் பெரிதும் மகிழ்விப்பது. இந்த க்ஷேத்திரத்தில் எழுந்தருளியுள்ள வித்வான்களை அடிபணிந்து மனத் தூய்மை பெற்றவரான ஸ்ரீமத் வேங்கட நாதார்யராலே இந்த பகவத் த்யான ஸோபானம் என்ற ஸ்தோத்திரம் இயற்றப் பெற்றது. இதைப் பாராயணம் செய்பவர்களுக்கு எம்பெருமானுடைய திருவடிகளில் உறுதியான பக்தி உண்டாகும். சிறந்த யோகிகளின் நிலையை எளிதாய் அடைய விரும்புமவர்கூட இதைப் படித்தால் அந்த நிலையைப் பெறுவதற்கு ஏற்ற பக்தியைப் பெற்றுப் படிப்படியாக அந்த யோக நிலையையும் பெறலாம்.*

*உற்றவர்கள் உளமகிழச் சுவைப்போர் போற்ற*
*ஒளிர்கின்ற ஸ்ரீரங்க நகரில் வாழும்*
*கற்றவர்கட் கடித்தொண்டு மிகவும் செய்து*
*கறையற்ற மனம்பெற்ற வேங்கடேசன்*
*சொற்பக வத்தியான சோபா னந்தான்*
*தூயபெரு யோகியரின் நிலையை எய்திப்*
*பற்றுகிற பற்றுடையோர்க் கெளிதில் ஏறும்*
*படியாகத் திடபக்தி நல்கும் அம்மா !*
*கவிதார்க்கிக ஸிம்ஹாய கல்யாண குணசாலினே*
*ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்த குரவே நம :*

*இந்த ஸ்தோத்திரம் மந்தாக்ராந்தம் என்ற வ்ருத்தத்தில் இயற்றப் பட்டதாகும்.*

*மங்களம்.*

*(ஸ்ரீ வேதாந்தாசார்யர் திருவடிகளே சரணம்)*



பதிப்பாசிரியர்
ஸ்ரீ வில்லிபுத்தூர் வித்வான்
**R. கண்ணன் சுவாமி**

வடமொழி வேதத்தையும் தமிழ்மறையாகிய திவ்ய பிரபந்தத்தையும் முறையே கற்றவர்.

முறைப்படி ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய நூல்களைக் காலட்சேபம் கேட்டவர்.

வட மொழி, தமிழ் இரண்டிலும் வித்வான் பட்டம் பெற்றவர்.

பதினோராண்டுகள் தமிழாசிரியராகப் பணியாற்றியவர்.

பாரததேசம் முழுதும் 25 ஆண்டுகளாக ராமாயணம், பாரதம், பாகவதம் முதலியவற்றையும், ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய நூல்களையும் காலட்சேபம் செய்து வருபவர்.

பதிப்பித்துள்ள நூல்கள்

யக்ஷப்ரச்னம், திருப்பாவை (ஈராயிரப்படி), ஆழ்வார்கள் வைபவம், அமலனாதிபிரான்.

---

பதிப்பிக்க இருக்கும் நூல்கள் :

ஸ்ரீ வரதராஜ ஐயங்கார் பாகவதம், வடிவழகிய நம்பிதாசர் இயற்றிய ஸ்ரீ ராமானுஜ வைபவம்.